15048 Valenza (AL) Italy
Tel. +39 0131 943181
Fax. +39 0131 943181
E-mail: ellea.di@tin.it
www.ellea-gioielli.com



| | Andrea Libralesso |
|---|---|
| er | Andrea Libralesso |
| | 10 |
| | Jewelry, polished and satined, in the three colours of gold, jewellery setting |
| | 21 Kt 18 Kt 14 kt |
| kets | Europe, South America |
| | Vicenza Oro 1 / 2 and Orogemma/ Vicenza (Jan. Jun. Sept.) Pad. A, Stand 317; ValenzaGioielli/ Valenza (Mar. Oct.), Stand 243; Basel 2004/Basel (Mar.), Halle 224, Stand 293 |

NFORMATION SEND A FAX TO: ELLEA +39 0131 943181

ZIP CODE

E-MAIL

IN MY CAPACITY AS A :

RETAILER ☐
WHOLESALER ☐
PRECIOUS STONES AND PEARLS DEALER ☐

I WISH TO RECEIVE INFORMATION ON THE FOLLOWING PRODUCTS

RINGS ☐ EARRINGS ☐ BRACELETS ☐ CHAINS ☐ ______ ☐

MADE OF GOLD:

21KT ☐ 18KT ☐ 14KT ☐

உ

வேலுமயிலுந்துணை

காசிமடாலயம் ஸ்ரீமத்

குமரகுருபர சுவாமிகள்

இயற்றியருளிய

வைத்தீசுவரன் கோயில்

# முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

காஞ்சி - மகாவித்வான்

இராமசாமி நாயுடு அவர்கள்

இயற்றிய உரையுடன்

சென்னை

வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

வெளியிட்டது

[ரிஜிஸ்தர் செய்தது] 1914 [இதன் விலை 6 அணா

கடவுள் துணை

# முத்துக்குமாரசுவாமி

## பிள்ளைத் தமிழ்

### மூலமும் உரையும்

---

விநாயக வணக்கம்.

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான் பொருப்பிற்
பிறந்து தவளப், பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே
தண்டத்தொர் போர்க்களிற் றைப்புணர்ந்து,

தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற் செழும்பிடி
பயந் தளித்த, சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றி
னிரு செஞ்சரணை யஞ்சலிப் பாம்.

மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள் வேழங் கடம்
படு படா, வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்க
முகை விண்டுதண் டேன்றுளிக்குங்.

கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக் குரிசிலைப்
பொருசிலைக் கைக், குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவு
மென் கொழிதமிழ்க் கவி தழையவே.

(இ - ள்.) மின்பூத்த-மின்கொடிபோன்ற. சிறு இடை - சிறிய இடையினையும். பேர் அமர் கண்-பெரிய போர்செய்கிற கண்களையு முடைய, கடவுள் வேழம் - தெய்வயானையானது. கடம்படு - குடம் போன்ற, படா-சாயாத. வெம் - விருப்பத்தைத்தருகிற, முலை கோடு கொண்டு-முலைக்கொம்பினால், உழுது உழுது-கிளைத்துக் கிளைத்து; உழக்க-அலைக்க; முகை விண்டு-மொட்டுவிரிந்து, தண் தேன் துளிக்கும்-

குளிர்ந்த தேனைத் துளிக்கின்ற. கொன்பூத்த-பெருமைபொருந்திய. தெரியல் கடம்பு அணி-கடப்பமலர் மாலையைத் தரித்த. கடம் புயம்-மலைபோலும் திருத்தோள்களையுடைய. குரிசிலை-பெருமையிற் சிறந்த வனை.பொரு-போர்புரிதற்குரிய. சிலை-வில்லைத்தாங்கிய.கை-திருக்கை யினையுடைய. குமரனை-குமரவேளை. கந்தபுரி முருகனை-கந்தபுரியில் வாழ்கின்ற முருகக்கடவுளை. பரவும்-துதிக்கின்ற.என்-எனது.கொழி தமிழ்க் கவி - வடித்த தமிழ்க்கவிகள். தழைய-செழிக்கும்பொருட்டு. பொன்பூத்த - அழகமைந்த. குடுமி-உச்சியாகிய. பொலம்குவடு-பொற் சிகரங்களையுடைய. வான்-மேலாகிய. இமப்பொருப்பில் பிறந்து-இம யமலையிற் பிறந்து. பொழி-சொரியப்பட்ட. தவள நிலவு தவழும்-வெண்ணிலவுதவழ்கின்ற. முழு-நிறைவாகிய. வெள்ளிவேதண்டத்து-வெள்ளிமலையிலுள்ள. ஓர்-ஒப்பற்ற. போர்களிற்றை புணர்ந்து-போர் யானையைக்கூடி. தென்பூத்த-அழகுபொருந்திய. பாட்டு அளி துதை ந்த-பாட்டுப்பாடுகின்ற வண்டுகள்மொய்த்த.பைகூந்தல்-பசிய கூந்தலை யுடைய. செழும்பிடி-செழிய பெண்யானையானது. பயந்து-ஈன்று. அளித்த-வளர்த்த. சிறுகண்-சிறியகண்களையும். பெருசெவி - பெரிய காதுகளையுமுடைய. குஞ்சரக்கன்றின்-யானைக்கன்றின். செம்-செம் மையாகிய. இரு சரணை-இரண்டு திருவடிகளை. அஞ்சலிப்பாம்-கை கூப்பி வணங்குவோம் (யாம்) எ-று.

யாதானுமோர் நூல்செய்யப் புகுவோர் மங்கலமொழி முதல் வகுத்துக்கோடன் மரபாதலால் இந்நூலாசிரியரும் பொன் என்னும் மங்கலமொழி முதல்வகுத்துக் கொள்வாராயினர். "பொன்பூத்த குடுமி" என்னுஞ் சொற்றொடர் முருகக்கடவுளது திருவருளால் அசரீரிவாயிலாகக் கிடைத்தது. பொன்பூத்த என்பதற்குப் பொன் னொலியன்ற என்றுரைப்பினுமாம். இது "பனிமா லிமயப், பொருப் பகஞ்சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமா யிருக்குமென் றிவ்வாறுரைக்குமன்றே விவ்விருநிலமே" "புள்ளி மால்வரை பொன்னெனநோக்கி" என்றற் றொடக்கத்தான்றோர் செய்யுட்களாலினிது விளங்கும். இமம்-பனி, அதனானிடையறாது மூடப்பட்டிருத்தலான் இதனை இமப்பொருப்பு என்பர். இதற்கு மேன்மையாவது கங்கை, பார்வதி யென்னும் பெண்க ளிருவரைப் பெற்று ... வெள்ளிமலை ... மலை

மலை. 'வெள்ளி வேதண்டத்தொர் போர்க்களிறு' என்றது சிவபிரானை. 'சிறுகட் பெருஞ்செவி' என்றது முரண்தொடை. 'குஞ்சரக்கன்று' என்றது மூத்தநாயனுரை. இருசரணுக்குச் செம்மையாவது அடைந்தாரைப் பிறவியளக்கர்க்கடத்தி முத்திக்கரையிலுய்ப்பது. கொன்பூத்த என்பதற்குப் பகைவருக் கச்சத்தை விளைக்கின்ற எனினுமாம். கொன்பூத்த நடம்புயம் என வியையும். செழும்பிடி என்றது உமாதேவியை. கந்தபுரி முருகனைப் பரவுமென் கொழிதமிழ்க் கவிதழைய, செழும்பிடி பயந்தளித்த குஞ்சரக்கன்றினிரு செஞ்சரணை யஞ்சலிப்பாம் எனமுடித்துக்கொள்க. அஞ்சலிப்பாம் என்னும் பயனிலைக்கு யாம் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. இதுபொது விநாயகவணக்கம். பின்னர்க் காப்புப்பருவத்துக் கூறப்படுவது தலவிநாயகவணக்கம் என்றுணர்க. தமிழ்க்கவி யென்பதற்குப் பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்தம் என்றலும் பொருந்தும்.

---

## க - காப்புப் பருவம்

### மகாவிஷ்ணு

---

பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட் புலோமசை வளர்த்த
 கும்பப், புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
 பொருப்பனை விருப்பனைத்துங்,

கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த குழகனைக் கழ
 கந் தொறுங், கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி
 முத்துக் குமாரனைத் தனிபுரக்க,

தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிக டிகிரிகிரி குல
 கிரியொடுந், திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற்
 றெண்டிரை முகட்டுதித்த,

பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும் பசுங்குதலை மழலை
 யஞ்சொற், பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டு
 வளர் பச்சைப் பசுங் கொண்டலே.

(இ - ள்.) தேம்மேவு-இடம் பொருந்திய. கடவுள்-தெய்வத்தன்மையமைந்த, பொலம்கிரி - அழகாகிய மந்தரமலையானது, திசைக்கரிகள் - அஷ்ட திக்கயங்களும், திகிரிகிரி - சக்ரவாள மலையும், குலகிரியொடும் - குலமலைகளோடும், திரிய - சுழல, திரித்து - சுழற்றி, மத்து எறிய - மத்தாகவீச, தடம் கடல் - பெரிய பாற்கடலின், தெள் திரைமுகட்டு - தெளிவாகிய அலைகளின்மேல், உதித்த - தோன்றிய, பாமேவு மதுரம் பழுத்து-பாக்களிற் பொருந்திய இனிமைமுதிர்ந்து, அமுதம் ஒழுகும்-அமிர்தம் போன்றொழுகாநின்ற, பசு குதலை-பசுங் குதலையாகிய, மழலையஞ்சொல் - மழலைச் சொற்களையுடைய, பங்கயச்செல்வி - தாமரை மலரை யாசனமாகவுடைய திருமகளது, இரு கொங்கை - இரண்டு ஸ்தநங்களாகிய, குவட்டு - மலைகளின்மேல், வளர் - தூங்குகிற, பச்சை பசுங்கொண்டல் - பச்சைப் பசுமேகமானது, பூமேவு - அழகுபொருந்திய, கற்பகப் பொங்கரில் - கற்பகச் சோலையில், செங்கண் - சிவந்த கண்களையுடைய, புலோமசை வளர்த்த -புலோமசையால் வளர்க்கப்பட்ட, கும்பம்-குடம்போன்ற, புணர் முலை - நெருங்கின ஸ்தநங்களையுடைய, களியானை-களிப்பையுடைய தெய்வயானையானது, விளையாடு - விளையாடுதற் கிடமாகிய, பன்னிருபொருப்பனை - பன்னிரண்டு (திருப்புய) மலைகளை யுடையவனை, விருப்பு அனைத்தும் - விருப்பமுழுதும், கோசாரல்மேவு - மலைச்சாரலில் வாழ்கின்ற, குறச்சிறுமி மேல்வைத்த- குறச்சிறுமியாகிய வள்ளி நாயகிமேல் வைத்த, குழகனை - கட்டழகனை, கழகந்தொறும் - இடந்தோறும், கொத்து - கூட்டமாகிய, முத்தமிழ் மொய்த்த - முத்தமிழ் நிறைந்த, கந்தபுரி - கந்தபுரியில் வாழ்கின்ற, முத்துக்குமாரனை-முத்துக் குமாரசாமியை, தனிபுரக்க - ஒப்பறக் காக்கக்கடவன். எ-று.

புலோமசை - இந்திராணி, புலோமன் என்பவன் மகளாதலால் இவட்கிப்பெயர் வழங்கும். புலோமன் தநு புத்திருள் ஒருவன், 'புலோமசை வளர்த்த களியானை விளையாடு' என்றதனுல், பன்னிரு பொருப்பு என்றதற்குப் பன்னிரண்டு புயமலைகளென் றுரைக்கப்பட்டது. முத்தமிழ்-இயல் இசை நாடகம் என்பன. பொலங்கிரியென்றுராயினும் குலகிரியொடுந் திரியத்திரித்து மத்தெறியத் தடங்கடற் றெண்டிரை முகட்டுதித்த பங்கயச்செல்வி என மேல்வருதலால் அழகிய மந்தரமலையென் றுரையுரைக்கப்பட்டது. மேகம் மலைமீது கண்

வளர்த லியல்பாதலால். 'பங்கயச்செல்வி யிருகொங்கைக் குவட்டு
வளர் பச்சைப் பசுங்கொண்டல்' என்றார். கும்பப்புணர் முலைக்களி
யானை யென்பதற்கு மத்தகத்தையும் நெருங்கின தனங்களையு
முடைய களியானை யென்றுரைத்தலுமாம். யானை விளையாட்டுக் குரி
யது பொருப்பென்பது தோன்ற, களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை என்றார். களியானை யாதலால் இதன் விளையாட்டுக்கு
ஒரு பொருப்பு அமையாதென்றற்குப் பன்னிரு பொருப்பனை யென்
றார். கிரிசரம், வநசரம், நதிசரம் என்னும் மூவகையானைகளுள் இது
கிரிசரம் எனப்படும். கிரிசரம் -மலைகளிலும், மலைச்சாரல்களிலும் சஞ்
சரிப்பது. வநசரம் காட்டிற் சஞ்சரிப்பது. நதிசரம் நதிதீரங்களிற் சஞ்
சரிப்பது. அகத்தியனார்க்குத் தமிழறிவுறுத்த பரமாசாரிய னாதலாலும்
தமிழ்வழங்குமிடத்திற்றனக்குப்பெருவேட்கை யாதலாலும், 'கொத்து
முத்தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்குமாரன்' என்றார். 'பங்கயச்
செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர் பச்சைப்பசுங்கொண்டல் கந்த
புரி முத்துக்குமாரனைத் தனிபுரக்க' எனமுடித்துக்கொள்க. பச்சைப்
பசுங்கொண்டல் உவமையாகு பெயர். பச்சை முழுமைப் பண்புப்
பொருட்டு, பச்சைப்பசும்பொய் என்பதிற்போல. இக்காப்புப் பரு
வத்தில் எல்லாத் தேவர்களையுந் துதித்தல் இயல்பாயினும் காத்தற்
றொழிலில் இன்றியமையாப் பெருஞ்சிறப்பின னாதனோக்கித் திரு
மால்துதி முதற்கட் கூறப்பட்டது.

---

## வைத்தியநாதர்.

வேறு.

ஒருபுறத்துமா கதமிமைப்பவொளிர் மாமேரு மற்றொரு
மேருவைச் சாய்த்தென, வுலகளக்கநிமிர் வடபொருப்
பையொரு தோளால் வளைத்தபி னாகியைத் திக்கன, லுமி
ழுமுக்குடுமி யயிறிரித்துவரு வாய்வான் மழுப்படை
வீரனைப் பார்த்தனொ, டெலுமற்றொழிலி னறவிளைத்து
மெதிரோடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்,

விரிகடற்புடவி முழுதுணர்ச்சமைய மோர்காலை கட்டுப்ர
[illegible]

காமாரி யைக்கவு மாரியைப் போற்றிரு, விழிமுனிர்க்கும்
வ்டி வழுகுடைக்கடவுள் பாமோகி னிக்குமணாளனைச்
சூக்கும, வெளியினிற்பாம நடநவிற்றுதிறல் வேளூர்
வயித்திய நாதனைப் போற்றுதும்,

குரவுசெச்சையொடு நறவுயிர்ப்பவிரி தேனாறு வட்டெழு
மார்பனைப்பேய்த்திரள், குரவையிட்டவுணர் தடிசுவைத்
திடவொர் கூர்வேல் விடுத்தகு மாரனைப் பார்ப்பதி, குமர
னைச்சமரி லுருமுகக்குளிறு காலாயு தக்கொடி யாளனைக்
கோட்டிய, குறுநகைக்குமன முருகவெற்பவர் தமானொடு
மற்பொரு தோளனைத் தாக்கிய,

திரண்மருப்பினமர் பொருதனிக்கடவுள் மால்யானை யைப்
புணர் காளையைச் சாற்றிய, செழுமறைப்பொருளி னுரை
விரித்துமெனும் வேதா முடித்தலை மோதுகைக் காய்ப்
பொடு, திருவடித்துணையின் முடிபதித்தவடு வாருத
மெய்ப்புகழாளியைப் பூட்டிய, சிறைவிடுத்தமரர் குறை
முடித்துதவு சேனாப திப்பெரு மாடனைக் காக்கவே.

(இ - ள்.) குரவு - குராமலர், செச்சையொடு-வெட்சி மலரோடு, நற உயிர்ப்ப - வாசனைவீச, விரி - விரிதலாலுண்டாகிய. தேன் ஆறு-தேன்யாறானது, உவட்டெழு-பெருகியோடுதற் கிடமாகிய. மார்பனை-திருமார்பை யுடையவனை, பேய்த்திரள் - அலகைக் கூட்டமானது, குரவையிட்டு - குரவைக் கூத்தாடி, அவுணர்-இராக்கதருடைய. தடி-தசையை, சுவைத்திட - சுவைக்கும்படி, ஓர் - ஒப்பற்ற, கூர்வேல் விடுத்த - கூரிய வேற்படையை யேவின, குமாரனை - குமாரக் கடவுளை, பார்ப்பதி குமரனை - பார்வதீ புத்திரனை. சமரில்-போர்க்களத்தில், உரும் உக - இடியேறுகள் சிந்தும்படி. குளிறு - சத்திக்கிற, காலாயுதம் - சேவலாகிய. கொடியாளனை - கொடியையுடையவனை, கோட்டிய குறுநகைக்கு - செய்த புன்சிரிப்புக்கு. மனம் உருக - மன முருகும்படி, வெற்பவர் மானொடு - குன்றவர் பெண்ணொடு, மல் பொருதோளனை - மற்போர் புரிந்த திருப்புயங்களை யுடையவனை, தாக்கிய - இடித்த. திரள்மருப்பின் - திரண்ட கொம்பினால். அமர் பொரு - போர்செய்த. தனி-ஒப்பற்ற. மால் - பெரிய. கடவுள்யானை

யை - தெய்வயானையை. புணர் - சேர்ந்த. காளையை - யவ்வந பருவ முடையவனை. சாற்றிய - சொல்லப்பட்ட. செழுமறைப்பொருளின்- செழிய வேதார்த்தத்தின். உரை - உரையை. விரித்தும் எனும்-விரித் துச் சொல்வோமென்ற. வேதா - பிரமனது. முடித்தலையில் - முடி யணிந்த சிரத்தின்மீது. மோது - குட்டின. கை காய்ப்போடு - கைத் தழும்பொடு, திருவடி துணையில்-இரண்டு திருவடியில். முடிபதித்த- முடியழுத்தின. வடு-தழும்பானது. ஆறுத - தணியாத. மெய் புகழா ளியை - உண்மையாகிய புகழையுடையவனை. பூட்டிய சிறைவிடுத்து- அடைக்கப்பட்ட சிறையினின்றும் விடுவித்து. அமரர் - தேவர்களு டைய. குறைமுடித்து உதவு -குறை தவிர்த்தருளின. சேனுபதிபெரு மாளை - சேனாபதியாகிய பெருமானை. காக்க - காக்கும் பொருட்டு, ஒருபுறத்து - ஒருபக்கத்தில். மரகதம் இமைப்ப-மரகதமணி விளங்க. ஒளிர் - பிரகாசிக்கிற. மாமேரு - மகா மேருமலையானது. மற்றொரு மேருவைச் சாய்த்தென-வேறொரு மேருமலையைச் சாய்த்தாற்போல. உலகு அளக்க - உலகங்களை யளக்கும் பொருட்டு. நிமிர் - நிமிர்ந்த. வடபொருப்பை - வடமலையை. ஒரு தோளால் வளைத்த - ஒப்பற்ற திருத்தோளால் வளைத்த. பினாகியை - பினாகத்தை யுடையவனை. தீ கனல் உமிழும்-தீக்கின்ற நெருப்பைக் கக்குகிற. முக்குடுமி-முத்தலை யையுடைய. அயில் - சூலத்தை. திரித்து வரு -சுழற்றிவருகிற. வாய் வாள் - வாயிலொளியுள்ள. மழுப்படை வீரனை - மழுவாயுதத்தை யுடைய வீரனை. பார்த்தனோடு - அருச்சுனனோடு. உடலும்- கோவித் தெதிர்ந்த. மல்தொழிலின் - மற்போரினால், அற இளைத்தும்-மிகமெ லிந்தும். எதிர் ஓடாது - அவனெதிரே யோடாமல். உடற்று-கோவித் தெதிர்க்க. கிராதனை - வேடனை. கூக்குரல்விரி - ஒலிமிகுத்த. கடல் புவிமுழுதும் - கடல் சூழ்ந்த வுலகமுழுதும். உண்ணசமையும் - உண்ண அமைந்த. ஓர் காளை - ஒருகாளை பெருதை. கட்டு - பிணி த்த. பிரதாபனை - மகிமையுள்ளவனை. கார்கடுவிடம் எடுத்து - கரிய கடுவிடத்தை யெடுத்து. அரிய - அருமையாகிய. திருமிடற்றில் இடு- திருமிடற்றி லடக்கிக்கொண்ட. காமாரியை - மன்மதசத்ருவை. கவு மாரியைப்போல் - பார்வதியைப்போல். திருவிழிமுன் நிற்கும்-திருக் கண்களுக்கெதிரே நிற்கின்ற ... ... ... கரிய

முள்ள, கடவுள் - தெய்வத்தன்மை யமைந்த, மா - பெருமை பொருந்திய, மோகினிக்கு மணாளனை - மோகினிக்கு நாயகனை. சூக்கும வெளியினில் - சூக்குமமாகிய சிதாகாயத்தில். பரமம் - மேன்மையாகிய, நடம்நவிற்று - நடனத்தைச் செய்கிற. திறல் - வெற்றியையுடைய, வேளூர் - வேளூரி லெழுந்தருளி யிருக்கிற. வயித்தியநாதனை - வைத்தியநாதன் என்னும் திருநாமத்தை யுடைய சிவபெருமானை. போற்றுதும் - போற்றுவோம் (யாம்) எ - று.

மரகதம் உவமையாகு பெயராய் உமாதேவியை யுணர்த்திற்று. வடபொருப்பு - மேருமலை. பிநாகி - பிநாகம் என்னும் வில்லையுடையவன். தீக்கனல் - எரித்தலையுடைய நெருப்பு எனினுமாம். 'புடவி முழுதுணச்சமைய மோர்காளை' என்றது திருமாலை. காமாரி(காமன் அரி.) காலில் முள்ளாகிய ஆயுதத்தையுடைய தாதலால் சேவலைக் காலாயுதம் என்றார் "காலாயுதத்தைய னென்றெனை யேசொலுங் காசினியே" "பதவா யுதக்கொடி வேடாதை" என்றார் பிறரும். 'வெற்பவர்தம்மான்' என்றது வள்ளிநாயகியாரை. இவரை மான் என்றது மான்வயிற்றிற் பிறந்தமைபற்றி யென்க. காளை - உவமையாகு பெயர். 'யானையைப்புணர் காளை' என்றது 'யானையெருத்தைப் பொலிய' என்றாற்போல நகைவிளைப்பதோர் சொற்றொடர். மறைப்பொருள் - பிரணவம். அமரர் - இறவாதவர். கற்பத்திலிறக்குந் தேவரை அமரர் என்றது மங்கலவழக்கு. சேநாபதிப் பெருமாட்டனைக் காக்க, வேளூர் வயித்தியநாதனைப் போற்றுதும். எனமுடிக்க.

---

## தையாறுயகி.

### வேறு.

குழைபடர்ந்துவடி கணைதுரந்துசெறி குமிழ்மறிந்தவிழி
நவ்வியைக் கோட்டொடு, குவடெறிந்தமுத கலசம்வென்
றதட முலைசுமந்தமலை வல்லியைச் சேர்த்தருளிர், குமுதம்
விண்டசுவை பழுதமுண்டினிய கொழுநர் கொஞ்சுசிறு
கிள்ளையைத் தாட்டுணைக், குறுகுதொண்டர்பிழை யறமறந்துபிறர் குணமிகழ்ந்தத கவில்லியைச் சேட்செலு,

மெழுபெரும்புவன முழுதொருங்குதவு மிறைவியென்று
மறை கையெடுத் தார்க்கவு, மிடைநுடங்குமட நடையி
ளங்குமரி யெனவிருந்தகன கள்வியைப் பூத்தவென்,
னிதயபுண்டரிக மலரிலெந்தையொடுமினிதமர்ந்தவொரு
செல்வியைப் பாற்றெருகு, மிருவர்கண்கள் கழுவரியசெஞ்
சுடரி னிடமருங்குடைய தையலைப் போற்றுதும்,

முழுதுணர்ந்து முணர் வரியதொன்றையொரு மொழியின்
விண்டசிறு பிள்ளையைச் சூர்ப்பெயர், முதுபழம்பகை
யை யறவெறிந்தவுணர் முதறடிந்ததனி வில்லியைப்
பாட்டளி, முரலவிண்டதரு நிழற்றொழும்புகுடி புக
வழங்குகொடை வள்ளலைப் போற்றடி, முடியுமின்றி
வெறு வெளிகடந்துமறை முடியினின்றநிறை செல்வ
னைக் காத்தொறும்,

மழலைவண்டுதட மலர்குடைந்துபுது மதுவருந்திநறு மல்
லிகைச் சேக்கையின், வடிபசுந்தமிழி னிசைபயின்ற
பெடை யொடுதுயின்றினிய செவ்வழிப்பாட்டினை, வரு
விபஞ்சிபயி றருமதங்கர்தெரு மாமுரன்றுநெடு வைக
றைப் போய்ச்செழு, மலரிலஞ்சிதொறு முலவுகந்தபுரி
மருவுகந்தனையெம் மையனைக் காக்கவே.

(இ - ள்.) முழுது உணர்ந்தும் - முற்றுமறிந்தும். உணர்வு அரி
யது ஒன்றை - அறிதற்கரிதாகிய வொருபொருளை. ஒரு மொழியின்
விண்ட - ஒரு சொல்லாற் சொல்லிய. சிறுபிள்ளையை-சிறியசேயை.
சூர்பெயர் - சூரனென்னும் பெயரையுடைய. முதுபழம் பகையை -
முதுமையாகிய பழம்பகைவனை. அற எறிந்து -முடியும்படிகொன்று.
அவுணர் - இராக்கதருடைய. முதல் தடிந்த - வேரைக்களைந்த. தனி
வில்லியை - ஒப்பற்ற வில்லாளியை. பாட்டு அளி முரல-பாடல்களை
வண்டுகள்பாட. விண்ட - மலர்ந்த. தருநிழல் - தருநிழலில். தொ
ழும்பு - தொண்டர். குடிபுக - குடியேற. வழங்கு - வழங்கின. கொ
டைவள்ளலை - கொடையையுடைய வள்ளலை. போற்ற - யாவரும்
வழிபடுதற்குரிய. அடிமுடியும் இன்றி - ஆதியுமந்தமு மில்லாமல்.
வெறுவெளி கடந்து - வெட்டவெளியைத் தாண்டி. மறைமுடியில் -

வேதாந்தத்தில், நின்றுநிறை - நிறைந்து நின்ற, செல்வனை - ஐசுவரியத்தை யுடையவனை, காதொறும் - சோலை தோறும், மழலை வண்டு - இளவண்டுகள், தடம்மலர் குடைந்து - தடாகமலர்களைத் தோண்டி, புதுமது அருந்தி-புதியதேனையுண்டு, நறுமல்லிகைச் சேக்கையின்- நறியமல்லிகைமலர்ப் பள்ளியில், வடிபசுந்தமிழின்-வடித்த பசுந் தமிழின், இசைபயின்ற - இசையைப்பழகின, பெடையொடு துயின்று - பெடை வண்டுகளோடு தூங்கி, இனிய செவ்வழிப்பாட்டினை - இனிதாகிய செவ்வழிப் பண்ணை, வரு-வளர்கின்ற, விபஞ்சி-வீணைவாசித்தலை, பயில்தரு-பழகின, மதங்கர்-மதங்கரும், தெருமர-மயங்கும்படி, முரன்று - பாடி, நெடு வைகறைபோய் - நீண்டவைகறையி லெழுந்து சென்று, செழுமலர் - செழிய மலர்களையுடைய, இலஞ்சிதொறும் உலவு - குளந்தோறும் உலாவுகிற, கந்தபுரி மருவு-கந்தபுரியில் வாழ்கின்ற, கந்தனை - கந்தவேளை, எம்ஐயனை- எமதிறைவனை, காக்க - காக்கும்பொருட்டு, குழை அடர்ந்து -குழையை நெருங்கி, வடிகணை துரந்து-வடித்த அம்பைத்துரத்தி, செறிகுமிழ்மறிந்த-நெருங்கின குமிழம்பூவைத் தடுத்த, விழி - கண்களையுடைய, நவ்வியை - பெண்மானை, கோட்டொடு - யானைக் கொம்புகளுடன், குவடு எறிந்து - மலைகளைவென்று, அமுதகலசம் வென்ற - அமிர்த குடங்களை வென்ற, தடமுலைசுமந்த - பெரியதனங்களைத் தாங்கிய, மலைவல்லியை - மலையரையன் பெண்ணை, சேற்று- சேற்றில், ஒளிர்-விளங்குகின்ற, குமுதம்விண்ட-செவ்வல்லி மலர்ந்த, சுவை அமுதம் உண்டு - சுவையுள்ள தேனையுண்டு, இனிய -இனிதாகிய, கொழுநர்-கணவர், கொஞ்சு - கொஞ்சுகிற, சிறுகிள்ளையை - இளங்கிளியை, தாள்துணை - திருவடித்துணையை, குறுகு - அடைந்த, தொண்டர்-அடியார்களுடைய, பிழை-குற்றங்களை, அறமறந்து-முற்றும் மறந்து, பிறர்குணம் - பிறருடைய குணங்களை, இகழ்ந்த - அவமதித்த, தகவு இல்லியை - தகுதியில்லாதவளை, சேண்செல்லும் - தூரத்தேயுள்ள, எழுபெரும் புவனம் - ஏழென்கிற பெரியவுலகங்கள், முழுது ஒருங்கு உதவும் - முற்றும் ஒருங்கேயீன்ற, இறைவியென்று -தலைவியென்று, மறை - வேதங்கள், கையெடுத்து ஆர்க்கவும்-கைகூப்பி வாழ்த்தவும், இடைநடங்கும் - இடை துவள நின்ற, மடநடை - மந்தகதியை

யுடைய. இளங்குமரியென இருந்த-இளங்குமரி யென்று சொல்லும் படியிருந்த. கனகள்வியை - பெரியகள்வியை. பூத்த - மலர்ந்த. என் இதய புண்டரிகமலரில் - எனதிதய தாமரைமலரில். எந்தையொடும்- எமது தந்தையாகிய சிவபிரானோடும். இனிது அமர்ந்த - இனிதா யமர்ந்திருக்கிற. ஒரு செல்வியை - ஒப்பற்ற செல்வியை. பால்தொகும் - இருபுறத்துஞ் சேர்ந்திருக்கிற. இருவர் - பிரமவிஷ்ணுக்களாகிய இருவருடைய, கண்கள் - கண்களால், கதுவு அரிய - பற்றப் படுத லருமையாகிய, செஞ்சுடரின் - செவ்வொளியாகிய சிவபெருமானது, இடமருங்கு உடைய - இடப்பாகத்தைபுடைய. தையலை - தையனாயகியை, போற்றுதும் - வழிபடுவோம் (யாம்) எ-று.

குழை - காதணி. வடிகணை - வினைத்தொகை நிலைத்தொடர். குமிழ் -முதலாகுபெயர். கொழுநர் என்றது சிவபிரானை. நகவு-நடுவு நிலைமை. ஒருசெல்வி - எல்லாவுலகங்களையும் அவற்றிலுள்ள எல்லாவுயிர்களையும் தன்னவாக்கிக் கொண்டிருக்கும் பெருஞ் செல்வத்தை யுடையவள். தையல்-கைபுனையப் பட்டவள். 'முழுதுணர்ந்து முணர்வரியதொன்று' என்றது 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' என்றாற் போல்வது. ஒருமொழி - பிரணவம். தொழும்பு - பண்பாகு பெயராய்த் தேவரையும் அடியாரையுங் குறித்தது. இவர் குடிபுகவென்றதனால் முறையே தாம்இழந்த விண்ணாட்டை மீட்டும் பெறவெனவும் இந்திரபதம் பெறவெனவும் பொருளுரைத்துக் கொள்க. வள்ளல்- பரமோதாரன் (பெருங்கொடையாளி). இலஞ்சி-மடுவெனினுமாம். தையனாயகி — பெண்ணரசி. ஆசிரியர் அம்மையாரது கண்ணழகில் வீடுபட்டவ ரென்பதை, 'குழையடர்ந்து வடிகணை துரந்து செறிகுமிழ் மறிந்தவிழி' என்னுஞ் சொற்றொடரே புலப்படுத்தா நின்றது. குமுதம்-செவ்வல்லி. இது இதன் மலரையுணர்த்தினமையால் முதலாகு பெயராகவும், மலர் அதரத்தை யுணர்த்தினமையால் உவமையாகு பெயராகவுங் கொள்ளக் கிடத்தலால் இருமடியாகுபெயர். கிள்ளை உவமையாகுபெயர். எல்லார்க்குமொப்பரில்லாது அடியார்க்கும் அல்லார்க்கும் முறையே புலப்படலும் புலப்படாமையு முடைமையின், 'கனகள்வி' என்றார். கதுவல்- பற்றுதல். செஞ்சுடர் - சூரியனுக்கும் அக்கினிக்கும் பெயராதலால் சூரியன்போலொளிவிடுவோனென்றும்

நெருப்புருவாய் நிமிர்ந்தோ னென்றும் பொருளுரைத்துக் கொள்க. மதங்கர் என்பதனீற்றிலுயர்வு சிறப்பும்மை தொக்கது. 'காத்தொறும் மழலைவண்டு தடமலர் குடைந்து புதுமதுவருந்தி நறுமல்லிகைச் சேக்கையின் வடிபசுந்தமிழி னிசைபயின்ற பெடையொடு துயின் றினிய செவ்வழிப்பாட்டினை வருவிபஞ்சிபயிறரு மதங்கர் தெருமர முயன்று நெடுவைகறைப்போய்ச் செழுமல ரிலஞ்சிதொறு முலவு கந்தபுரி மருவுகந்தன்' என்றது ' இருஞ்சேற் றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த, முட்டாட்டா மரைத்துஞ்சி வைகறைக், கட்கமழ்நெய்த லூதி யெற்படக், கண்போன் மலர்ந்த காமர்சுனைமலர், அஞ்சிறை வண்டி னரிக்கணமொலிக்குங், குன்றமர்ந் துறைதலு முரியன்' என் றாற்போல்வது. தம்போல்வாரையு முளப்படுத்தற்கு, 'எம்மையன்' என்றார். 'கந்தபுரி மருவுகந்தனை யெம்மையனைக்காக்க, பாற்றருகும். இருவர் கண்கள் கதுவரிய செஞ்சுடரினிட மருங்குடைய தையலைப் போற்றுதும்' எனமுடிக்க.

---

## கற்பக விநாயகர்

வேறு.

கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
　　கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவொர்
படாமணி மத்தகந் தந்தியைத் தீர்த்தர்கள்
　　பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாது பொருப்பினிற் றுன்றுபுத் தேட்கெதிர்
　　மனோலய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைக் சங்கம்வைத் தாற்றிய
　　சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே.

(இ - ள்.) வடாது பொருப்பினில் -வடமலையில், துன்று-எழுந் தருளிய, புத்தேட்கு எதிர்- சிவபிரானுக்கெதிரே, மனோலயம் உற்ற- மனோநாசத்தை யடைதற் கேதுவாகிய, மெய்ப்பண்பினை - உண்மை நிலையை, காட்டிய - அறிவித்த, சடானனனை - அறுமுகனை, தலைச் சங்கம்வைத்து ஆற்றிய - முதற்சங்கத்தைத் தாபித்து நிர்வகிக்க.

சடாயுபாத்து - சடாயபுரத்தி லெழுந்தருளி யிருக்கிற. அருள்-அருட் பெருக்கையுடைய. கந்தனை - கந்தவேளை. காக்க-காக்கும்பொருட்டு. கடாம் உமிழ் - மதநீரையுமிழ்கின்ற. கை - துதிக்கையினையும், கதம்-கோவத்தினையும். கிம்புரி-பூணணிந்த. கோடு-கொம்பினையு முடைய. ஒருகர அசலம் - ஒரு கைம்மலையானது. இட்ட - கொடுத்த. மெய் கஞ்சுகிக்கு ஏற்ப - சரீரசட்டைக்கேற்க. ஓர்படாம் அணி - ஒப்பற்ற முகபடா மணிந்த. மத்தகம் - மத்தகத்தையுடைய. தந்தியை - யானையை. தீர்த்தர்கள் - பரிசுத்தான்மாக்கள். பராவு - வழிபடற் குரிய. அரு - அருமையாகிய. கற்பகக்கன்றினை - கற்பகவிநாயகரை. போற்றுதும் - வழிபடுவோம் (யாம்) எ-று.

வடாது பொருப்பு - மேருமலை. புத்தேள் - தேவன். மனேலய முற்ற மெய்ப்பண்பு - பிரணவார்த்தோபதேசம். சடாயு பூசித்துய்ந்த தலமாதலால் இதற்குச் சடாயுபுரமெனப் பெயர்வாய்த்தது. கைம்மலை - யானை. இது கயாசுரனைக்குறித்தது. கஞ்சுகம்-சட்டை. (போர்வை). தீர்த்தர்கள் - தேவர்கள் எனினுமாம். கற்பகக்கன்று என்பது இத்தலத்தி லெழுந்தருளிய கற்பகவிநாயகரை யுணர்த்திற்று. 'சடாயு புரத்தருட் கந்தனைக்காக்க. கற்பகக் கன்றினைப் போற்றுதும்' என முடித்துக்கொள்க.

---

## திருமகள்

### வேறு.

மானிறக் கடவுடிரு மறுமார்பி னறவிரி வனத்துழாய்க்காடு மூடி, மாயிருள் வழங்குதன் றிருமாளிகைக் கந்தண் மணிவிளக் கிட்டு முட்டாட்,

கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க் கதவந்திறந் தளித்துங், காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த கன்னிகையை யஞ்ச லிப்பாம்,

மீனிறப் புனரியை விழுங்குங் கடற்றானை வெள்ளமொடு கள்ள மனமும், மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங் குல் விடியக் கடுங் குரல்விடுந்,

நிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண் சிறைமயிற் பரி நடாத்துஞ், சேவகப் பெருமானை வேதபுரி வருமிளஞ் சேயைப் புரக்க வென்றே.

(இ - ள்.) மீன்நிறம் புணரியை - மீன்மயமாகிய கடலை. விழுங்கும் - அடக்குகிற. கடல் - வேறொரு கடல்போன்ற, தானைவெள்ளமொடு - சேனைப்பெருக்கோடு. கள்ளம் - வஞ்சகத்தோடுகூடிய. மனமும்-தமதுமனமும். மெய்யும் —உடம்பும். இருள - இருண்டிருக்க. திரளும் - திரண்டுவருகிற. அவுணர் - இராக்கதராகிய. கருகங்குல் விடிய - கரிய இரவானது விடியும்படி. கடுங்குரல்விடும் - கடுங்குரலெடுத்துக்கூவுகிற. தீநிறம்குடுமி - நெருப்பு நிறமாகிய உச்சிக்கொண்டையையுடைய. வெண்சேவலை - வெள்ளைச்சேவலை. உயர்த்து-உயரவெடுத்து. வண்சிறை - வளவிய சிறைகளையுடைய. மயில்பரி நடாத்தும்- மயில்வாகனத்தைச் செலுத்துகிற. சேவகப்பெருமானை-வீரனாகிய பெருமானை. வேதபுரிவரும் – வேதபுரியில் எழுந்தருளின. இளஞ்சேயை - இளஞ்சேயினை. புரக்கவென்று-காக்கவென்று. மால் நிறம் - மேகநிறத்தையுடைய. கடவுள் - தெய்வத்தின். திருமறுமார்பில் - அழகிய மறுவமைந்த மார்பின்கண். நறவிரி - வாசனையோடு மலர்கின்ற. வனம்துழாய்க் காடுமூடி -அழகாகிய துளவக்காட்டினால் மூடப்பெற்று. மா இருள்வழங்கு - பேரிருளடர்ந்த. தன் திருமாளிகைக்கு - தனது திருமாளிகைக்கு. அம்தண்-அழகும் தட்பமுமுள்ள. மணிவிளக்கு இட்டு - மணிவிளக்கேற்றியும். முள்தாள் – முள்ளோடு கூடிய நாளத்தையுடையதாய், கான் நிறைக்கும் - வாசனையை நிரப்புகிற, கமலம் வீட்டுக்கு - தாமரைமலராகிய வீட்டுக்கு. நெடு இதழ் கதவம் - நீண்ட இதழ்களாகிய கதவை. திறந்து அளித்தும்-திறந்து கொடுத்தும், காதன்மைகாட்டும் - தனது அன்புடைமையைக் காட்டுகிற. கவுத்துவத்துடன் வந்த - கௌஸ்துபமணியோடு தோன்றின. கன்னிகையை – திருமகளை. அஞ்சலிப்பாம் – கைகூப்பி வணங்குவோம் (யாம்) எ-று.

மால் - மேகம், மாணிறக்கடவுள் - கொண்டல் வண்ணனாகிய திருமால். மறு - உத்தமலக்ஷணமாகிய வோர் மறு. இது திருமாலின்

மார்பிலிருப்பது, இதனை ஸ்ரீ வத்ஸம் என்பர் வடநூலார். மணிவிள க்கு - ரத்நதீபம், இதுகௌஸ்துப மணியைக்குறித்தது. கவுத்துவத் துடன் வந்த கன்னிகை யென்பது ஒருசொன்னீரது. காட்டும் என் னும் பெயரெச்சம் இவ்வொரு சொன்னீர்ப் பெயரைக்கொண்டு முடிந்தது. இது திருமகளை யுணர்த்திற்று. கவுத்துவத்துடன் வந்த கன்னிகை யென்றமையானே கவுத்துவத் தோற்றம் முன்னென்ப தூம்திருமகடோற்றம் பின்னென்பதும் பெறப்பட்டன. மீனிறப் புணரியைவிழுங்குங்கடற்றுனை வெள்ளம் என்றமையான்.சேனையின் மிகுதிபெறப்பட்டது. குரல்விடுதல்- கூவுதல், கோழிகூவுதல் விடிவுக் குறியாதலால், 'அவுணக்கருங் கங்குல்விடியக் கடுங்குரல்விடேந்தி றக் குடுமி வெண்சேவல்' என்றார். உயர்த்தல் - கொடியாக எடுத்தல். நெடுங்காலம் விடியாதிருந்த தென்றற்கு, அவுணக்கருங்கங்குல்விடிய என்றார். 'வேதபுரிவருமிளஞ் சேயை புரக்கவென்று கவுத்துவத்து டன் வந்த கன்னிகையை யஞ்சலிப்பாம்' என முடித்துக்கொள்க.

---

## கலைமகள்

துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துகன் சுவைநிறஞ்
சிதைவுறாமே, தொன்மறை கனிந்தூறு மன்பனீ ரூறலிற்
றாத்துகி னனைப்புறாமே,

நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டேமது நன்
னெஞ் செனக் குடிபுகு, ஞானப் பிராட்டியைச் சொற்
கடற் றெள்ளமுதை நாத்தழும் பத்துதிப்பாம்,

சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந் திர்த்தந்
திளைத்தாடிய, செஞ்சுடர்க் கடவுளும் வெண் சுடர்க்
கடவுளிற் றெள்ளமுத மயமாகலா,

னுறைபட்ட சுதைநிலவொ டிளவெயிலு மளவளாயுண்ணச்
சகோரம் வெஃகு, மோங்கெயிற் பரிதிபுரி முருகனைச்
சண்முகத் தொருவனைக் காக்கவென்றே.

(இ - ள்.) சிறைபட்ட - சிறைசெய்யப்பட்ட. தண்துறை-குளிர் ந்த துறையையுடைய. சித்தாமிர்தம் -சித்தாமிர்தம் என்னும் பெயரை

புடைய. பெருநீர்த்தம்-பெரியதீர்த்தத்தில். திளைத்தாடிய -மூழ்கின. செஞ்சுடர் கடவுளும் - சூரியனும், வெண்சுடர்க் கடவுளும் - சந்திரனும். தெள் அமுதமயம் ஆகலான் - தெளிவாகிய அமிர்தவுருவாதலால். உறைபட்ட - துளித்தலைப் பொருந்திய. சுதை நிலவொடு - அமுதகிரணத்தோடு. இளவெயிலும் அளவளாய் - இளவெயிலுங்கலந்து. சகோரம் - சகோரப்புட்கள். உண்ணவெஃகும் - உண்ணவிரும்புகிற. ஓங்கு எயில் - உயர்ந்த மதிலையுடைய. பரிதிபுரி - பரிதிபுரியிலெழுந்தருளிய. முருகனை - முருகவேளை. சண்முகத்து ஒருவனை—ஆறு திருமுகங்களை யுடைய ஒப்பற்றவனை. காக்கவென்று - காக்கவேண்டு மென்று. துறைபட்ட - பலதுறைகள் பொருந்திய, மறையவன் - வேதங்களை யுடையவனாகிய பிரமனது. செந்நாபடிந்து - சிவந்த நாவிற்படிந்து, தன் - தனது, சுதைநிறம் - வெண்ணிறம். சிதைவு உறாமே - அழியாமலும். தொல்மறை - பழமையாகிய வேதங்கள். கனிந்து ஊறும் - முதிர்ந்து சுரக்கிற, மன் - மிகுதியாகிய, பல்நீர் ஊறலின் -பல் நீர் சுரத்தலால். தூ துகில்-வெள்ளாடை, நனைப்பு உறாமே - நனைவையடையாமலும், நறைபட்ட - வாசனைபொருந்திய. வெள்தோட்டு - வெள்ளிதழ்களை யுடைய. நளினம் பொகுட்டு - தாமரைப்பொகுட்டில். எமது நல்நெஞ்சு என - எமது நன்மனத்திற் போல. குடிபுகும் - குடிபுகாநின்ற. ஞானப்பிராட்டியை - ஞானநாயகியை, சொல்கடல் - கலைக்கடலிற் றோன்றிய. தெள்அமுதை-தெளிவாகிய அமிர்தத்தை. நா தழும்ப - நாவில் தழும்பேறும்படி, துதிப்பாம் - தோத்திரம்பண்ணுவோம் (யாம்) எ - று.

துறை - பலபொருட்டுறைகள். அவை அறமுதலாயின. பட்ட- மறையினை விசேடித்த பெயரெச்சம். செந்நா - செவ்வியநா, (நடுவு நிலை நிலைபெற்றநா), மன்பனீர் என்பதற்குத் தன் கணவனாகிய பிரமனதுபல்லினீர் என்றுரைப்பினுமாம். வெண்டோட்டு நளிநம்-வெண்டாமரைமலர். பொகுட்டு - கொட்டை, இதனைக்கர்ணிகை யென்பர் வடநூலார். பிராட்டி - உபகாரகுண முள்ளவள். இதற்கு ஆண்பாற் பெயர் பிரான். திருமகளைப் பாற்கடற் றெள்ளமுது என்றல்போல இவளைச் சொற்கடற் றெள்ளமுது என்றார். மிகுதியாய்த் துதிப்போமென்றற்கு நாத்தழும்பத்துதிப்பாம் என்றார். சூரியன் வழிபட்டுய்ந்த

தலமாதலால் இதற்கு பரிதிபுரியென்னும் பெயர் வழங்கும். சகோரம் - நிலாமுகிப்புள். இது சந்திரகிரணத்தையே யுண்டுயிர் வாழ்வது. 'சண்முகத் தொருவனைக் காக்கவென்று சொற் கடற் றெள்ளமுதை நாத்தழும்பத் துதிப்பாம்' என முடித்துக் கொள்க. (௬)

## பிரமன்.

### வேறு.

பைங்காய்க் கமுகு செம்பழுக்காய்ப் பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல், பனிமுத் துகுக்குஞ் சோணாட்டின் பரிசுபாடி ஞிமிறிரப்பக்,

கொங்கார்த் திறைக்கு நறைக்சாந்தள் குறிஞ்சி மலரோ டணிந்தநறுங், குஞ்சிப் பெருமாள் வேதபுரி குமரப் பெருமாட்டனைக் காக்க,

செங்காற் கருங்கட் பைந்தொடியார் சிற்றுய்ப் பாடிப் பெருங்குடியிற், றீம்பா றிருடிக் கட்டுண்டுதிரியா வண்ணந் திருத்தாதைக்,

கங்காப் படங்கப் பாறயிர்நெ யருந்தேன் கடலோடிருந் துண்ண, வகிலம் படைத்துத் தனக்கேற வன்னம் படைத்த பெருமாளே.

(இ - ள்.) செங்கால்-செவந்த காலையும், கருங்கண்-கரிய கண்ணினையும், பைந்தொடியார்-பசிய வளையலையுமுடைய ஆய்ச்சிறுமியர் வாழ்கின்ற, சிறு ஆய்ப்பாடி-சிறிய ஆய்ப்பாடியிலுள்ள, பெருங்குடியில்-பெருங்குடியிலே, தீபால்திருடி - இனிமைபாகிய பாலைத் திருடி, கட்டுண்டு - கட்டுப்பட்டு, திரியாவண்ணம் - திரியாதபடி, திருத்தாதைக்கு - தன் திருத்தந்தையார்க்கு, அங்காப்பு அடங்க-வாய்திறத்த லில்லையாக, பால் தயிர் நெய் அருதேன் - பால் தயிர் நெய் அரியதேன், (என்பவற்றை) கடலோடு - கடலுடனே, இருந்து உண்ண - இருந்துண்ணும்படி, அகிலம் படைத்து - உலகத்

தைச் சிருட்டிசெய்து, தனக்கு ஏற - தனக்கேறும் பொருட்டு, அன்னம் படைத்த - அன்னத்தைப் படைத்துக்கொண்ட, பெருமாள் - பெருமையை யுடையவனுகிய பிரமன், பைகாய் கமுகு- பசுங்காயையுடைய கமுகங்கள், செம்பழுக்காய்-செவந்த பழுத்த காய்களாகிய, பவளம் உதிர்ப்ப - பவளங்களை யுதிர்க்க, கதிர் செந்நெல் - செந்நெற் கதிர்கள், பனிமுத்து உகுக்கும் - குளிர்ச்சியாகிய முத்துக்களைச் சிந்துகிற, சோணாட்டின் - சோழநாட்டினது, பரிசுபாடி - பெருந்தன்மையை யெடுத்துப் பாடி, ஞிமிறு இரப்ப - பொன்வண்டுகள் யாசிக்க, கொங்கு ஆர்ந்து இறைக்கும் - தேன் நிறைத்து இறைக்கிற, நறை - வாசனையுள்ள, காந்தள் - காந்தள் மலர்களை, குறிஞ்சிமலரோடு - குறிஞ்சி மலர்களுடனே, அணிந்த - தரித்துக்கொண்ட, குஞ்சி - ஆண்மயிரையுடைய, பெருமாள் - பெருமாளும், வேதபுரி - வேதபுரியில் வாழ்கின்ற, குமரப்பெருமாள்தனை - குமரப்பெருமாளுமாகிய முருகனை, காக்க - காக்கக்கடவன் எ-று.

செந்நெற்கதிரில் முத்துண்டாத லியல்பாதலால் கதிர்ச செந்நெல் பனி முத்துதிர்க்கும் என்றார். செந்நெற்கதிரில் முத்துண்டாதலை, "தந்திவராக மருப்பிப்பி பூகந் தனிக்கதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்குநளின மின்னார், கந்தரஞ்சா லிகழை கன்னலாவின்பல் கட்செவிகார், இந்துவுடும்புகரா முத்தமீனுமிருபதுமே" "கயல்கொக் குடும்பின் சிரசுகளுங் கரிக்கோ டேனமுடக்கோடுங், கழையுங் கரும்புங் கமுகினமுங் கதலிசாலி கடிக்கமலம், புயனத் தாதிதரு முத்தம்புனலிற் கனலிற் புடவியினிற், பொன்றும் பொதியிற் கேழொளிபோம் பொருந்தும் விலையுண்டவை வேண்டேம், இயல்புற்றென்று மழிவிலதா யென்றும் புதுமைதரு மொளியா, யெவர்க்கு மதிக்க வரிதாகியிருந்து மிகுந்த மதுரமெலாம், முயல்வுற்றளிக்கு நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே, முகுந்தன்மருகா சமரபுரிமுருகா முத்தந் தருகவே" என்றற் றொடக்கத்துச் செய்யுட்களானுணர்க. கமுகு பவளத்தையும் செந்நெல் முத்தினையும் உதிர்த்தலும் உகுத்தலுஞ் செய்யுமாயின் அந்நாட்டிலுள்ள மாந்தரது ஔதாரியஞ் சொல்லவேண்டாதாயிற்று. ஆதலால், "சோணாட்டின் பரிசுபாடி ஞிமிறிரப்ப"

என்ருர். ஸ்ரீ மிறு சோனுட்டின் பரிசுபாடி யென்றமையால் புலவர் பாடுதல்சொல்லாதே யமையும். குறிஞ்சிமலர் - மருதோன்றி மலர். குஞ்சி-சிகை. வேதங்கள் பூசித்த தலமாதலால் வேதபுரி யென வழங்கும். நீம்பால் என்பதில் தீ சாரியை. திருத்தாதை யென்றது திருமாலை. ஓடு இசைநிறையாகக் கொண்டு பாற்கடல் முதலியவற்றையென் றுரைத்தலுமாம், அகிலம் எல்லாம் என்றலு மொன்று. தோன்றி யழிதன் மாலைத்தாகிய வுலகத்தை அகிலம் என்றது மங்கலவழக்கு. அன்னம்-சோறு. தந்தைக்குப் பருகு வன வளித்துத் தனக்குண்பதை யமைத்துக்கொண்டான் என்ன பாவம். அகிலம் படைத்த பெருமாள் குமரப்பெருமாடனைக் காக்க என முடித்துக்கொள்க. (எ)

## தேவேந்திரன்.

### வேறு.

கானாறு சற்பகக் காவுமூ வுலகுமக் காவென நிழற்றுமொற் றைக், கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவுமுள காணியுங் காணியாக,

வானாறு கோட்டிமய மலைவயிறு வாய்த்தமலை மகளுக்கு மணமகற்கு, மருமகளை யுரியதன் றிருமகளெனப்பெற்ற மாமடிகளைத் துதிப்பாம்,

பானாறு செங்நெற் பசுங்கதிர் கறித்துமென் பைங்குவளை வாய்குதட்டும், பணைமருப் பெருமைமடி மடிமடை திறந்தநீம் பாலாறு பங்கயச்செந்,

தேனாறு டன்கடவுள் வானாறெனப்பெருகு சித்தாமிர்தஞ் சிவபிரான், சீர்த்திப்ர தாபநிகர் ஜினகர புரித்தேவ தேவனைக் காக்கவென்றே.

(இ - ள்.) பால்நாறு - பால் பிடித்த, செந்நெல் - செந்நெல் லின், பசுங்கதிர் கறித்து - பசிய கதிர்களைக் கறித்து, மெல்-மிரு துவாகிய, பைகுவளை - பசிய குவளைமலர்களை, வாய்குதட்டும்- வாயினால் மெல்லுகிற, பணைமருப்பு-பருத்த கொம்புகளையுடைய, எருமை - எருமைகள், மடிமடி மடைதிறந்த - தமது மடிகளாகிய

மடுக்களைத் திறந்ததனாலுண்டாகிய, தீபால் ஆறு - இனிய பால்யாறுனது, பங்கயச் செந்தேன் ஆறுடன் - தாமரை மலர்களினின்றும் பெருகுகிற செந்தேனாறுகளோடு, கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, வான் ஆறு என பெருகு - ஆகாய கங்கைபோலப் பெருகுகிற, சித்தாமிர்தம் - சித்தாமிர்த தீர்த்தமானது, சிவபிரான் - சிவபெருமானது, கீர்த்திப் பிரதாபம் நிகர் - கீர்த்திப் பிரதாபத்தை நிகர்த்த, தினகரபுரி - தினகரபுரியிலுள்ள, தேவதேவனை-தேவதேவனாகிய கந்தவேளை, காக்கவென்று - காக்கவேண்டுமென்று, கான்நாறு - வாசனை வீசுகிற, கற்பகக் காவும் - கற்பகச்சோலையும், மூவுலகும் - மூன்றுலகங்களும், அ - அந்த, கா என - கற்பகச் சோலைபோல, நிழற்றும் - நிழலைச் செய்கிற, ஒற்றைக் கவிகையும்-தனியாகிய கொற்றக்குடையும், குணதிசைக் காவலும் - கீழ்த்திசைக் காவலும், பிறவும் உள்ள - பிறவுமாயுள்ள, காணியும் - இடமும், காணி ஆக - காணியாட்சியாக, வான் நாறு-ஆகாயத்தையளாவுகிற, கோடு - சிகரங்களையுடைய, இமயமலை வயிறுவாய்த்த-இமயமலையிற் பிறந்த, தலைமகளுக்கும் - மூத்தமகளுக்கும், மணமகற்கும் - அவளது கணவனுக்கும், மருமகளை - மருமகளாகிய தெய்வயானையை, உரிய - உரிமையாகிய, தன் திருமகள் என பெற்ற - தனது திருமகளாகப் பெற்ற, மாமடிகளை துதிப்பாம்-மாமனாகிய அடிகளைத் தோத்திரம் பண்ணுவோம் (யாம்) எ-று.

இமயமலை வயிறுவாய்த்த தலைமகள் - பார்வதி. மணமகன் - சிவபெருமான். தெய்வயானையார் கந்தவேளுக்கு மனைவியாதலும், இந்திரனுக்கு மகளாதலும், பார்வதீ பரமேச்சுரருக்கு மருமகளாதலும், கானாறு கற்பகக்காவும் எனத் தொடங்கி மாமடிகளைத் துதிப்பாம் என முடித்த சொற்றொடர்களா லினிதுணரக் கிடந்தன. கறித்தல் - கடித்தல். பணைமருப்பு - வினைத்தொகை நிலைத்தொடர். பணையென்பதை முதனிலைத் தொழிற்பெயராக்கி பணைத்தலையுடைய என இரண்டனுருபும் பயனுமுடன்றொக்க தொகையாக்கினுமாம். மாமடிகள் என்றது இந்திரனை. திநகரபுரி-திநகரனாற் பூசிக்கப்பெற்ற தலம். திநகரபுரித் தேவதேவனைக் காக்கவென்று மாமடிகளைத் துதிப்பாம் என முடித்துக் கொள்க. (அ)

## சத்தமாதர்கள்.

### வேறு.

பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள் பகைதொகு
  புரமெரி மூளச் சிரித்தவள், பனிவரை பகநெடு வேலைப்
  பணித்தவள் படுகடல் புகையெழ வார்விற்கு னித்தவ,

ளெயிறுகொ டேழுதெழு பாரைப் பெயர்த்தவ ளெறிதரு
  குலிசம்வி டாமற் றரித்தவ, ளிடுபலி கொளுமொர்க
  பாலைக் கரத்தின ளெனுமிவ ரெழுவர்கடாளைப் பழிச்
  சுதும்,.

கயறிரி சரவண வாவிக் கரைக்குரை கழலொடு பரிபுர
  மோலிட் டிடக்கட, களிறொடு களிறெதிர் மோதத்
  திசைத்திசை கடுநடை யுளதக ரேறச் சமர்த்தனை,

முயறரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு முழுமதி
  குறைமதி யாகத் துகிற்கொடி, முகிலொடு தடமதில்
  வேதப் பதித்தனி முதல்வனை யறுமுக வேளைப் புரக்
  கவே.

(இ-ள்.) கயல்திரி - கயல்கள் சஞ்சரிக்கிற, சரவணவாவி கரை - சரவணப் பொய்கைக்கரையில், குரைகழலொடு - ஒலிக்கின்ற கழலுடனே, பரிபுரம் ஒலிட்டிட - நூபுரங்கள் சத்திக்க, கடகளிறொடு களிறு - மதயானையோடு மதயானை, எதிர்மோத - எதிரெதிர்தாக்க, திசை திசை - திக்குகள்தோறும், கடுநடை உள்ள - வேகமாகிய நடையுள்ள, தகர் ஏற - ஆட்டுக்கடாவின் மீதேற, சமர்த்தனை - வல்லமை யுள்ளவனை, முயல்தரு கறையொடு - முயற் கறையுடனே, தேய்வுற்று - தேய்ந்து, இளைத்து - மெலிந்து, ஒரு முழுமதி - ஒப்பற்ற பூர்ண சந்திரன், குறைமதி ஆக - குறைச்சந்திரனாகும்படி, துகில்கொடி - கொடியாடைகள், முகில்தொடு - மேகத்தைத் தீண்டுகிற, தடமதில் - பெரியமதில் சூழ்ந்த, வேதப்பதி - வேதபுரியில் வாழ்கின்ற, தனி முதல்வனை -

ஒப்பற்ற முதல்வனை, அறுமுகவேளை - ஆறுமுகங்களையுடைய கந்தனை, புரக்க - காக்கும்பொருட்டு, பயில்தரு - பழகுதற்குரிய, முதுமறைநூலை - பழைய வேதநூலை, தெரித்தவள் - உணர்த்தினவள், (அபிராமி) பகைதொகு - பகைகளாகக் கூடின, புரம் - முப்புரங்களில், எரிமூள - நெருப்பு மூண்டெரியும்படி, சிரித்தவள் - நகைத்தவள், (மாகேசுவரி) பனிவரைபக - பனிதவழ்கின்ற கிரௌஞ்சகிரியானது பிளக்கும்படி, நெடுவேலைப் பணித்தவள் - நெடிய வேற்படையையே - வினவள், (கௌமாரி) படுகடல் - ஒலிக்கின்ற கடலில், புகையெழ - புகையெழும்படி, வார்வில் குனித்தவள் - நெடியவில்லை வளைத்தவள், (நாராயணி) எயிறுகொடு உழுது - கொம்பினுல் தோண்டி, எழுபாரை பெயர்த்தவள் - எழுலகங்களையும் பேர்த்தவள், (வராகி) எறிதருகுலிசம் - எறிதற்குரிய வச்சிரப்படையை, விடாமல் தரித்தவள் - இடையருது தரித்திருப்பவள், (இந்திராணி) இடுபலிகொள்ளும் - இடப்படுகிற பலியேற்கிற, ஓர் கபாலக்கரத்தினள் - ஒப்பற்ற கபாலத்தை யேந்திய கையையுடையவள், (காளி) என்னும் - என்று சொல்லப்படுகிற, இவர் எழுவர்கள் - இவ ரெழுவருடைய, தாளை - திருவடிகளை, பழிச்சுதும் - துதிப்போம் (யாம்) எ-று.

முயற்கறை - முயற்களங்கம், இது சந்திரனிடத்துள்ளது மான்களங்கமென் பாருமுளர், முயற்களங்க முடைமையால் சசாங்கனென்றும், மான்களங்க முண்மையால் எணுங்க னென்றும் கூறுவர் வடநூலார், இவற்றுள் முன்னை யதற்கு முயலைத் தன் இடுப்பின்மீது வைத்திருப்பவனென்பதும், பின்னை யதற்கு மானைத் தன் இடுப்பின்மீது வைத்திருப்பவ னென்பதும் பொருள். சசம் - முயல், எணம் - மான், அங்கம் - (இடுப்பு). வேதங்களாற் பூசிக்கப்பட்டமையால் இத் தலத்திற்கு வேதப்பதி யென்னும் பெயர் வாய்ந்தது. அநாதியாதலால் வேதத்தை முதுமறை யென்ருர். நெடுவேலைப் பணித்தவள் என்ற குறிப்பால் பனிவரை கிரவுஞ்ச மலையைக் குறித்தது. வேள் மன்மதனுக்கும் பெயராதலால் அவனை வேறுபடுத்தற்கு அறுமுகவேள் என்ருர். அறுமுகவேளைப் புரக்க, எழுவர்கள் தாளைப் பழிச்சுதும் என முடித்துக்கொள்க. (கூ

## முப்பத்து முக்கோடி தேவர்கள்.

### வேறு.

முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு சொர்க்கத் தலத்தோடு சேஷசய னத்தையு, முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர் தமக்குக் கொடுத்தானை மாதிர மொரெட்டையு,

மிறைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல சத்திக் கரத்தானை யூதியமெ னத்தனை, யிருப்பினு நடப்பினு நினைப்பவ ரிருக்கவெமர் சித்தத்திருப்பானை யாறிரு புயத்தனை,

வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமலர்பத்மப் பதத்தானை வேதபுரி யிற்சின, விடைக்கொடி வலத்தினு மடக்கொடி யிடத்துமுள முக்கட் டிருத்தாதை யார் பணி குருக்களை,

மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையு மொக்கப் படைத்தானை மூவிரு முகத்தனை, மருத்துவர் வசுக்கதி ருருத்திர ரெனப்பொலியு முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே.

(இ-ள்.) முறுக்கு உடை - முறுக்கவிழ்ந்த, நறை - வாசனையுள்ள, சததளம் - நூற்றிதழ்களையுடைய, திருமலர்த்தவிசு - அழகிய தாமரை மலர்ப்பீடத்தையும், சொர்க்கத்தலத்தோடு - சுவர்க்கலோகத்தோடு, சேஷ சயநத்தையும் - அநந்த சயநத்தையும், முடிதலை - தமது முடித்தலைகளை, அடித்தலை பதித்தவர் தமக்கு - தன் திருவடியிற் பதித்தவர்களுக்கு, கொடுத்தானை - அருள் செய்தவனை, மாதிரம் ஓர் எட்டையும் - அஷ்ட திசைகளையும், இறைப்பொழுதினில் - கொஞ்ச நேரத்தில், பொடிபடுத்து - நீறுசெய்து, அருள் கொடுக்கவல்ல - அருள் செய்யவல்ல, சத்திக்கரத்தானை - வேற்கையனை, தனை - தன்னை, ஊதியம் என - பெரும்பேறாக,

இருப்பினும் நடப்பினும் - இருந்தாலும் நடந்தாலும், நினைப்ப வர் இருக்க - கருதுவோரிருக்க, எமர்சித்தத்து இருப்பானை - எம்போல்வார் மனத்திலிருப்பவனை, ஆறு இரு புயத்தனை - பன்னிருதோளனை, வெறுப்பொடு விருப்பினை - வெகுளிவிழைவுகளை, அறுத்தவர் - அறுத்தவரது, உள்ளத்து - மனத்தின்கண், மலர் - மலர்கின்ற, பத்மம்பதத்தானை - கமலபாதனை, வேதபுரியில் - வேதபுரியின்கண், சினம் - கோவத்தையுடைய, விடைக்கொடி - இடபக்கொடியை, வலத்தினும் - வலப்புறத்திலும், மடக்கொடி - மடக்கொடியை, இடத்தும் - இடப்புறத்திலும், உள்ள - அமைத்துள்ள, முக்கண் - மூன்று கண்களையுடைய, திருத்தாதையார் - திருத்தந்தையாராகிய சிவபிரானுர், பணி - வணங்குதற்குரிய, குருக்களை - ஆசாரியரை, மறைக்கிழவனை - பிரமனை, தலைபுடைத்து - தலையிற் குட்டி, உலகு அனைத்தையும் - உலக முழுதும், ஒக்க படைத்தானை - ஒக்கப் படைத்தவனை, மூவிரு முகத்தனை - அறுமுகனை, மருத்துவர் - மருத்துவர்கள், வசு - வசுக்கள், கதிர் - கதிர்கள்; உருத்திரர் - உருத்திரர்கள், என - என்று சொல்லும்படி, பொலியும் - விளங்குகிற, முப்பத்து முக்கோடி தேவர்கள்—, புரக்க - காத்தருள்க, (எ - று.)

திருமலர்த்தவிசு கொடுத்தானை யென்றியைத்துப் பிரமபதத்தைக் கொடுத்தவனை யென்றும், சொர்க்கத்தலங் கொடுத்தானை யென்றியைத்து இந்திரபதங் கொடுத்தவனை யென்றும், சேஷசயனத்தைக் கொடுத்தானை யென்றியைத்து விஷ்ணுபதங் கொடுத்தவனை யென்றும் பொருள்கொள்க. முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர் தமக்கு என்றது தன் திருவடியைத் துதித்த அடியார்க்கு என்றவாறு. "தாழச் செய்தார் முடிதன்னடிக் கீழ்வைத்த - வரைவிண்ணோர், சூழச்செய்தான்" என்ருர் மணிவாசகரும். இறை - அற்பம், வெறுப்பொடு விருப்பினை யறுத்தவர் என்றது ஞானியரை. மடக்கொடி யென்றது உமா தேவியை. பணி குருக்களை வினைத்தொகை நிலைத்தொடர். பணிந்தது பிரணவார்த்தத்தை விரித்துணர்த்திய காலத்திலென்றுணர்க. அது "சீயகம் போதியென வாய்புதைத்துச் செவிதா" என மேலோர் கூறுதலாலினிது விளங்கும். கிழமை - உரிமை,

மறைக்கிழவன் - வேதங்களுக்குரியவனாகிய பிரமன் மருத்துவர் இருவர், (அச்சுவினி மருத்துக்கள்,) வசுக்கள் எண்மர், அவர் அனலன், அநிலன் முதலியோர், கதிர் ஆதித்தர் பன்னிருவர், அவர் - தாத்துரு, சக்கரன், அரியமன் முதலியோர், உருத்திரர் பதினொருவர், அவர் மாதேவன் அரன் உருத்திரன் முதலியோர், இதனைத் திருமுரு காற்றுப்படையில் "நால் வேறியற்கை" என்னுஞ் சொற்றொடர்க்கு நச்சினார்க்கினியர் வரைந்த வுரையாற்றெள்ளி தினுணர்க. (௰)

காப்புப்பருவம் முற்றிற்று.



## செங்கீரைப் பருவம்.



இருக்கோ லிடும்பரி புரக்கோல முந்நுதலி லிட்ட பொட்டுஞ்சுட்டியு, மெரிமணிப் பட்டமுங் கட்டுபொன் னரைஞாணு மிளஞாயி றுதயஞ்செயு,
முருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி யுச்சியும் வாளிமுத்து, மொள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண் டோடரிக் கண்களிக்கு,
மருக்கோல நீலக் குழற்றைய லாட்கரு மருந்தா யிருந்த தெய்வ, மகக்கோல மேமுதிர் கிழக்கோலமாய்க்குறமடந்தைமு னடந்துமற்றத்,
திருக்கோல முடனொரு மணக்கோல மானவன் செங்கீரை யாடியருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள செங்கீரை யாடியருளே.

(இ - ம்.) இருக்கு ஒலிடும் - வேதங்கள் சத்திக்கிற, பரிபுரக்கோலமும் - பாதசாலத்தின் அழகினையும், நுதலில் இட்ட பொட்டும்-நெற்றியிலிட்ட பொட்டினையும், சுட்டியும் - சுட்டியினையும்,

எரிமணி பட்டமும்-விளங்குகிற நெற்றிப் பட்டத்தினையும், கட்டு பொன் அரைஞாணும் - கட்டப்பட்ட பொன்னரைநாணும், இள ஞாயிறு உதயம்செயும்-இளஞ் சூரியனுதிக்கின்ற, உருகோலமும்-வடிவழகினையும், சூழியக்கொண்டையும் - உச்சிக் கொண்டையினையும், முச்சி உச்சியும் - முச்சி முடித்த உச்சியினையும், வாளி முத்தும் - வாளி முத்தினையும், ஒள்ஒளி ததும்பும் குதம்பையும் - ஒட்பமாகிய வொளி ததும்புகிற குதம்பையினையும், கண்டுகண்டு-பார்த்துப் பார்த்து, ஓடு அரி - செவ்வரிபடர்ந்த, கண்களிக்கும்-கண்களிக்கப்பெற்ற, மருகோலம் நீலம் - வாசனை அழகு நீலநிறம் என்பவற்றை யியற்கையாகவுடைய, குழல் - கூந்தலையுடைய, தையலாட்கு - உமாதேவிக்கு, அருமருந்தாய் இருந்த - அரிய மருந்தாயிருந்த, தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, மகக்கோலமே - பிள்ளைக்கோலமே, முதிர் - முதிர்ந்த, கிழக்கோலமாய்-கிழக்கோலமாகி, குறமடந்தைமுன் நடந்து - குறப்பெண்ணுக் கெதிரே நடந்து, அ திருக்கோலமுடன் - அந்தத் திருக்கோலத்தோடு, ஒருமணக்கோலம் ஆனவன் - ஒப்பற்ற மணக்கோலமுங் கொண்டவனே, செங்கீரையாடியருள்—, செத்து—. எ-று.

இருக்கு இவ்விடத்து வேதத்தின் பொதுப்பெயராய் நின்றது. ஒலமிடும் ஒலிடும் எனத் தொகுத்தலாயிற்று. பொட்டு-திலகம். "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு, ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" என்ற மேலோர் கூற்றையடி யொற்றி 'இளஞாயி றுதயஞ்செயு முருக்கோலமும் என்றார். முச்சி - ஐவகை மயிர்முடியினொன்று. வாளிமுத்து - காதணியின் முத்து. குறமடந்தை - குறச்சிறுமி, (வள்ளிநாயகி). மணக்கோலம் - விவாஹவேஷம். மணக்கோலமானவன் செங்கீரை யாடியருள் எனவும், தெய்வங்கள் மணவாளன் செங்கீரை யாடியருள் எனவும் முடித்துக்கொள்க. மணக்கோலமானவன் அண்மைவிளியாதலா லியல்பாயிற்று. (௬)

கும்பாதி காரிய மெனத்தகைமை நிமித்தமாக் கொண்டவகி
லாண்டங்களின், குழவுக்கு மற்றுத்த பிறுவர்குறி யுந்
தலைக் கூடினுந் தான்றனக்கச்,

சொம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனுஞ் சுருதிகரி
யாவைத்துமச், சுருதிக்கு மெரிசுடர்ப் பரிதிக்கும் ரவி
குலத் தோன்றற்கு மிளவலுக்குஞ்,
சம்பாதி யொடுநற் சடாயுவுக் கும்பெருந் தவமுனிவரெழு
வருக்குந், தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த
தம்பிரான் றிருமேனியிற்,
செம்பாதி யுங்கொண்ட தையலு யகிகுமர செங்கிரை யாடி
யருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே.

(இ - ள்.) கும்பாதி-குடமுதலிய, காரியம் என - காரியங்கள் (தமக்குக் குலாலனை நிமித்தகாரணனுகக் கொண்டாற்) போல, தமை - சிவ சத்திகளை, நிமித்தம் ஆ கொண்ட - நிமித்தகாரண மாகக் கொண்ட, அகிலாண்டங்களின் குழுவுக்கு - அகிலாண்ட கோடிக்கு, தம் இருவர் குறியும்-தம்மிருவர் குறிகளும், தலைக்கூடி னும்,கலந்திருந்தாலும், தனக்கு அசொம்-தனக்கு (சத்திக்கு)ந்தப் பொருள், பாதி அன்மைக்கு-பாதி யேல்லாமைக்கு, அனைத்தும் தன்மயம் எனும்-எல்லாம் தன்மயமென்கிற, சுருதி - வேதங்களை, கரி ஆ வைத்தும்-சாக்ஷியாக வுடைத்தாயிருந்தும், அ சுருதிக்கும்- அந்த வேதங்களுக்கும், எரிசுடர் பரிதிக்கும் - எரிகின்ற கிரணங் களையுடைய சூரியனுக்கும், ரவிகுலம் தோன்றற்கும்-சூரியகுலோ தயராகியஸ்ரீராமருக்கும், இளவலுக்கும்-அவர் தம்பியாகிய இலக்கு மணருக்கும், சம்பாதியொடு நல்சடாயுவுக்கும் - சம்பாதியோடு நல்ல சடாயுவுக்கும், பெருந்தவம்-பெருந்தவத்தினையுடைய, முனி வர் எழுவருக்கும் - சத்தமுனிவருக்கும், தண்ணளி சுரந்திட்ட - கருணைசுரந்த, தீராதவினை தீர்த்த - தீராத வினைகளைத் தீர்த்தரு ளின, தம்பிரான் - சிவபெருமானது, திருமேனியில் - திருமேனி யில், செம்பாதியும் கொண்ட - சரிப்பாதியையும் பகிர்ந்துகொ ண்ட, தையல்நாயகி குமர - தையனுயகிக்குப் புதல்வனே, செங் கீரை யாடியருள்—, செத்து—, எ-று.

கும்பாதிகாரியம் - குடமுதலிய காரியங்கள். குடமுதலிய வென்றது கட கலசாதிகளை. தம்மையென்றது சிவசத்திகளை.

அகிலம் - எல்லாம். அண்டம் - உலகு. குழு - கூட்டம். குறி- அடையாளம். (ஆண்குறி பெண்குறி) இவற்றை ஸ்த்ரீலிங்கம் புல் லிங்கம் என்பர் வடநூலார். தலைக்கூடல் ஒரு சொல். சொம்- ஸ்வம் என்னும் வடசொற்றிரிபு. தந்மயம்-தத்ஸ்வரூபம். சுருதி- கேட்டறிதற்பாலது. வேதம் எழுதிப் படித்தறியாது செவியிற் கேட்டறிதற்பால தாதலானே இதற்கு இப்பெயர் வழங்கும். சம் பாதி - அநூருவின் மூத்தகுமாரன், இவன் தம்பி சடாயு, இவ்விரு வரும் மேனிலையைக் காணவேண்டுமென்னும் எண்ணத்தோடு பறந்து சூரியமண்டலத்தைக் குறுகுதலும், சடாயுவானவன் சூரிய வெப்பம் பொறுக்க லாற்றாது கீழேசாய, அது கண்ட சம்பாதி யானவன், அவனைத் தன் சிறகுகளால் மூடினமையால் இவன் சிறகுகளும் எரிந்துபோயின, அப்பொழுது அந்தரத்து நிலை பெறாது சம்பாதி கடலினும் சடாயு தண்டகவனத்து ஜநஸ்த்தா நத்திலும் விழுந்தார்கள். பிறகு சம்பாதி அநுமதாதிகளுக்கு சீதையிலங்கையிலிருக்குஞ் செய்தியைத் தெரிவித்த சுக்ருதத்தால் இறகுகள் முளைக்கப்பெற்றுத் தன திருப்பிடமாகிய இமயமலை யைச் சேர்ந்தானென்பது புராணகதை. தவமுனிவரெழுவர்- அத்திரி, ஆங்கிரசன் முதலாயினோர். கும்பாதி காரியங்கள் மண், தண்டசக்கரங்கள், குலாலன் என்பவற்றை முறையே முதற் காரணம் துணைக்காரணம் நிமித்த காரணங்களாகக் கொண்டாற் போல, அகிலாண்டங்களின் குழு, ஐம்பூதம் : மாயை : ஈச்சுரன் என்பவற்றை முறையே முதற்காரணம் துணைக்காரணம் நிமித்த: காரணங்களாகக் கொண்டு விரிந்துளதென்பது கருத்து. தைய லுயகிகுமர, தெய்வங்கள் மணவாள, செங்கீரையாடியருள் என முடித்துக் கொள்க. (உ)

கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக் களிற்றோடு
 முட்டவிட்டுச், ககனவட் டத்திெனாடு பரிதிவட் டத்தை
 வளை திகிரிவட் டத்திலிட்டு,

முக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த வேதண்ட
 மாதண்டமா, மூதண்ட கூடந்த்ரி கூடத்தொ டுஞ்சாடி
 மூரிக் கடாசலமவன்,

மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட மேகபட
லத்துமொண்டு, மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்
பெய்து விளையாடு வீரர்களொடுந்,

திக்கெட்டும் விளையாடு சேனை பதிக்கடவுள் செங்கீரை
யாடியருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள செங்கீரை யாடியருளே.

(இ - ள்.) கைக்கு எட்டும் - கைக்கெட்டுகிற, எட்டுகளிற்றை பிடித்து - அஷ்ட திக்கயங்களைப் பிடித்து, அ களிற்றோடு முட்ட விட்டு - அந்த யானைகளுடனே முட்டவிடுத்து, ககனவட்டத்தினொடு - ஆகாய மண்டலத்தோடு, பரிதிவட்டத்தை - சூரிய மண்டலத்தை, வளை - உலகை வளைந்திருக்கிற, திகிரிவட்டத்தில் இட்டு-சக்ரவாளகிரியிலிட்டு, முக்கண் - மூன்று கண்களையுடைய, திருத்தாதை-திருத்தந்தையார், கோதண்டம் என வைத்த - தமது வில்லாகக் கொண்ட, வேதண்டம் - மேருமலையை, மாதண்டம் ஆ - பெரிய தண்டாயுதமாகக் கொண்டு, மூது - பழமையாகிய, அண்டகூடம் - அண்டகூடத்தை, திரிகூடத்தோடும் சாடி - திரிகூடாசலத்தோடு மோதி, மூரி - வலிமையுள்ள, கடாசலம்-யானையானது, அவன் - அவனது, மெய்க்கு இட்ட சட்டைக்கு நேரிட்டிட - திருமேனிக்கிட்ட சட்டைக்குச் சமமாக, மேகபடலத்து மொண்டு - மேகத்திரளினின்று முகந்து, மேல்கடலினை - மேற்கடலை, பெரு - பெரிதாகிய, கீழ்கடல் புகபெய்து - கீழ்க்கடலிற் புகவிட்டு, விளையாடு - விளையாடுகிற, வீரர்களொடும் - வீரரோடு, திக்கு எட்டும் - எட்டுத் திக்குகளிலும், விளையாடு - விளையாடுகிற, சேநாபதிக் கடவுள் - சேநாபதிக் கடவுளே, செங்கீரையாடியருள் —, எ-று.

அஷ்டதிக்கயங்கள் - ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம் என்பன. இவற்றிற்குப் பெண்யானைகள் முறையே அப்பிரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரபர்ணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி என்பன. இவை கிழக்குமுதலிய எட்டுத் திக்குக

வினும் நிலைபெற்றிருப்பன. கடாசலம் கடம் அசலம் எனப் பிரிக்கப்பட்டு மதமலையெனப் பொருள் படும். இது யானையைக் குறித்தது. படலம் - கூட்டம். சேனாபதிக் கடவுள் அன்மை விரியாதலால் இயல்பாயிற்று. சேனாபதிக் கடவுள் செங்கீரை யாடியருள். தெய்வங்கள் மணவாள செங்கீரையாடியருள் என முடித்துக்கொள்க. (௩)

மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான் மணிமார்பு
வாணிக்கு நான், மறைமுதலி செந்நாத்தடந்தைய லா
ளொடும் வயித்தியக் கடவுளார்க்கு,
மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்திெனடு வேதச்
சிரங்கடுப்ப, வேதபுரி கந்தபுரி புள்ளூரெனப்பொலியும்
வேளூர நிசைதிசைதொறுங்,
கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங் கயிலைத்
தடஞ்சாரலுங், கனகாச லத்தும்வள ரிமயா சலத்து
முயர் கந்தமா தனவெற்பெனத்,
தெய்வதப் பிடியோடும் விளையாடு மழகளிறு செங்கீரை
யாடியருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மண
வாள செங்கீரை யாடியருளே.

(இ - ள்.) மைவிழி - அஞ்சனக் கண்களையுடைய, செங்கமல வல்லிக்கு - திருமகளுக்கு, நேமியான் - சக்ராயுதத்தை யுடையவனாகிய திருமாலின், மணிமார்புகடுப்ப - கௌஸ்துபமணி யணிந்த மார்பை நிகர்க்கவும், வாணிக்கு - சரசுவதிக்கு, நான்மறைமுதலி-பிரமனது, செந்நாதடம் கடுப்ப - செவந்த நாவினிடத்தை நிகர்க்கவும், தையலாளொடும் வயித்தியக் கடவுளார்க்கு - தையல்நாயகியோடு வயித்தியநாதருக்கு, மெய்விரிக்கும் - உண்மைவிரித்த தொண்டர் - அடியார்களுடைய, உள்ளம் தடத்தினொடு - மநப்பிரதேசத்தோடு, வேதச்சிரம் கடுப்ப - வேதாந்தத்தை நிகர்க்கவும், வேதபுரி கந்தபுரி புள்ளூர் என - வேதபுரி கந்தபுரி புள்ளூர் என்று சொல்லும்படி, பொலி-விளங்குகிற, வேளூர-வேளூரனே, உயர்-

உயர்ந்த, கந்தமாதநவெற்பு என-கந்தமாதந கிரியிற்போல, திசை திசைதொறும் - எல்லாத் திக்குகளிலும், கைவகுத்து - கைவகுக்கப்பட்டு, அரமகளிர் - தெய்வப்பெண்கள், குரவையாட்டு அயர்-குரவையாடலைச் செய்கிற, பெருகயிலை-பெரிய கயிலாயமலையின், தடம்சாரலும் - பெருஞ்சாரலினும், கனக அசலத்தும்-மேருமலையிலும், வளர் - வளர்கின்ற, இமய அசலத்தும் - இமயமலையிலும், தெய்வதம் பிடியோடும் - தெய்வயானையோடும், விளையாடும்-விளையாடுகிற, மழகளிறு-இளங்களிறே, செங்கீரையாடியருள்—, எ-று.

கமலவல்லி யென்பதில் வல்லி உவமையாகுபெயர். மணி அழகெனினுமாம். நான்மறை முதலி - சதுர்வேதாக்ரேஸ்வரன். கைவகுத்தல் - ஒழுங்காக வகுக்கப்படுதல். குரவையாட்டு - கைகோத்தாடுவதோர் விளையாட்டு. இது "குரவைக் கூத்தே கைகோத்தாடல்" என்பதனாலினிது விளங்கும். கனகாசலம் என்பதைக் கனகம் அசலம் எனப் பிரித்து பொன்மலையென் றுரைத்துக் கொள்க. இமயாசலம் என்பதை இமயம் அசலம் எனப் பிரிக்க. மழகளிறு அண்மைவிளியாதலா லியல்பாயிற்று. மழகளிறு செங்கீரை யாடியருள், தெய்வங்கள் மணவாள செங்கீரையாடியருள் என முடித்துக் கொள்க. (௪)

மீனேறு குண்டகழி நீவாய் மடுத்ததனி வில்லியா ரிளவலோடும், விநிமுறை வணங்கச் சடாயுபுரியிற் கருணை வெள்ளமென வீற்றிருக்கு,

மானே றுயர்த்திட்ட வையற்கு மம்மைக்கு மருமருந்தாகின்ற, வாதிப் பிரானென்று மும்முதற் கடவுளு மடித்தொழும் பாற்றமற்றக்,

கூனோறு மதிநுதற் றெய்வக் குறப்பெண் குறிப்பறிந் தருகணைந்துன், குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக் குறையிரந் தவடொண்டைவாய்த்,

தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன் செங்கீரை யாடியருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள செங்கீரை யாடியருளே.

(இ - ள்.) மீன் எறு - மீன்கள் மிகுந்த, குண்டு அகழி - ஆழமாகிய கடலை, தீவாய்மடுத்த - நெருப்பிலிட்ட, தனிவில்லி யார் - ஸ்ரீராமபிரான், இளவலோடும் - தம்பியோடும், விதிமுறை வணங்க - விதிக்கிரமமாக வணங்க, சடாயுபுரியில் - சடாயுபுரியி னிடத்தே, கருணை வெள்ளமொடு வீற்றிருக்கும்-கருணைப் பெருக் குடனே வீற்றிருக்கிற, ஆன் எறு-விடையை, உயர்த்திட்ட-கொடி யாயுயர்த்தின, ஐயற்கும் - தந்தைக்கும், அம்மைக்கும் - தாய்க் கும், அருமருந்து ஆகி நின்ற - அரிய மருந்தாய் நின்ற, ஆதி பிரான் என்று - முதற்கடவுளேயென்று, மும்முதற்கடவுளும் - மூவராகிய முதற்கடவுளரும், அடித்தொழும்பு ஆற்ற, திருவடித் தொண்டுசெய்ய, அ - அந்த, கூன் எறுமதி - வளைவு மிகுந்த இளம்பிறை போன்ற, நுதல் - நெற்றியையுடைய, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, குறப்பெண் - வள்ளிநாயகியின், குறிப்பு அறிந்து - கருத்துணர்ந்து, அருகு அணைந்து - அவளருகே சென்று, உன் குற்றேவல்செய்ய - உன் குற்றேவல் செய்யும்படி, கடைக்கண் பணிக்க என - கடைக்கண் பார்க்கவென்று, குறை யிரந்து - குறையிரந்து, அவள் - அவளது, தொண்டைவாய் - கோவைக்கனிபோலும் வாயினின்றும் வெளிப்படுகின்ற, தேன் ஊறுகிளவிக்கு - தேன்சுரக்குஞ் சொற்களுக்கு, வாய்ஊறி நின் றவன் - வாயூறி நின்றவனே, செங்கீரையாடி யருள் —, எ - று.

மீனேறு என்பதில் எறுதல் மிகுதிப்பொருடந்து நின்றது. குண்டு - ஆழம், அகழி - கடல், அகழ்தல் - தோண்டல், இது சகரரால் தோண்டப்பட்டதென்னும் பொருடந்து நின்றது. "சகரர்தொட்ட வெண்டிரையெறி தடங்கடல்" என்றார். பிறரும், தீவாய் மடுத்த என்பதற்கு தீக் கடவுளின் வாய்க் கிரையாக்கின என்றுரைப்பினுமாம். இது நிகழ்ந்தது சேது பந்தனார்த்தம் வரு ணன்மீது வாளிதொடுத்த காலத்தில். கோதண்ட தீக்ஷா குரு வாதலால் ஸ்ரீராமபிரானை 'தனிவில்லியார், என்றார். இளவல் என்றது இலக்குமணரை, சடாயு பூசித்த தலமாதலால் சடாயு புரியென வழங்கும், விடை - இடபம், ஆனேறுயர்த்திட்ட வைய் யன் - சிவபிரான், அம்மை - உமாதேவி, அருமருந்து - அருமை யாகிய தேவாமிர்தம், ஆதிப்பிரான் - அண்மைவிளி மும்முதற்

கடவுள் என்றது தோற்ற நிலையிறுதிகட்குக் காரணராகிய பிர மாதிகளை. மற்று வினை மாற்றின்கண் வந்தது. மதற்குவமை யாகப் புணர்க்கப்படுதலால் கூனேறுமதி யென்றது அஷ்டமீ சந்திரனை. குறிப்பு-தம்மிடத் தார்வம். குற்றேவல்-சிறுதொண்டு. பணிக்க என வெனற்பாலது பணிக்கெனவெனத் தொகுத் தது. இவ்வாறு ஆடவர் குறையிரத்த லியல்பென்பதை, "மடுக்கோ கடலின் விடுதிமிலன்றி மறிதிரைமீன், படுக்கோ பணிலம் பலகுளிக்கோ பரன்றில்லை முன்றிற், கொடுக்கோவளை மற்று நும்மையர்க்காய குற்றேவல் செய்கோ, தொடுக்கோ பணியீரணி யீர் மலர்நுஞ்சுரி குழற்கே" என்பதனாலறிக. தேனுணவு மிகுதிபற்றி அவள் சொல்லுந்தேன் போன்றினிக்குஞ் சொல்லா யிற்று, இனிய் தேன் முக்கனி முதலியவற்றை யொருவர்காணின் அவர் வாயினீருற லுலகியல்பாதலால், தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன், என்றார். நின்றவன் அண்மை விளி, நின்றவன் செங்கீரை யாடியருள், மணவாள செங்கீரை யாடியருள் என முடித்துக்கொள்க. (௫)

வேறு.

செம்பொ னடிச்சிறு கிங் கிணியோடு சிலம்பு கலந்தாடத்,
  திருவரை யரைஞா ணரைமணி யொடு மொளி திகழ
  ரை வடமாடப்,
பைம்பொ னசும்பிய தொந்தி யொடுஞ்சிறு பண்டி சரிந்
  தாடப், பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச் சுட்டி
  பதிந்தாடக்,
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை காது மசைந்தா
  டக், கட்டிய சூழியு முச்சியு முச்சிக் கதிர்முத் தொடு
  மாட,
வம்பவ ளத்திரு மேனியு மாடிட வாடுக செங்கீரை, யாதி
  வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை.

(இ - ள்.) அடி-திருவடியில், செம்பொன் - செம்பொன்னாற் செய்யப்பட்ட, சிறு கிங்கிணியோடு - சிறு கிங்கிணிகளோடு, சிலம்பு - சிலம்புகளும், கலந்து ஆட - கூடியாடவும், திரு அரை - திருவரையில், அரைஞாண் - அரைநாணும், அரைமணியொடும் - உடை மணியொடும், ஒளிதிகழ் - ஒளி விளங்குகிற, அரைவடம் ஆட-அரைவடங்களாடவும், பைம்பொன் அசும்பிய - பசும்பொன் போலொளிவீசுகிற, தொந்தியொடும் சிறுபண்டி - தொந்தியுடனே சிறுவயிறும், சரிந்து ஆட - சரிந்தாடவும், பட்ட நுதல் பொலி - பட்டத்தோடு கூடிய நெற்றியில் விளங்குகிற, பொட்டொடு - பொட்டுடனே, வட்டச்சுட்டி - வட்டவடிவாகிய சுட்டியும், பதிந்து ஆட - பதிந்தாடவும், கம்பி விதம்பொதி - கம்பி வகைகளமைந்த, குண்டலமும் - குண்டலங்களும், குழைகாதும்- குழையோடு கூடிய காதும், அசைந்து ஆட - அசைந்தாடவும், கட்டிய சூழியும் - கட்டப்பட்ட சூழியும், முச்சியும்—, முச்சி- முச்சியானது, கதிர் முத்தொடும் ஆட - ஒளியுள்ள முத்துக்களோடும் ஆடவும், அம்பவளம் - அழகிய பவளம்போன்ற, திருமேனியும் ஆடிட - திருமேனியு மாடவும், செங்கீரை ஆடுக - செங்கீரையாடி யருள்க, ஆதி வயித்தியநாதபுரி குகன் - முதன்மையாகிய வயித்தியநாதபுரியி லெழுந்தருளிய குகனே, செங்கீரை ஆடுக - செங்கீரையாடி யருள்க எ - று.

செம்பொனடிச் சிறுகிங்கிணியோடு சிலம்பு கலந்தாட எனத் தொடங்கி, கட்டியசூழியு முச்சியுமுச்சிக் கதிர்முத்தொடுமாட என முடித்தலால் இச்செய்யுள் பன்னிருவாகன் பாதாதிகேச வருணனை யென் றறிக. பாதாதிகேசமாகிய வுறுப்புக்கள் யாவுமாடுழித் திருமேனியு மாடல் இன்றி யமையாமையின் இறுதியில் அம்பவளத் திருமேனியு மாடிட என்றார். திருமேனியு மென்ற வும்மை யிறந்தது தழீஇயது. வயித்தியநாதர் என்னுஞ் சிறப்புத் திருநாமம்பெற்ற சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் தலமாதலால் இதற்கு வயித்தியநாதபுரி யென்னும் பெயர் வாய்ந்தது. குகன்-அண்மைவிளி. வயித்தியநாதபுரிக்குகன் செங்கீரை யாடுக வென முடிக்க. (க)

குழையொடு குழையெதிர் மோதிக் காதணி குண்டலம் வெயில்வீசக், குமுத விதழ்க்கனி வாயமுதூறிய குறு நகை நிலவூர,

முழுவயி ரப்புய வலயமு முன்கைமு தாரியு மொளிகால, முத்த மரும்பி யெனக்குறு வேர்வு முகத்தி லரும்பி யிடப்,

புழுதி யளைந்த பசுந்திரு மேனிப் பொங்கொளி பொங்கி யெழப், புண்டரி கங்கண் மலர்ந்த விழிக்கடை பொழி யருள் கரைபுரள,

வழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி யாடுக செங்கீரை, யாதி வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை.

(இ - ள்.) குழையொடு குழை எதிர்மோதி - குழையோடு குழை யெதிர்தாக்கி, காதணிகுண்டலம் வெயில்வீச - காதிலணிந்த குண்டலங்களும் ஒளிவீச, குமுதம்-செவ்வல்லி மலர்போன்ற, இதழ் - இதழோடுகூடிய, கனிவாய் - கனிவாயினிடத்து, அமுதூறிய - அமிர்தஞ் சுரந்த, குறுநகை - சிறு நகையாகிய, நிலவூர - நிலாவிரிய, முழுவயிரம் - முழுவயிரத்தாற் செய்யப்பட்ட, புயவலயமும் - தோள்வலயமும், முன்கை முதாரியும் - முன்கையிலணிந்த முதாரியும், ஒளிகால - ஒளியையுமிழ, முத்தம் அரும்பியென - முத்துக்கள் அரும்பினாற்போல, குறுவேர்வு - சிறுவெயர்வை, முகத்தில் அரும்பியிட-முகத்தில் அரும்ப, புழுதி அளைந்த- புழுதி படிந்த, பசு திருமேனி - பசிய திருமேனியில், பொங்கு ஒளி-மிக்க வொளியானது, பொங்கியெழ-விளங்கியெழ, புண்டரிகங்கள் மலர்ந்த - தாமரை மலர்கள்போல மலர்ந்த, விழிக்கடை- கடைக்கண்கள், பொழி - பொழிந்த, அருள் - அருள்வெள்ளமானது, கரைபுரள - கரைபுரண்டோட, அழகுகனிந்து முதிர்ந்த - அழகு பழுத்து முதிர்ந்த, இளங்கனி - இளங்கனியே, ஆடுக செங்கீரை, எ-று.

முதாரி - முன்னங்கையி லணிதற்குரியதோ ராபரண விசேடம். கரைபுரள வென்றதனுல் அருள் என்பதற்கு அருள்வெள்ளமெனப் பொருள் கூறலாயிற்று. கனி, குகன் என்பன அண்மைவிளிகளாதலா னியல்பாயின. அழகுகனிந்து முதிர்ந்த விளங்கனி செங்கீரையாடுக, வயித்தியநாதபுரிக் குகன் செங்கீரை யாடுக என முடித்துக் கொள்க. (எ)

விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய மெல்லிதழ் புலராமே,
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன் மென்குரல் கம்மாமே,
கரைவுறு மஞ்சன நுண்டுளி சிந்திக் கண்மலர் சிவவாமே,
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல் கருவடி வுண்ணுமே,
யுருவ மணிச்சிறு தொட்டி லுதைந்துநி னொண்பதநோவாமே, யொருதா ளூந்தி யெழுந்திரு கையு மொருங்கு பதித்துநிமிர்ந்,
தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி தாடுக செங்கீரை, யாதி வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை.

(இ - ள்.) விரல் - விரல்கள், சுவையுண்டு - சுவைக்கப்பட்டு, கனிந்து அமுது ஊறிய - பழுத்து அமுதஞ் சுரந்த, மெல் இதழ்- மெல்லிய இதழ்கள், புலராமே - உலராமலும், விம்மிபொருமி - விம்மியும் பொருமியும், விழுந்து அழுது அலறி—, உன்-உனது, மெல்குரல் கம்மாமே - மெல்லிய குரல் கம்மாமலும், கரைவுறும்-கரைகின்ற, அஞ்சனம் - அஞ்சனத்தின், நுண்துளிசிந்தி - நுண்ணியதுளிகள் சிந்தி, கண்மலர் சிவவாமே - கண்களாகிய தாமரைமலர்கள் சிவக்காமலும், கலுழ் - அழுகின்ற, கலுழிபுனல் - கலங்கனீராகிய, அருவிபடிந்து-அருவியிற் படிந்து, உடல்கருவடி வுண்ணுமே - திருமேனி கருவுருக் காட்டாமலும், உருவம்மணி - நிறமுள்ள மணிகள் பதித்த, சிறுதொட்டில் உதைந்து - சிறிய தொட்டிலையுதைந்து, நின் - உனது, ஒள்பதம் நோவாமே - அழகிய திரு

வடிகள் நோவாமலும், ஒருதாள் உந்தி எழுந்து - ஒருதாளூன்றி யெழுந்து, இருகையும் - இரண்டு கைகளையும், ஒருங்குபதித்து-ஒருங்கே நிலத்தேபதித்து, நிமிர்ந்து-நிமிர்ந்திருந்து, அருள்பொழி திருமுகம் - கருணைபொழிகின்ற திருமுகங்கள், அசைய-அசையாநிற்க, அசைந்து-நீ யசைந்து, இனிது-இனிதாக, ஆடுக செங்கீரை எ-று.

இதழ் - உதடு. கம்மல் - குரலடைத்தல். அழும்போது சிந்துதல் அஞ்சநத்தைக் கரைத்துக்கொண்டு வருகிற கண்ணீராதலால் கருவடி வுண்ணல்பெறப் பட்டது. கருவடி வுண்ணுமே யென்றதனுல் குமரவேடிருமேனி செந்நிறத்த தென்பதும் பெறப் பட்டது.

## வேறு.

கும்ப மதக்களி யானை யிரண்டே யொன்றேமைக்,
  கொண்டல் விழிக்கயன் மீனு மிரண்டே கொண்டேகிச்,
சம்பர னைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்,
  சண்டைகொ ளற்கென நேர்வரு பெண்பா லன்பாயே,
யம்பவ ளக்கொடி யேவளர் கொம்பே யென்றேநீ,
  யன்று புனத்துயிர் சோர்வது கண்டே முன்போதுங்,
கம்பம தத்தர்ச சோதர செங்கோ செங்கீரை,
  கந்த புரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை.

(இ - ள்.) கும்பம் - கும்பம்போன்ற, மதம்களியானை இரண்டே - மதத்தையுடைய களியானை யிரண்டும், மைகொண்டல் ஒன்றே - கரிய மேகமொன்றும், விழிகயல் மீனும் இரண்டே-விழித்தலையுடைய கயல்மீன்களிரண்டும், கொண்டு ஏகி-கொண்டு வந்து, சம்பரனை பொரு - சம்பரனைப் பொருது வென்ற, சேவகன் - வீரனானவன், முன் சண்டை கொளற்கு - எதிரே நின்று சண்டை செய்ய, வந்தான் வந்தான் என - வந்தான் வந்தானென்று சொல்ல, நேர்வரு-எதிரே வந்த, பெண்பால்-பெண்ணினிடத்தில், அன்பாய் - அன்புகொண்டு, அம்பவளக்கொடியே-

அழகாகிய பவளக்கொடியே, வளர்கொம்பே - வளர்கின்ற பூங் கொம்பே, என்றே - என்று சொல்லிக்கொண்டே, அன்று - அந் நாளில், புனத்து-தினைப்புனத்தில், நீ உயிர்சோர்வது கண்டு - நீ உயிர் தளர்வது கண்டு, முன்போதும் - உனக்கெதிரேவந்த, கம் பம் - கட்டுத்தறியிற் கட்டப்படுகிற, மதத்தர் - மதயானை யுருவின ராகிய விநாயகருக்கு, சகோதர - சகோதரனே, செங்கோ செங் கீரை —, எ-று.

கும்பமதக் களியானை யிரண்டென்றது இருதனத்தை. மைக்கொண்டல் ஒன்றே யென்றது கூந்தலை. விழிக்கயல் மீனு மிரண்டேயென்றது கண்களை. சம்பரனைப் பொரு சேவகன் என்றது மன்மதனை. நேர்வருபெண் என்றது வள்ளிநாயகியை. இரண்டே ஒன்றேயென்னு மேகாரங்கள் உம்மைப் பொருள. சம்பரன் - ஓரசுரன், இவன் மன்மதனைக் கடலிற் கொடுபோ யெறிந்து பிறகு, அவனாலேயே கொல்லப்பட்டான். சம்பரனைக் கொன்றதனால் மன்மதனுக்குச் சம்பராரி யென்னும் பெயர் வழங் கும். வள்ளிநாயகி தன் கருத்திற் கிணங்காமையால் வாட்டமுறுவ தொழித்தற்கு மூத்தநாயனார் யானையுருக்கொடு வந்தாராதலால், 'நீயன்று புனத்துயிர் சோர்வது கண்டே முன்போதுங் கம்பமதத் தர் சகோதர' என்றார். கருணாநிதி - கருணைக்கடல், கருணாநிதி அண்மைவிளியாதலா னியல்பாயிற்று. (௬)

திங்களு தற்றிரு மாதொடு நின்றே மன்றுடுஞ், செங்
 கண்வி டைக்கொடி யோனருள் கன்றே பொன்றேயா,
பெங்களு எத்தமு தூறுக ரும்பே யன்பாளர்க்,
 கின்பம ளிக்குமெய்ஞ் ஞானம ருந்தே யெந்தாயின்,
கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே வண்டுதுங்,
 கொந்தள கக்குற மான்வளர் குன்றே யென்றேதுங்,
கங்கைம கட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை,
 கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை.

(இ - ள்.) திங்கள் நுதல் - பிறைபோன்ற நெற்றியையுடைய; திருமாதொடு நின்று - திருமகளோடு நின்று, மன்றுடும் - பிரார்த்திக்கிற, செங்கண்விடை - செங்கண்மாலாகிய இடபத்தை, கொடியோன் - கொடியாயுயர்த்தவனுகிய சிவபிரான், அருள் - ஈன்றருளின, கன்றே—, ஒன்றே ஆய் - ஒருபொருளேயாகி, எங்கள் உள்ளத்து-எங்கள் மனத்தில், அமுது ஊறு கரும்பே - அமுதஞ் சுரக்கின்ற கரும்பே, அன்பாளர்க்கு - அன்புடையவருக்கு, இன்பம் அளிக்கும் - ஆநந்தத்தைக் கொடுக்கிற, மெய்ஞ்ஞானம் மருந்தே - உண்மையாகிய ஞானுமிர்தமே, எம் தாயின் - எமது தாயாகிய சிவையின், கொங்கு அலர் - வாசனைபரந்த, மைக்குழல்வாழ் - கருங்கூந்தலில் வாழ்கின்ற, பொறிவண்டே - புள்ளிகளையுடைய வண்டே; வண்டு ஊதும் - வண்டுகளூதப்பெற்ற, கொந்து - பூங்கொத்துக்களணிந்த, அளகம் - அளகபாரத்தையுடைய, குறமான் வளர் குன்றே-குறமான் வளர்தற்குரிய குன்றமே, என்று ஓதும்- என்று அழைக்கிற, கங்கை மகட்கு - கங்காதேவிக்கு, ஒருகால் முளை - ஒரு புதல்வனே, செங்கோ செங்கீரை—, எ-று.

பொறிவண்டே யென்பதில் பொறி சாதியடை. கங்கை மகள் - கங்கையாகிய பெண். கால்-சந்ததி. அதில் முளைத்தலாற் புதல்வனைக் கான்முளை யென்றார். முளை தொழிலாகுபெயர். இது அண்மைவிளி. (ம)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.



## தாலப்பருவம்.



பில்கும் பசுந்தே னசும்பிருந்த பின்றூ ழளகத் தரமகளிர்,
 பேதைக் குறும்பு விளையாடும் பேரா யத்துச் சிறு மருங்குற்,
கொல்குங் கொடிபோய் நுடங்கிபிட வோங்கும் பளிக்கு நிலாமுற்றத், துயர்சூ ளிகையின் மரகதத்தி னொளிகால் வீசத் தெளிவிசும்பிற்,
பல்குஞ் சுரபித் தரங்கநெடும் பாகீ ரதியின் கரைகிளைத்த, பசும்புல் லெனச்செந் நாவளைக்கும் பைம்பொற் றலங்கள் பலகோடி,
மல்குஞ் செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலேலோ.

(இ - ள்.) பில்கும் - சிந்துகிற, பசுதேன் - பசிய தேன், அசும்பு இருந்த - கசிந்துகொண்டிருக்கிற, பின்தாழ் அளகத்து - பின்னே தொங்குகிற அளகபாரத்தையுடைய, அரமகளிர் - தெய்வப் பெண்கள், பேதைகுறும்பு விளையாடும் - அறியாமையாலே குறும்பு விளையாடுகிற, பேர் ஆயத்து - பெரிய ஆயத்தினது, சிறு மருங்குற்கு - சிறிய இடைக்கு, ஒல்கும் - தோற்கின்ற, கொடி போய் நுடங்கியிட - பூங்கொடிகள் சென்றசையாநிற்றலானும், ஓங்கும் - உயர்ந்த, பளிக்குநிலா முற்றத்து - பளிங்கினாற் செய்யப்பட்ட நிலா முற்றத்தின், உயர் சூளிகையில் - உயர்ந்த சிகரத்தில், மரகதத்தின் ஒளி கால்வீச - மரகதத்தின் பிரகாசம் வீசலானும், தெளிவிசும்பில் - தெளிந்த சொர்க்கலோகத்தில், பல்கும்-பரவிய, சுரபித்தரங்கம் - காமதேநுத் தொகுதியானது, நெடுபாகீரதியின் கரைகிளைத்த - நெடிய ஆகாயகங்கையின் கரையில் செழித்திருக்கிற, பசும்புல் என-பசிய புல்லென்று நினைத்து

செங்நாவளைக்கும் - செவந்தநாவை வளைக்கிற, பைம்பொன் தலங்கள் - பசும்பொன்னுலியன்ற மாடங்கள், பலகோடி மல்கும் - அநேககோடிகள் நிறைந்த, செல்வம் - செல்வப் பெருக்கமைந்த, கந்தபுரி வாழ்வே - கந்தபுரிவாழ்வோனே, தாலோதாலேலோ—, மலையாள் வயிறுவாய்த்த - மலைமகள் வயிற்றிற் பிறந்த, முழுமணியே - முழுரத்நமே, தாலோதாலேலோ—, எ-று.

அசும்புதல் - கசிதல். பின்ருழ் - பின்னற்ருழிறங்கிய எனினும் பொருந்தும். குறும்பு - சிறு விளையாட்டு. முழுமணி - தோளாமணி. மேன்மாடத்துப் பசுங்கொடிகளின் நுடக்கத்துச் சாயலும் மரகதத்தின் சாயலும் பொன்னுலகிற்சென்று தோன்ற அவற்றை யங்குள்ள காமதேனுத் தொகுதியானது பசும் புல்லெனக் கருதிச் செந்நாவளைக்குமென்பது கருத்து. இதனுல் அத் திருப்பதியின் செல்வப்பெருக்குத் தோன்றிற்று. வாழ்வு-தொழிலாகுபெயர். வாழ்வு கருவியாகு பெயராகக் கொண்டு செல்வம் எனினுமாம். வாழ்வே மணியே தாலேலோ என முடிக்க. இச்செய்யுட் கருத்தமைத்து, "மழைக்கண் மங்கையர் பயிறர மரகதமணியி, னிழைத்த செய்குன்றின் பைங்கதிர் பொன்னிலத் தெய்தக், குழைத்த வைந்தரு நீழலிற் குலவுமா னினங்க, டழைத்த புல்லென விரைவொடு தனித்தனி கறிக்கும்" என்றிவ்வாறு பிறருங் கூறுதல் காண்க. (க)

தொடுக்குந் தொடைவெண் டுகிற்கொடிக ளோடு நீர்ப்
பரவை முகம்புழுங்கத், தோன்றும் பரிதி மனித்திண்
டேர் தூண்டுங் கலின வாம்பரியை,
முடுக்குஞ் சுடர்ப்பொற் றலத்திழைத்த முழுநீ லத்தி
னெழுகொளியின், முழுகுங் கடவுண் மால் யானை முகி
லிற் றேன்ற வகலிடனின்,
றடுக்குங் களிறென் றாமகளி ரையுற் றிடத்தன் வெளிறு
முடம், பளறு படிந்த தெனக்கங்கை யாற்றுப் பாம்
பொனசும்புபுனன்,

மடுக்குஞ் செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலே
லோ.

(இ - ள்.) தொடுக்கும்-தொடுக்கப்பட்ட, தொடை - வரிசை யாகிய, வெள் துகில் கொடிகள் - வெண்கொடிச் சீலைகள், தொடு-சகரரால் தோண்டப்பட்ட, நீர்-நீரையுடைய, பரவை-கடலினது, முகம் புழுங்க - இடம் வெதும்ப, தோன்றும் - உதிக்கிற, பரிதி-சூரியனது, மணி - அழகிய, திண்தேர் - வலிய தேரை, தூண்டும்-செலுத்துகிற, கலினம் - கடிவாளம் பூட்டின, வாம்பரியை - தாவிச்செல்லுகிற குதிரைகளை, முடுக்கும் - அவசரப்படுத்துதற் கிடமாகிய, சுடர் - ஒளியையுடைய, பொன்தலத்து - பொன் மாளிகைகளில், இழைத்த - இழைக்கப்பட்டிருக்கிற, முழுநிலத்தின் - முழு நிலரத்தினத்தின், ஒழுகு ஒளியில் - ததும்புகின்ற ஒளியில், முழுகும் - மூழ்குகின்ற, கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, மால் யானை-பெரிய யானையானது, முகிலின் தோன்ற - மேகம்போலத் தோன்ற, அகலிடம் நின்று அடுக்கும் களிறு என்று - மண்ணுலகத்தினின்றும் வந்த யானையென்று, அரமகளிர்-தெய்வப் பெண்கள், ஐயுற்றிட-சந்தேகிக்க, தன்வெளிறும் உடம்பு - தன் வெளுத்த வுடம்பானது, அளறு படிந்தது என - சேறு படிந்திருக்கின்றதென்று, கங்கையாற்று - கங்காநதியின், பசும்பொன் அசும்பு புனல் - பைம்பொன்போலத் ததும்புகிற நீரில், மடுக்கும் - மூழ்குகின்ற, செல்வம் - செல்வப்பெருக்குள்ள, கந்தபுரிவாழ்வே-கந்தபுரிச் செல்வமே, தாலோ தாலேலோ—, மலையாள் வயிறு வாய்த்த - மலைமகள் வயிற்றிற் பிறந்த, முழுமணியே - முழுரத்நமே, தாலோதாலேலோ—, எ-று.

கடவுண்மால் யானையென்றது ஐராவதத்தை. பரவை தொழிலாகுபெயர். முகம்-இடம். மணி-மணிகள் கட்டிய எனினுமாம். வாவும் என்பது வாம் எனத் தொகுத்தலாயிற்று. தன் என்றது ஐராவதமாகிய தனது என்க. இதுவு மேலைச் செய்யுளே போலக் கந்தபுரியின் செல்வப்பெருக்கைக் கூறிற்று. அளறு - கருஞ்சேறு எனக் கொள்க. (உ)

நீற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத் திரண்மா மணிகள்
வெயில் விரிக்குஞ், செம்பொற் றலத்துப் பேரமர்க்கட்
சிறியார் நறிய வகிற்புகையிட்,

டாற்றுங் குழற்காட் டினைப்புயலென் றாடுமயில்கண் டம்
பவளத், தரும்பு நகையைச் சகோரப்புள் ளருந்த
விரிந்த முழுநகைவிண்,

டூற்று நிலவுக் கிந்துசிலை யொளிர்மா ளிகையுஞ் சூளிகையு,
முருகிப் பெருகுங் கலுழிவெள்ள முவரோ டுவரிக் கடற்
புலவு,

மாற்றுங் கடவுட் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ,
மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலே
லோ.

(இ - ள்.) நீற்றும்-பூசப்பட்ட, சுதை - சுண்ணச்சாந்தானது, வெள்நிலவு எறிப்ப - வெண்ணிலா வீச, திரள் - கூட்டமாகிய, மாமணிகள் - பெரிய மணிகள், வெயில் விரிக்கும் - வெயிலைப் பரப்புகிற, செம்பொன் தலத்து - செம்பொன் மாளிகைகளின் மேல், பேர் அமர் கண் - பெரும்போர் செய்கிற கண்களையுடைய, சிறியார் - சிறுமியர், நறிய - நறுமணமுள்ள, அகில்புகையிட்டு- அகிற்புகையினுல், ஆற்றும் - புலர்த்துகிற, குழல்காட்டினை - கூந்தற்காட்டை, புயல் என்று ஆடும் - மேகமென்றெண்ணி யாடுகிற, மயில் கண்டு - மயில்களைப் பார்த்து, அம்பவளத்து - அழகிய பவளம்போலும் வாயினிடத்துண்டாகிற, அரும்பு நகையை - புன்னகையை, சகோரப்புள் அருந்த - சகோரப்பறவையுண்ண, விரிந்த முழுநகை - பரந்த முழுநகையானது, விண்டு ஊற்றும் நிலவுக்கு- மிகவூற்றுகின்ற நிலாவுக்கு, இந்துசிலை-சந்திரகாந்தக் கற்களால், ஒளிர்-விளங்குகிற, மாளிகையும் சூளிகையும் - மாடங்களும் மேல் மாடங்களும், உருகி பெருகும் - உருகிப் பெருக்கெடுக்கிற, கலுழி வெள்ளம் - கலங்கல் வெள்ளமானது, உவரிகடல் - உவர்த்தலை யுடையதாகிய கடலினது, உவரோடு - உவர்ப்போடு, புலவும் - புலால் நாற்றத்தையும், மாற்றும்-ஒழிக்கின்ற, கடவுள்-தெய்வத்

தன்மையுள்ள, கந்தபுரி வாழ்வே-கந்தபுரிச் செல்வமே, தாலோ தாலேலோ—, மலையாள் வயிறுவாய்த்த - மலைமகள் வயிற்றிற் பிறந்த, முழுமணியே - முழுரத்நமே, தாலோதாலேலோ—, எ-று.

அமர்க்கண் - அமர்த்தகண். அமர்த்தல்-அமர் செய்தல், இது பெயரடியாகப் பிறந்தவினை. இதனை, "பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன், பெண்டகையாற் பேரமர்க்கட்டு" என்னுந் திருக்குறட்குப் பரிமேலழகர் வரையுரையானறிக. அகிற்புகையிட்டு என்பதற்கு அகிற்புகை யூட்டியென் றுரைத்தலுமாம். மயிர்ச்செறிவு தோன்றக் 'குழற்காடு' என்றார். "திண்ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டிற், கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ" என்ற மேலோர் செய்யுளினுங் குழற்காடென்றல் காண்க. மேகத்தைக் கண்டும் அதுபோலும் வேறொன்றைக் கண்டும் மயிலாட லியல்பாதலான், 'குழற்காட்டினைப் புயலென்றாடு மயில்' என்றார். "தெளிதரற் காரெனச் சிரனஞ்சிற்றம்பலத் தடியேன், களிதரக் கார்மிடற்றோ னடமாடக் கண்ணுற்ற முழவந், துளிதரற்காரென வார்த்தன வார்ப்பத் தொக்குன் குழல்போன், றளிதரக் காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே" என்றார் மணிவாசகரும். (ரு)

கிளைக்குஞ் சகரர் தொட்டபெருங் கிடங்கென் றிடங்கர் மாவியங்கும், கிழ்நீ ராழவக் குண்டகழிக் கெழுமு புனற்றென் டிரைமேய்ந்து,

திளைக்குங் கமஞ்சூ னெடும்புயலைச் சிறுகட் பெருங் கைப்பகடென்றோர், செங்கட் களிறு பிளிற நிமிர்திகிரி கிரியென் றிவர்ந்துடல,

பிளைக்கும் படிவின் டொடரிவந்த வெழிற்பொற் புரிசை விண்டுபதத், தேறு மேனி பொற்றருவுக் கிடுவேலிபுமாயேழலகும்,

வளைக்குங் கடவுட் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலேலோ.

(இ - ள்.) இளைக்கும் - நெருங்கின, சகரர்தோட்ட - சகரர் தோண்டின, பெருகிடங்கு என்று-பெரிய கடலென்று நினைத்து, இடங்கர்மா - முதலைகள், இயங்கும் - சஞ்சரிக்கிற, கீழ்நீர் - கீழ் நீரையுடைய, அழுவம் - பள்ளமாகிய, குண்டு அகழி - ஆழ்ந்த அகழியில், கெழுமு - நிறைந்த, புனல் - நீரின், தெள்திரை - தெளிவாகிய அலைகளை, மேய்ந்து - குடித்து, திளைக்கும் - நெருங்கின, கமஞ்சூல் - நிறைவாகிய சூலினையுடைய, நெடும்புயலை - பெரிய மேகத்தை, சிறுகண் பெருகை - சிறிய கண்களையும் பெரிய துதிக்கையினையுமுடைய, பகடு என்று - யானையென்றெண்ணி, ஓர் செங்கண் களிறு பிளிற - ஒப்பற்ற செங்கண்யானைகள் சத்திக்க, நிமிர்-உயர்ந்த, திகிரிகிரி என்று - சக்ரவாளகிரியென் றெண்ணி, இவர்ந்து - ஏறி, உடலம் இளைக்கும்படி - உடம்பு மெலியும்படி, விண்தொட நிவந்த - ஆகாயத்தைத் தீண்டும்படி யுயர்ந்த, எழில்-அழகாகிய, பொன்புரிசை - பொன் மதிலானது, விண்டுபதத்து-ஆகாயத்திற்கு, ஏறும் ஏணி - ஏறத்தகுந்த ஏணியும், பொன்தருவுக்கு - அழகிய கற்பகத்தருவுக்கு, இடுவேலியும்-இட்டவேலியும், ஆய்-ஆகி, எழ் உலகும் வளைக்கும்-எழுலகங்களையும் வளைக்கின்ற, கடவுள் - தெய்வத்தன்மையமைந்த, கந்தபுரிவாழ்வே - கந்தபுரிச் செல்வமே, தாலோதாலேலோ—, மலையாள் வயிறுவாய்த்த - மலைமகள் வயிற்றிற் பிறந்த, முழுமணியே - முழுரத்நமே, தாலோ தாலேலோ—, எ-று.

இடங்கர்மா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கீழ்நீர்-ஊற்றுநீர். கமஞ்சூல் - முதிர்ந்தசூல். "கார்கோண்முகந்த கமஞ் சூல்" என்றார் பிறரும். சிறுகட்பெருங்கை - முரண்டொடை. விண்டுபதம்-ஆகாயம். (ச)

சோலைப் புறமுப் புடைக்கனிக டேக்கு முடக்கெதங் கிமைய
வர்தந், தோன்றுற்றிருவோ லக்கத்துத் தோகை மயிலி
னடங்குயிற்று,

மேலக் கருங்கொந் தளவளகத் திருமா தருக்கு முதிர்
வேனி, லிளைப்பாற் றுதற்குத் தாற்றெடுஞ் செவ் விள
நீர் கொடுப்ப வீற்றுளைந்த,

காலப் புயலின் முகந்துடைக்குங் கமுகு பழுக்காய்ப் பவள
முடன், கதிர்முத் திட்டுச் செழும்பாளை கற்றைக்
கவரி புடையிரட்ட,
மாலைப் பழனப் பரிதிபுரி வாழ்வே தாலோ தாலேலோ.
மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ
தாலேலோ.

(இ - ள்.) சோலைப்புறம் - சோலைகளில், முப்புடைக் கனி
கள் - தேங்காய்களை, தூக்கும் - தாங்கிய, முடம் - வளைவாகிய.
தெங்கு - தென்னமரங்கள், இமையவர் தோன்றல் - தேவசா
சனது, திருவோலக்கத்து - திருவோலக்கத்தில், தோகை - கலா
பத்தையுடைய, மயிலின் - மயில்போல, நடம்குயிற்றும் - நடனம்
செய்கிற, எலம் - மயிர்ச்சாந்தணிந்த, கருங்கொந்தளம் அளகத்து-
கரிய குழற்சியாகிய கூந்தலையுடைய, இளமாதருக்கு-இளம்பெண்
களுக்கு, முதிர்வேனில் இளைப்பு ஆற்றுதற்கு - முதிர்வேனிற் பரு
வத்தின் மெலிவை யொழித்தற்கு, தாற்றொடும் - தாறுகளோடும்,
செவ்விளநீர் கொடுப்ப - செவ்விளநீர்களைக் கொடுக்க, ஈற்று -
இறுதிக்காலத்தில், உளைந்த - வருந்தின, காலப்புயலின் - கார்
கால மேகத்தின், முகம் துடைக்கும் கமுகு - முகத்தைத் துடைக்
கிற கமுகமரங்கள், பழுக்காய் - பழுத்த காயாகிய, பவளமுடன்-
பவளத்தோடு, கதிர் - ஒளியுள்ள, முத்து இட்டு - முத்துக்களையுந்
தந்து, செழும்பாளை - செழிய பாளைகளாகிய, கற்றைக்கவரி - கற்
றைச் சாமரங்கள், புடை இரட்டும் - பக்கத்தில் அசையாநிற்கிற,
மாலைபழனம் - வரிசையாகிய வயல்கள்சூழ்ந்த, பரிதிபுரிவாழ்வே
தாலோதாலேலோ—, மலையாள் வயிறுவாய்த்த முழுமணியே—,
தாலோதாலேலோ—, எ-று.

முப்புடை - முப்புடைப்பு. புடைப்பினை மொத்தி யென்பர்.
திருவோலக்கம் - திருப்பெருஞ்சபை. மயிலின் என்பதில் இன்
ஐந்தாவ தொப்புப்பொருட்டு. தாறு - குலை. கமுகம்பழக் குலை
பவளம்போலச் செவந்திருத்தலும் அதன்கண் முத்துப்படுதலு
முண்மையான். 'கமுகுபழுக்காய்ப் பவளமுடன் கதிர்முத்திட்டு'
என்றார். ஆலைப்பழனம் எனக் கொண்டு கரும்புவயல் என்பாரு
முளர். மோனையின்மையால் மாலையெனக் கோடலே நேர்மையாம்.

வே று.

மாலி மயத்து மடப்பிடி பெற்று வளர்த்த விளங்களிறே,
மழ விடை யேதிரு மாமடி கட்கென வைத்த கவுத்துவமே,

மூல மெனக்குல நான்முறை யோலிடு முழுமுத லேமூவா,
முக்கட் கனிகனி யுஞ்சுவை யேதனி முத்திக் கொருவித்தே,

காலை யிளங்கதி ருக்கெதிர் முதிருங் கதிர்செம் பவளமுடன்; கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கொல் கமுகுகோ லெனவளருஞ்,

சாலி வயற்றமிழ் வேளூ ரடிகே டாலோ தாலேலோ,
சங்கத் தமிழின் றலைமைப் புலவா தாலோ தாலேலோ.

(இ-ள்.) மால் இமயத்து - பெரிய இமயமலையிற் பிறந்த, மடப்பிடி - இளம்பிடியானது, பெற்றுவளர்த்த - ஈன்று வளர்த்த, இளங்களிறே - யானைக்கன்றே, மழவிடையே - இளமை பொருந்திய இடபமே, திருமாமடிகட்கு என வைத்த - திருமாமணுகிய அடிகட்கென்று வைத்த, கவுத்துவமே - கௌஸ்துப மணியே, மூலம் என - எல்லாப் பொருள்களுக்கும் மூலகாரணனென்று, குலம் - மேலான, நால்மறை - நான்கு வேதங்களும், ஓலயிடும் - முறையிடுதற்குரிய, முழுமுதலே - முழுமுதற் பொருளே, மூவா - அழியாத, முக்கண்கனிகனியும் சுவையே - முக்கண்ணையுடைய கனியினிடத்துப் பழுத்த இரதமே, தனி - ஒப்பற்ற, முத்திக்கு - வீட்டுக்கு, ஒருவித்தே - ஒரு காரணனே, காலை - காலையில் தோன்றுகிற, இளங்கதிருக்கு - இளஞ் சூரியனுக்கு, எதிர் - எதிராக, முதிரும் - முதிர்கின்ற, கதிர் - கதிர்கள், செம்பவளமுடன் - செம்பவளங்களோடு, கதிர் முத்து இட்டு வணங்க - ஒளியுள்ள முத்துக்களையிட்டு வணங்காநிற்க, கன்னல்கொல் - கரும்போ, கமுகுகொல் - கமுகோ, என-என்று (கண்டோர்) சொல்லும்படி,

வளரும் - வளராநின்ற, சாலிவயல் - செந்நெல்வயல் சூழ்ந்த, தமிழ் - தமிழ்வழங்குகிற, வேளூர் அடிகேள் - வேளூரடிகளே, தாலோதாலேலோ—, சங்கத்தமிழின் - தமிழ்ச் சங்கத்தின், தலைமைப் புலவா - தலைமைப் புலவனே, தாலோதாலேலோ—, எ-று.

மால் மேகத்துக்கோர் பெயராதலால் மாலிமயம் என்றதற்கு மேகமூடிய இமயம் எனப் பொருள் கூறலுமாம். இமயத்து மடப்பிடி யென்றது உமாதேவியை. மடப்பிடி உவமையாகுபெயர். மாமடிகள் என்றது திருமாலை. ஒலிடும் - ஒலயிடும் என்பதன் ஒருகுத்தல். (கூ)

கருமுகி லுக்கரி தாமடி வாரங் கண்டிரு பறவைகடங்,
 கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை காணாதுட்
 குவரப்,
பொருபுன லருவித் தலையின் மிசைதவழ் புதுமதி நில
 வொழுகப், புள்ளூ ரிற்பொலி வெள்ளி மலைக்கட்
 பொன்மலை யைக்குவவு,
குருமணி வயிரப் புயமெனு மெட்டுக் குவடுஞ் சுவடுபடக்,
 குந்திப் பொருமிரு கோடு படைத்ததொர் கூந்தற்
 பிடிபெற்றுத்,
தருமொரு தொந்தித் தந்திக் கிளையாய் தாலோ தாலே
 லோ, சங்கத் தமிழின் றலைமைப் புலவா தாலோதாலே
 லோ.

(இ - ள்.) கருமுகிலுக்கு-கரிய மேகத்துக்கு, அரிது ஆம்-அரிதாகிய, அடிவாரம்-அடிவாரத்தை, இருபறவைகள்கண்டு-இரண்டு புட்கள் கண்டு, தம்கண்களிபொங்க - தமது கண்கள் களிப்புமிக, ஓர் பறவை - ஒரு புள்ளானது, முடித்தலை காணாது - முடித்தலையைக் காணமாட்டாமல், உட்குவர - நாணிவர, பொருபுனல் - அலைமோதுகிற, புனல் அருவி - நீரருவிகளையுடைய, தலையின் மிசைதவழ் - உச்சிமீது தவழ்கின்ற, புதுமதி நில ஒழுக - புதுமதி

யின் நிலாவெறிக்க, புள்ளூரில் பொலி - புள்ளூரில் விளங்குகிற, வெள்ளிமலைக்கண்-வெள்ளிமலையினிடத்துள்ள, பொன்மலையை-பொன்வரையை, குவவு - திரட்சியாகிய, குருமணிவயிரம் - நிறமுள்ள அழகிய வயிரத்தை நிகர்த்த, புயம் என்னும் - தோள்களென்கிற, எட்டு குவடும் - எண் குவடும், சுவடுபட - தழும்புபட, குத்திபொரும் - குத்திப் போர்செய்தற்குரிய, இருகோடு படைத்தது - இரண்டு கொம்புபடைத்ததாகிய, ஓர் கூந்தல்பிடி-ஒப்பற்ற கூந்தலையுடைய பெண்யானையானது, பெற்றுதரும் - ஈன்றளித்த, ஒரு தொந்தி - ஒப்பற்ற தொந்தியையுடைய, தந்திக்கு இளையாய்-யானைக்கிளையவனே, தாலோதாலேலோ—, சங்கத்தமிழின் - தமிழ்ச் சங்கத்தின், தலைமைப் புலவா - தலைமைப் புலவனே, தாலோ தாலேலோ—', எ-று.

கருமுகில் என்றது திருமாலை. இருபுட்கள் என்றது சம்பாதி சடாயு என்பவரை. ஓர் பறவை யென்றது பிரமனை. 'குருமணி வயிரப் புயமெனு மெட்டுக் குவடுஞ் சுவடுபடக், குத்திப் பொருமிருகோடு படைத்ததொர் கூந்தற்பிடி' என்றது உமாதேவியை. இங்ஙனங் குத்திப்பொருத தெஞ்ஞான்றெனின், திருக்கச்சியில் கம்பையாற்றிற் பூசித்துக்கொண்டிருந்த ஞான்றென்க. 'மாக்கைக் கிரங்குங் குருகும் வளர்சக்ர வாகப் புள்ளுந், தாக்கச் சரபங் குழைந்த தெவ்வாறு சகதலத்தை, யாக்கிப் பெருக்கித் திருவறச் சாலையி லன்னமிட்டுக், காக்கைக் கொருகொக்கின் கீழே யிருக்குங் கருங்குயிலே' என்றார் பிறரும். 'எட்டுக் குவடுஞ் சுவடுபடக் குத்திப் பொருமிரு கோடு படைத்ததொர் கூந்தற்பிடி' என்றதனு லிறைவியி னாற்றலுந் தொனிக்கின்றது. தந்தி-தந்தத்தையுடைய தெனப் பொருள்படுவதோர் வடசொல். (எ)

உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட வொளிவிடு
முழுமணியே, யுயர்மறை நூல்கலை முடிவின் முடிந்திடு
மொழுகொளி மரகதமே,

விண்ணொடு மண்ணை விழுங்கி யருட்கதிர் விரியு மிளஞ்சுடரே, மெய்ப்புலன் வேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே,

புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும் புனித நறுங் கனியே, புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை புத்தமு தக்கடலே,
தண்ணொளி பொங்கிய கருணை நிதியே தாலோ தாலே லோ, சங்கத் தமிழின் றலைமைப் புலவா தாலோ தாலே லோ.

(இ-ள்.) உள்நெகிழ் - மனமுருகுகின்ற, தொண்டர் - அடியாரது, உள்ளத்து - மனத்திலுள்ள, இருள் சிந்திட - (அஞ்ஞானமாகிய) இருள் ஒழிய, ஒளிவிடும் - ஒளிவீசுகின்ற, முழுமணியே - முழுமாணிக்கமே, உயர் - உயர்ந்த, மறை நூல் கலைமுடிவில் - மறையும் நூலும், கலையுமாகிய இவற்றின் அந்தத்தில், முடிந்திடும் - முடியப்பெற்ற, ஒழுகு ஒளி மரகதமே - ஒழுகாநின்ற ஒளியையுடைய மரகதமே, விண்ணொடு மண்ணை - விண்ணுடனே மண்ணையும், விழுங்கி - உட்கொண்டு, அருள்கதிர் விரியும் - அருளாகிய் கிரணங்கள் விரியப்பெற்ற, இளஞ்சுடரே - இளஞாயிறே, மெய்ப்புலன் - உண்மையாகிய அறிவினால், வேய்ந்து சமைந்தது - வேயப்பெற்றுச் சமைந்ததாகிய, ஓர் வீட்டை - ஒப்பற்ற வீட்டினை, விளக்கும் - விளங்கச்செய்கிற, விளக்கு ஒளியே - தீபப்பிரகாசமே, புண்ணியம் நாறும் - புண்ணியம் பரிமளிக்கிற, ஓர் பெண்கனி கனியும் - ஒரு பெண்கனி விரும்பும், புனிதம் - பரிசுத்தமாகிய, நறுங்கனியே - நல்ல கனியே, புள்ளூர் என - புள்ளூரிற்போல, எமது உள்ளத்தடம்நிறை - எமது மனமாகிய இடத்தில் நிறைந்த, புது அமுதம் கடலே - புதிய அமிர்தசாகரமே, தண் ஒளி பொங்கிய - தட்பமாகிய ஒளி மிகுந்த, கருணைநிதியே - கிருபாநிதியே, தாலோ தாலேலோ—, சங்கத்—, எ-று.

மறைநூல் கலைமுடிவில் - என்பதனை மறை முதலியவற்றிறுதியி லமைத்து வேதத்தின் முடிவிலும் ஆகமாதிகளாகிய நூல்களின் முடிவிலும், அறுபத்துநான்கு கலைகளின் முடிவிலும் எனப் பொருளுரைக்க. மெய்ப்புலன்வேய்ந்து சமைந்ததொர் வீட்டை என்பதற்கு உண்மையறிவாற் புலன்களை வென்றதனுளதாகிய வொப்பற்ற வீட்டினையென் றுரைத்தலுமாம். 'புண்ணியநாறுமொர் பெண்கனி' என்றது உமாதேவியை. புது

அமுதம் என்பது புத்தமுதமென வொற்றிரட்டித்தது விரித்தல். 'புத்தமிர்தபோகமும் கற்பக நன்னிழலும்' என்றார் பெரியாரும். (அ)

வேறு.

தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதுஞ்
சீலா மலைக்கொடி பாலா நீலா மேலாகுந்
தேவாதி பற்கொரு தேவா வோவா தேகூவுங்
காலாயு தக்கொடி வீறு வேறு வேறேறுங்
காபாலி பெற்றகு மாரா வீரா பேராளா
சேலார்வ யற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனாப திப்பெரு மாளே தாலோ தாலேலோ.

(இ - ள்.) தோலாத - தோல்வியடையாத, முத்தமிழ்நாவா - முத்தமிழ் நாவனே, மூவா - முதிராத, மா ஆம் - மாமரவுருவாய் வந்த, அ - அந்த, சூர் - சூரபன்மனது, வேர் அற - வமிச மூல மற்றுப் போகும்படி, தொடு - தொட்ட, வேலா - வேற்படையை யுடையவனே, நூலா நூல் ஓதும் சீலா-வேதத்தினால் சொல்லப் பட்ட வொழுக்கத்தை யுடையவனே, மலைக்கொடி பாலா - மலை மகளுக்குப் பாலகனே, நீலா - ஒளியுருவனே, மேலாகும் - மேன் மையாகிய, தேவாதிபற்கு ஒருதேவா - தேவாதிபனுக்கு ஒப்பற்ற தேவனே, ஓவாதே கூவும்-இடையறாமற் கூவுகின்ற, காலாயுதம் கொடி - சேவற்கொடியையுடைய, வீறு - மேன்மையுள்ளவனே, ஏறுவ றுஏறும்-(ஒருவரும்) ஏறாத ஏற்றின் மீதேறுகின்ற, காபாலி பெற்ற குமாரா-சிவபெருமான் பெற்ற குமாரனே, வீரா-வீரனே, பேராளா - பிரபலனே, சேல்ஆர் வயல் - சேல்மீன்கள் நிறைந்த வயல் சூழ்ந்த, குருகூரா - புள்ளூரனே, தாலோ தாலேலோ—, சேனாபதிப் பெருமாளே - தேவ சேனாபதியாகிய பெருமானே, தாலோ தாலேலோ—, எ-று.

முத்தமிழ்நாவன் - அகத்தியற்கு முத்தமி ழறிவுறுத்த நாவினையுடையவன். நூலாநூல் என்றது ஒருவராற் செய்யப் படாத நூலாகிய வேதத்தை. நீலம் - ஒளி. கபாலகரனாதலாற் சிவபிரானைக் காபாலி யென்றார். நூலா என்பதற்கு வேதமான

வனே என்றும் ஏறு என்பதற்கு சிங்கவேறுபோன்றவனே என்றும் பொருள் கொள்ளுதலும் ஒன்று. பெருமையையுடையவனென்னும் பொருள் பயப்பதாகிய பெருமான் என்பது பெருமாள் என மரீஇயது. (௯)

ஊனாயு யிர்க்குயி ராணய் தாலோ தாலேலோ
வோதாது ணர்ந்திடு போதா தாலோ தாலேலோ
வானாவ ருட்கனு பானா தாலோ தாலேலோ
வாயாத சொற்சொலு பாயா தாலோ தாலேலோ
நானாயெ னக்கரி தானாய் தாலோ தாலேலோ
நாதாதி கட்கனு பூதா தாலோ தாலேலோ
தேனார்பொ ழிற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனா பதிப்பெரு மாளே தாலோ தாலேலோ.

(இ - ள்.) ஊன் ஆய் - உடம்புகளாகி, (அவற்றுள்ளிருக்கிற) உயிர்க்கு - உயிர்களுக்கு, உயிர்ஆனாய் - உயிரா யிருப்பவனே, தாலோ தாலேலோ—, ஓதாது உணர்ந்திடு - ஓதாதுணர்ந்த, போதா - அறிவனே, தாலோதாலேலோ—, ஆனா அருட்கு - நீங்காத கருணைக்கு, அநுபானா - அநுபானமாயிருப்பவனே, தாலோ தாலேலோ—, ஆயாத சொல் சொல் - (ஒருவராலும்) ஆராயப்படாத சொல்லைச் சொன்ன, உபாயா - தந்திரனே, தாலோ தாலேலோ—, நான் ஆய் - நானாகி, எனக்கு அரிது ஆனாய் - எனக்கரிதானவனே, தாலோ தாலேலோ—, நாதாதிகட்கு - நாதமுதலானவைகளுக்கு, அநுபூதா-அநுபூதனே, தாலோ தாலேலோ—, தேன் ஆர் பொழில்-தேன் நிறைந்த சோலைகள் சூழ்ந்த, குருகூரா-புள்ளூரனே, தாலோ தாலேலோ—, சேனாபதிப் பெருமாளே—, தாலோ தாலேலோ—, எ - று.

ஊன் - தசை, இது கருவியாகுபெயரா யுடம்பினை யுணர்த்திற்று. உயிர்க்குயிர் - அந்தராத்மா. போதம் - ஞானம். ஆயாத சொல் - பிரணவம். நாதாதிகள் - நாதமுதலாகிய தத்துவங்கள். அநுபூதம் - பிரமாணங்களைக்கொண்டறியத் தகுந்தது. தேன் வண்டு எனினுமாம். (௧௦)

தாலப்பருவம் முற்றிற்று.



## சப்பாணிப் பருவம்.



முடங்குந் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு முளரிப் பிராட்டி வைத்து, முத்தாடு பச்சைப் பசுங் கிள்ளை யெனமழலை முதிருமென் குதலை கற்பத்,
தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்ககிற் றாமமொடு தாம மிட்டுச், சுடிகைநுதல் வெயர்வுந் துடைத்தொழுகு கத்தூரி தூரியங் கொண்டு தீட்டிக்,
குடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கழகு கூரவஞ் சனமெழுதிமென், கொங்கைத் தடத்தும் பசுங்களப மப்பியவள் குற்றேவன் முற்று மாற்றித்,
தடங்குங் குமப்புயங் கொட்டிநட மிட்டவன் சப்பாணி கொட்டி யருளே, தையனு யகிமருவு தெய்வ நாயகன் மதலை சப்பாணி கொட்டி யருளே.

(இ-ள்.) முடங்கும் திரைபரவை - வளைகின்ற அலைகளை யுடைய பாற்கடலானது, வயிறு உளைந்து ஈன்ற - வயிறுநொந்து பெற்ற, நறுமுளரிபிராட்டி - நறிய தாமரைமலர்த் தவிசையுடைய திருமகள், வைத்து - தன் முன்கையில் வைத்துக்கொண்டு, முத்தாடு - முத்தமிட்டு விளையாடுகிற, பச்சை பசுங்கிள்ளை என - பச்சைப் பசுங்கிளிபோல, மழலைமுதிரும் - மழலைமுதிர்கின்ற, மெல் குதலை கற்பத் தொடங்கும் - மெல்லிய குதலைச்சொற்களைக் கற்கத் தொடங்குகிற, குறப்பாவை - குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியின், கற்றைக்குழற்கு - கற்றையாகிய கூந்தலுக்கு, அகில் தூமமொடு - அகிற் புகையோடு, தாமம் இட்டு - பூமாலைகளைச் சூட்டி, சுடிகை - சுட்டியணிந்த, நுதல் - நெற்றியிலுள்ள, வெயர்வும் துடைத்து-வேர்வையையுந் துடைத்து, ஒழுகு கத்தூரி-நெகிழ்ந்த கஸ்தூரி திலகத்தை, தூரியம்கொண்டு தீட்டி - எழுதுகோலால் எழுதி, குடங்கைக்கு அடங்கா-குடங் கைக்குள்ளடங்காத, நெடு-நெடிய, கண் கடைக்கு - கடைக்கண்ணுக்கு, அழகு கூர - அழகு மிகும்படி, அஞ்சனம் எழுதி - அஞ்சனந்தீட்டி, மெல்கொங்கைத்

தடத்தும் - மென்மையாகிய ஸ்தநப்பிரதேசத்தும், பசுங்களபம் அப்பி - பசுமையாகிய கலவைச்சந்தனம் பூசி, அவள் - அவளது, குற்றேவல் முற்றும் ஆற்றி - குற்றேவல் முழுதுஞ்செய்து, தடம்மலைபோலும், குங்குமம் - குங்குமக் குழம்பணிந்த, புயம்கொட்டி - தோள்களைத் தட்டிக்கொண்டு, நடம் இட்டவன் - நடநஞ்செய்தவனே, சப்பாணி கொட்டியருளே - இரண்டு கைகளையும் சேர்த்து ஓசையெழக் கொட்டுக. தையலுநயகி மருவு - தையலுநயகியார்ச் சேர்ந்த, தெய்வநாயகன் மதலை - சிவபிரானுக்குப் புதல்வனே, சப்பாணி கொட்டியருளே—, எ-று.

பரவை யென வாளா கூறினுரேனும் 'வயிறுளைந்தீன்ற நறுமுளரிப் பிராட்டி'யென மேல்வருதலால் பாற்கடலென்றுரையுரைக்கலாயிற்று. குடங்கை - உள்ளங்கை. குடங்கைக் கடங்காநெடுங்கண் என நெடுமையொன்றே கூறினுரேனும் எனைய அகற்சி முதலியவுங்கொள்க. 'ஈசற் கியாம்வைத்த வன்பின கன்றவன் வாங்கியவெம், பாசத்திற் காரென்றவன் றில்லையின் ளுளிபோன்றவன்றேள், பூசத் திருநீறென வெளுத் தாங்கவன் பூங்கழல்யாம், பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங்கண்களே.' 'அரியன யாமின்று காண்கின்றன கண்ணன் விண்ணனையாய், பெரியன காதம் பொருட்கோ பிரிவென ஞாலமெய்தற், குரியன வொண்முத்தும் பைம்பொன்னு மேந்தியொரோ குடங்கைப், பெரியன கெண்டைக் குலமிவையோ வந்துபேர்கின்றவே' என்றார் பெரியாரும். கூர்தல் - மிகுதல். குறப்பாவையைக் கைபுனைதலாற் றனக்குளதாகிய வுட்களிப்புப் புறம்போதரல் தோன்ற, 'தடங் குங்குமப் புயங்கொட்டி நடமிட்டவன்' என்றார். ஒரு காரியஞ் செய்யப் புகுந்தோன் அது முற்றப்பெற்ற துணையானே களிப்பின் மிகுதியாற் றேள்தட்ட லுலகியற்கை யாதலுங் காண்க. நடமிட்டவன் மதலை என்பன அண்மைவிளிகள். (க)

மழைக்கொந் தளக்கலப மயிலிளஞ் சாயலொடு மதரரிக்
கெண்டை யுண்கண், மான்கன்றை யமருலகு வாழப்
பிறந்திடு மடப்பிடியை வான வில்லைக்,
குழைக்குந் தடக்கைத் திருத்தாதை நீரொடு கொடுப்பக்
குடங்கை யேற்றுக், கொழுமலர் மணங்கமழ் மணப்
பந்தர் நிற்பவக் கொம்புமின் கொடியினெல்கி,

யிழைக்கும் பசும்பொற் றசும்பென வசும்புபொன் னிள
முலை முகங்கோட்டி நின், றெய்யாமை நோக்கும் படைக்
கட் கடைக்கணேக் கின்னமுத மூற்றவின்பந்,
தழைக்கும் பெருங்காதல் வெள்ளந் திளைத்தவன்சப்பாணி
கொட்டி யருளே, தையனு யகிமருவு தெய்வநா யகன்
மதலை சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) மழை-கருமுகில் போன்ற, கொந்தளம் - கூந்தலையும், கலபம் - தோகையையுடைய, மயில் - மயிலினது, இளஞ் சாயல் - இளஞ் சாயலையும், நெடுமதர் அரிகெண்டை உண்கண் - நெடிய மதர்த்த செவ்வரிபரந்த கெண்டைமீன் போன்ற மையுண்ட கண்களையுமுடைய, மான் கன்றை - மான் கன்றினை, அமர் உலகு - தெய்வலோகமானது, வாழ - வாழ்வடைய, பிறந்திடும் - அவதரித்த, மடப்பிடியை - இளம் பிடியை, வானவில்லை குழைக்கும் - ஆகாய வில்லை வளைக்கிற, தடம்கை - பெரிய கையினையுடைய, திருத்தாதை - திருத்தந்தையானவன், நீரொடு கொடுப்ப - தாரைநீரோடு கொடுக்க, குடங்கை ஏற்று - குடங் கையாலேற்றுக்கொண்டு, கொழுமலர் - செழிய மலர்களின், மணம் கமழ் - மணம் வீசுகின்ற, மணப்பந்தர் நிற்ப - கலியாணப் பந்தலில் நிற்க, அ - அந்த, கொம்பு - பூங்கொம்பு போல்பவள், மின் கொடியின் ஒல்கி - மின்னற்கொடிபோ லசைந்து, இழைக்கும், செய்யப்பட்ட, பசும்பொன் தசும்பு என - பசும் பொற்குடம் போல, அசும்புபொன் - பரவின தேமலையுடைய, இளமுலைமுகம் கோட்டி நின்று - இளமுலைகளும் முகம் வளைத்து நின்று, எய்யாமை நோக்கும் - அறியாமல் நோக்குகின்ற, படை - வேற்படை போன்ற, கண் - கண்கள், கடைக்கண் நோக்கு - கடைக்கண் ணேக்காகிய, இன்அமுதம் ஊற்ற - இனிய அமிர்தத்தை வார்க்க- இன்பம் தழைக்கும் - இன்ப மிகுதற்கிடமாகிய, பெருங்காதல் வெள்ளம் - பேராசையாகிய கடலில், திளைத்தவன் - - மூழ்கினவனே, சப்பாணி—, தையனுயகி—, எ - று.

மான்கன்றை, மடப்பிடியை என்றது தெய்வயானையாரை. வானவில்லைக் 'குழைக்குந் தடக்கைத் திருத்தாதை' என்றது

இந்திரனை. எய்த்தல் - அறிதல். இஃதிப் பொருட்டாதலை, 'மெய்யே யிவற்கில்லை வேட்டையின்மேன் மனமீட் டிவளும், பொய்யே புனத்தினை காப்ப திறைபுலியூ ரனையாண், மையேர் குவளைக்கண் வண்டினம் வாழுஞ் செந்தாமரைவா, யெய்யே மெனினுங் குடைந் தின்பத்தேனுண் டெழிறருமே' என்னும் மணிவாசகப் பெருமான் பாடலானு முணர்க. திளைத்தவன் அண்மைவிளி. (உ)

உண்ணிலா வுவகைத் தடங்கடல் படிந்திட்ட வும்பருஞ்
செங்களம்பட், டொண்பரிதி யுடல்கிழித் தோடுங்
கடற்றானை யொளிறுவா ளவுணர் குழுவுந்,
தெண்ணிலா மதிநுதற் றெய்வப் பிணாக்கள்வாய்த் தேன
முது மமுத வாரித், தெள்ளமுது முடனிருந் துண்ணப்
பணித்திட்ட செங்கைவேல் பைம்புனத்துப்,
பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற் பாவை
விழி வேலொ டொப்புப், பார்க்குந் தொறுந்தலை கவிழ்
த்துநின் றவடிருப் பவளத்து முத்தரும்புந்,
தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன் சப்பாணி
கொட்டி யருளே, தையனு யகிமருவு தெய்வ நாயகன்
மதலை சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) உள்-மனத்தில், நிலாவு-நிலைபெற்ற, உவகை - களிப்பாகிய, தடம்கடல் படிந்திட்ட-பெருங்கடலில் மூழ்கின, உம்பரும் - தேவர்களும், செங்களம் பட்டு - போர்க்களத்தில் இறந்து, ஒள் - ஒட்பமாகிய, பரிதி உடல் - சூரியமண்டலத்தை, கிழித்து ஓடும் - கிழித்து விரைந்து செல்லுகிற, கடல்தானை - கடல்போலும் படையாகிய, ஒளிறுவாள் - ஒளிசெய்கிற வாட்படையை யுடைய, அவுணர் குழுவும் - அவுணர் கூட்டமும், தெள்நிலாமதி- தெளிவாகிய நிலவையுடைய பிறைபோன்ற, நுதல் - நெற்றியை யுடைய, தெய்வப்பிணாக்கள் - தெய்வப் பெண்களது, வாய் - வாயி லுண்டாகிய, தேன் அமுதும் - தேன்போலும் அமிர்தத்தையும், அமுதம்வாரி - பாற்கடலிற் பிறந்த, தெள் அமுதும் - தெளிவா

கிய அமிர்தத்தையும், உடன் இருந்து உண்ண - கூடியிருந் துண்ணும்படி, பணித்திட்ட - கட்டளையிட்ட, செங்கைவேல்-செங்கை வேலானது, பைம்புனத்து - பசிய தினைப்புனத்தில், பண் உலவு- பண்கள் நடையாடுகிற, மழலை - மழலையாகிய, பசுங்கிளவி - பசிய சொற்களையுடைய, எயினர் பொன்பாவை-குறவரது பொற்பாவை போல்வாளாகிய வள்ளிநாயகியின், விழி வேலொடு ஒப்ப - கண்ணாகிய வேலோடொத்திருத்தலை, பார்க்குந்தொறும் - (முருகக் கடவுள்) நோக்குந்தோறும், தலைகவிழ்த்து நின்று - தலை குனிந்து நின்று, அவள் - அவளது (வள்ளிநாயகியினது), திருப்பவளத்து - திருப்பவளத்திலுள்ள, முத்து அரும்பும் - முத்துக்களிலுண்டாகிய, தண் நிலாவுக்கு - குளிர்ச்சியாகிய சந்திரிகைக்கு, ஒள் சகோரம் என நின்றவன் - ஒள்ளிய சகோரப்புட்போ லெதிர்பார்த்து நின்றவனே, சப்பாணி—, தையனுயகி—, எ-று.

உள் - உம்பர் என்பன இடவாகுபெயர்கள். மாண்டவரது, உதிரத்தாற் செவந்து காட்டலால் போர்க்களம் செங்களம் எனப்பட்டது. போரில் வெந்நிடாதிறந்தவர் சூரியமண்டலங் கீண்டு சென்று வீரசுவர்க்கமடைந்து தெய்வப்பெண்களை அனுபவித்தலோடு அமுதமுண்பது மியல்பாதலால், 'செங்களம்பட் டொண் பரிதி யுடல்கிழித்தோடுங் கடற்றானை யொளிறுவா ளவுணர் குழுவும், தெண்ணிலா மதிநுதற் றெய்வப் பிணாக்கள்வாய்த் தேனமுது மமுதவாரித், தெள்ளமுது முடனிருந் துண்ணப் பணித்திட்ட செங்கைவேல்' என்றார். அவுணர் இடையறாது சர்வாவஸ்த்தைகளிலும் தற்கிழமைப் பொருள்போல வாளையுடையராதல் பற்றி, அவரை 'வாளவுணர்' என்றார். திருப்பவளம் - வாய் (அதரம்) முத்து - உவமையாகுபெயராய் பல்லை புணர்த்திற்று. தண்ணிலா என்றது புன்சிரிப்பை. நின்றவன் அண்மைவிளி. (௬)

மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின் மயிலிளஞ்
சாயனு நிலா, மணிவட மறப் புடைத் திறுமாந்த கன
தன வனப்புங் குறித்து நோக்கி,

யிடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொ லெனத்திரு
வுளங்கு ழைந்தாங், கேந்திளங் கொங்கையை யிணைப்
புயத் தேந்திநின் றெல்லா வுறுப்பு நிற்கக்,

குடமுலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கியை குணங்கிடைத்
 ததுகொ லென்றக், கோதைநெடு நாணெய்த வவயவங்
 கட்குள குணகுணந் தனிதெரிக்குந்,
தடமலர்க் கைத்தலஞ் சேந்தொளி துளும்பவொரு சப்
 பாணி கொட்டி யருளே, தையனு யகிமருவு தெய்வநா
 யகன்மதலை சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்.) மடநடை-இளநடையையுடைய, தெய்வம் - தெய்வத்தன்மை யமைந்த, குறப்பாவை - குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியின், திருவுருவில் - திருவுருவிலுள்ள, மயில் இளஞ் சாயலும் - இளமையாகிய மயிற்சாயலையும், நிலாமணி வடம் அற - முத்துவடங்கள் அற்று விழும்படி, புடைத்து - புடைகொண்டு, இறுமாந்த - நிமிர்ந்த, கனதன வனப்பும் - கனதனங்களின் அழகையும், குறித்து நோக்கி - உற்று நோக்கி, இடுகு இடை பாவிக்கு - சிறுகிய இடையாகிய பாவிக்கு, இனி பிழைப்பு இல்லை என - இனிப் பிழைத்தலில்லை யென்று, திருவுள்ளம் குழைந்து - திருவுள நெகிழ்ந்து, எந்து இளங்கொங்கையை - படாத இளந்தனங்களை, இணைபுயத்து எந்நின்று-இருதோள்களானுந் தாங்கி நின்று, எல்லா உறுப்பும் நிற்க-எல்லா அவயவங்களும் நிற்க, குடமுலைக்கே - குடம்போலுந் தனங்களுக்கே, இவள் - இவளது, குடிப்பிறப்புக்கு இயைகுணம் - குடிப்பிறப்புக் கேற்ற குணம், கிடைத்தது என்று - உண்டாயிற்றென்று, அ - அந்த, கோதை - வள்ளிநாயகி, நெடுநாண் எய்த - பெருநாணடைய, அவயவங்கட்கு உள்ள - உறுப்புக்களுக்குள்ள, குணகுணம் - குணகுணங்களை, தனிதெரிக்கும் - தனித்தனியே தெரிவிக்கிற, தடமலர்-தாமரை மலர்போலும், கைத்தலம் - கைத்தலமானது, சேந்து - செவந்து, ஒளி துளும்ப - ஒளி ததும்ப, ஒரு சப்பாணி கொட்டியருளே —, தையனுயகி—, எ - று.

இடுகுதல் - சிறுகுதல். கொல் - அசை. குடிப்பிறப்பு - குறக்குடிப்பிறப்பு. குடிப்பிறப்புக் கியைகுணம்-கொலை. குடமுலைக்கு இடையைக் கோறற் ருெழிலுண்மையின், 'குடமுலைக்கே யிவள் குடிப்பிறப்புக் கியைகுணங் கிடைத்தது' என்ருர். குணகுணம் -

நற்குணம் நிக்குணம். சேந்து செம்மைப் பண்படியாகப் பிறந்த இறந்த கால வினையெச்சம். இது துளும்ப வென்னும் வினையையும், அது கொட்டியருள் என்னும் வினையையுங் கொண்டன. ()

விண்ணெண் கடற்புவன முடவுப் படத்தேந்து வேந்து
பொலி பாந்தள் வைப்பும், விரிநீர் வரைப்புமெழில்
விஞ்சைய ரிருப்புமுகை விண்டுநறை விரிமுண் டகக்,

கண்ணன் றிருப்பதமு நான்முகக் கடவுள்பூங் கஞ்சமுங்
குலிசப் பிரான், கற்பகக் காவுநின் றொண்டர்க
டொழும்புக்கோர் காணியா வைத்து மற்றத்,

திண்ணென் றடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சிறாரு மூருர்தொறுஞ், செந்தினைப் புனமூடு தண்சாரல்
பிறவுமாஞ் சீதனக் காணி பெற்றத்,

தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன் சப்பாணி
கொட்டி யருளே, தையனு யகிமருவு தெய்வநா யகன்
மதலை சப்பாணி கொட்டி யருளே.

(இ - ள்) விண் எண் - விண்ணுலகத்தாரும் மதித்தற்குரிய, கடல்புவனம் - கடல்சூழ்ந்த வுலகமுழுதும், முடவுபடத்து - வளைவாகிய தன் படங்களால், எந்து - தாங்குகின்ற, வேந்துபொலி - நாகராஜனுகிய ஆதிசேடன் விளங்குகிற, பாந்தள் வைப்பும் - நாகலோகமும், விரிநீர் வரைப்பும் - கடல்சூழ்ந்த இவ்வுலகமும், எழில் விஞ்சையர் இருப்பும் - அழகாகிய வித்தியாதரலோகமும், முகை விண்டு - மொட்டுவிரிந்து, நறைவிரி-வாசனை வீசுகிற, முண்டகக் கண்ணன் - தாமரைக் கண்ணனுகிய திருமாலின், திருப்பதமும்-அழகிய பதவியும், நான்முகக்கடவுள் - பிரமதேவனது, பூ கஞ்சமும் - அழகிய தாமரைமலர்த்தவிசும், குலிசப்பிரான் - வயிரவாளையுடைய தேவேந்திரனது, கற்பகக்காவும் - கற்பகச் சோலையும், நின்தொண்டர்கள் தொழும்புக்கு - உன் அடியாரது அடிமைத் திறத்துக்கு, ஓர் காணியாவைத்து-ஒரு காணியாட்சியாக வைத்து விட்டு, அ-அந்த, திண் என் - திணமென்ற, தடக்கை - பெரிய

கையில், வெம்சிலை - வெவ்விய வில்லையுடைய, வேடர் குடிகொண்ட - வேடர் குடிகொண்டிருக்கிற, சிறு ஊரும் - சிற்றூர்களும், ஊர் ஊர்தொறும் - ஊரூர் தோறுமுள்ள, செந்தினைப் புனமூடு- செந்தினைப்புனம்நிறைந்துள்ள, தண்சாரல் பிறவும் ஆம்-தண்ணிய சாரல்களும் பிறவுமாகிய, சீதனக்காணிபெற்று - சீதனக் காணிகளைப்பெற்று, தண்ணென் குறிஞ்சித்தலம்-தண்ணென்ற குறிஞ்சி நிலத்தை, தலையளிப்பவன் - காப்பவனே, சப்பாணி—, கைதபுயகி—, எ-று.

விண் இடவாகுபெயர், இதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. பாந்தள் - பாம்பு. வைப்பு - உலகம். விண், பாந்தள்வைப்பு என்பவை கூறியொழிந்தமையின் விரிநீர் வரைப்பு இவ்வுலகத்தை புணர்த்திற்று. கடலினும் விரிந்த நீரின்மையின் அதனை 'விரிநீர்' என்றார். 'விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத், துண்ணின் றுடற்றும் பசி' என்ற திருக்குறளினும் விரிநீர் இப்பொருட்டாதல் காண்க. முண்டகக் கண்ணன் என்பதற்குச் செந்தாமரை மலர்போலுங் கண்களையுடையவன் என்பது பொருளாயினும், ஈண்டுத் திருமாலுக்கோ ரிடுகுறிப்பெயர்போன்று நின்றது. 'தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ, றாமரைக் கண்ணா னுலகு' என்ற திருக்குறளினும் தாமரைக் கண்ணான் என்றது திருமாலுக் கோர்பெயராய் நிற்றல் காண்க விண்ணுலகு முதலிய வெல்லாவற்றையும் தொண்டர்க்குக் காணியாட்சியாக்கி, வேடர் சிற்றூர் முதலியவற்றைச் சீதனக் காணியாகப் பெற்றுக் குறிஞ்சி நிலம் புரப்பவனே சப்பாணிகொட்டியருள் என முடிக்க. (௫)

## வேறு.

கடலைச் சுவற வடித்து மிடித்துக் கனவரை துகள் கண்டுங்
 கடிதிற் றிரிய வகுப்பதை யொப்பக் காரவு ணக்கடலி,
னுடலிற் பெருகிய குருதிக் கடல்பினை வோங்கலொ டோங்கவமைத், தொட்டிய வொட்டல ரிற்பிற கிட்டவ
 ரொழியப் பிறரையெலாங்,

தடவுத் தாழியின் மத்தெறி தயிரிற் றத்துதி ரப்புனலிற்,
றசைகுடர் நிணமொடு மூளை குழம்பச் சமர்விளை யா
டல் செயுங்,

குடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ கொட்டுகசப்பாணி,
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன் கொட்டுக சப்
பாணி.

(இ - ள்.) கடலை - சமுத்திரத்தை, சுவற அடித்தும் - வற்றடித்தும், கனவரை - பெரிய மலையை, இடித்து துகள் கண்டும்- இடித்துப் பொடியாக்கியும், கடிதின் - விரைவாக, திரிய வகுப்பதை ஒப்ப - மீட்டும் வகுப்பதை நிகர்க்க, கார் அவுணக் கடலின்- கரிய அவுணக் கடலினது, உடலின் பெருகிய - உடம்பினின்றும் பெருகிய, குருதிக் கடல் - உதிரக்கடலானது, பிணம் ஓங்கலொடு ஓங்க - பிணமலைகளோடு உயர்ந்து தோன்ற, அமைத்து - அமையச் செய்து, ஒட்டிய ஒட்டலரில் - சேர்ந்த பகைவரில், பிறகிட்டவர் ஒழிய - பின்னிட்டவர் நீங்க, பிறரை யெல்லாம் - பிறரெல்லாரையும், தடவு தாழியில் - பெருந்தாழியில், மத்துஎறி தயிரின் - மத்தினால் கடையப்பட்ட தயிர் போல, தத்து - தாவுகிற, உதிரப் புனலில் - உதிர நீரில், தசை - மாமிசம், குடர் - குடல், நிணமொடு - நிணத்தோடு, மூளை குழம்ப - மூளையுஞ் சேர்ந்து சேறாக, சமர்விளையாடல் செயும் - போர் விளையாடலைச் செய்கிற, குடுமி சுடர் வடிவேலை - நுனியில் ஒளி வீசுகிற வடிவேற் படையை, தொட்டவ - விடுத்தவனே, கொட்டுக சப்பாணி—, கொழிதமிழ் - செழித்த தமிழ் வழங்குகிற, வேதபுரி குமரேசன் - வேதபுரியில் வாழ்கின்ற குமரேசனே, கொட்டுக சப்பாணி—, எ-று.

கடலைச் சுவற வடித்து என்றது, கடல் சுவற வேல்விட்ட செய்தியைக் குறித்தது. கனவரை யென்றது கிரவுஞ்ச மலையை. இக்கடலுக்கும் மலைக்கும் பிரதியாக, அவுண ருதிரக் கடலையும், பிண மலையையும் வகுத்தானென்பது போதர, 'கடலைச் சுவற வடித்து மிடித்துக் கனவரை துகள்கண்டும், கடிதிற்றிரிய வகுப்பதை யொப்பக் காரவுணக் கடலி, னுடலிற் பெருகிய குருதிக்

கடல் பிணவோங்கலொ டோங்க வமைத்து' என்றார். பிறகிட்ட வர் - வெந்கிட்டவர் (முதுகு காட்டினவர்). குமரேசன் அண்மை விளி. (௩)

சமரிற் பட்டவர் வெட்டிய பூதத் தலைவர்க ணிற்ப முதற், றாமரை நாயகன் வயிறு கிழித்துத் தந்தொழி றலை நின்றாங்,

கமரிற் குரிய மடக்கொடி யாரை யலைத்தனர் பற்றியெயிற், றவுண ரெனத்தமை யுணரார் கணவர்க ளார்ப்பில் வெடித்தபெருங்,

கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு களமெதிர் கண்டினியக், காரவு ணக்கடல் சூரொடு மாளக் கடிதிற் றடிநியடற்,

குமரக் கடவு ளெனப்பணி வேலவ கொட்டுக சப்பாணி, கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன் கொட்டுக சப் பாணி.

(இ - ள்.) சமரில்பட்டவர் - போரில் இறந்துபட்ட அவுணர் கள், வெட்டிய பூதத்தலைவர்கள் - (தங்களை) வெட்டிய பூதத்தலை வர்கள், நிற்ப - போர்க்களத்தில் நிற்க, முதல் - முதல்வனுகிய, தாமரைநாயகன் - சூரியனது, வயிறு கிழித்து - நடுவிடத்தைக் கிழித்துக்கொண்டு (வீரசொர்க்க மடைந்து), தம்தொழில் தலை நின்றாங்கு - (அவுணராகிய) தங்கட்குரிய கொடுந்தொழிலை மேற் கொண்டது போல, அமரிற்கு உரிய - போர்க்களத்தி லிறந்து பட்டோர் யாவரேனும் அவர் அடைதற்குரிய, மடக்கொடியாரை- இளங்கொடி போல்வாராகிய அரம்பையரை, அலைத்தனர் பற்றி- வருத்திப்பற்றி, எயிறு - பெரும் பற்களையுடைய, அவுணர் என- அவுணர்கள் என்று, தம்மை உணரார் - (வீரசொர்க்கஞ் சென்ற அவுணர்) தங்களை அவுணர் என்று அறியாதவர்களாகிய, கணவர் கள்-கொழுநர்கள், ஆர்ப்பின் - பேரொலியால், வெடித்த - வெடி த்த, பெருகமரில் - பெரிய வெடிப்பின் வழியேசென்ற, குருதி - உதிரமானது, பிலத்தை நிரப்பிடு - பாதலத்தை நிறைக்கின்ற,

களம் - போர்க்களத்தை, எதிர்கண்டு - எதிரிற் கண்டு, இனி - இனி, அ-அந்த, கார் அவுணக்கடல் - கரிய அவுணக்கடலானது, சூரொடுமாள - சூரனுடன் மாண்டொழியும்படி, கடிதின் - விரைவாக, தடிதி - வெட்டக்கடவை, அடல் - வெற்றியையுடைய, குமரக்கடவுள்-குமரக்கடவுளே, என-என்றுசொல்லி, பணி-வணங்குதற்குரிய, வேலவ - வேலோனே, கொட்டுக சப்பாணி—, கொழி தமிழ்—, எ-று.

சமரம்-போர் என்னும் பொருடருவதோர் வடசொல், இது சமர் என ஈறு கெட்டு நின்றது. பிரிந்த கணவர் வருகை கண்ட கற்புடைமகளிர் முகமலர்தல்போல நென்னலிரவிற் பிரிந்துபோன சூரியன் வருகைகண்டு மலர்தலால், சூரியனைத் தாமரைநாயகன் என்றார். கமர் - நிலவெடிப்பு. தடிதல் - வெட்டல். அச்சுமாறின் அறிவுமாறும் என்பது வழக்காதலின் அவுணர்களும் வீரசொர்க்கமடைந்த பிறகு, தாம் அவுணராதலை மறந்து தேவர்கட்கு ஆக்கம் வேண்டினர் என்பதை விளக்க 'காரவுணக் கடல் சூரொடு மாளக் கடிதிற் றடிதியடற் குமரக் கடவுள்' என்றார். (எ)

அற்ற வுடற்குறை யிற்ற முடித்தலை யங்கைத் தலம்வைத்
திட், டாடு பறந்தலை யோடுதி ரப்புன லாறு கடத்து
கெனுஞ்,

சிற்றலை கைக்கொரு பேரலை கைப்பெண் டேரழி பக்கழி
யுந், திகிரிப் பரிசில்வி டப்படு சுழியிற் றெருமரல்
மட்பகைஞன்,

பற்றிய திரிகை திரித்து விடத்திரி பரிசென வுஞ் சுழலும்,
பம்பர மெனவும்வ ரும்படி யவுணர் படக்கள வேள்வி
செயாக்,

கொற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ கொட்டுக சப்
பாணி, கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன் கொட்டுக
சப்பாணி.

(இ - ள்.) அற்ற உடற்குறை - அறுபட்ட வுடற்குறைகள், இற்ற முடித்தலை - வெட்டுண்டு வீழ்ந்த முடித்தலைகளை, அங்கைத்

தலம் வைத்திட்டு - அகங்கையில் வைத்துக்கொண்டு, ஆடு - கூத் தாடுகிற, பறந்தலை - போர்க்களத்தில், ஓடு - பெருகி யோடுகி ன்ற, உதிரப்புனல் ஆறு - குருதிநீர் யாற்றை, கடத்துக என்னும்- தாண்டுவிக்கவேண்டுமென்று வேண்டுகிற, சிறு அலகைக்கு - சிறு பேய்க்கு, ஒரு பேர் அலகைப் பெண் - ஒரு பெரிய பெண் பேயா னது, தேர் அழிய - தேர் அழிந்துபோக, கழியும் - அதினின்றுங் கழன்று விழுந்த, திகிரி - சக்கரமாகிய, பரிசில் - தோணியை, படு சுழியில் விட-பொருந்திய சுழியில் செலுத்த, தெருமரல் (அத் தோணி) சுழலுதல், மண்பகைஞன் - குயவன், பற்றிய - தான் பிடித்த, திரிகை - திரிகையை, திரித்துவிட - சுழற்றிவிட, திரி- (அது) சுழலாநின்ற, பரிசு எனவும் - தன்மைபோலவும், சுழலும்- சுற்றுகின்ற, பம்பரம் எனவும் - பம்பரம்போலவும், வரும்படி- சுழலும் தன்மையை யடையவும், அவுணர்பட - அவுணர்கள் இற ந்துபட, களவேள்விசெயா - களவேள்வி செய்து, கொற்றமகள்- கொற்றமகளை, புணரும் - மணந்த, சுடர் வேலவ - ஒளிர்கின்ற வேற்படையை யுடையவனே, கொட்டுக சப்பாணி —, கொழி தமிழ்—, எ - று.

உடற்குறை - தலையற்றவுடல். முடித்தலை - முடியணிந்த தலை. கடத்துக எனும் என்பது கடத்து கெனும் எனத் தொகுக் கப்பட்டது. தெருமரல் என்பதற்குப் பகுதி தெருமா. கொற்ற மகள் - துர்க்கை. பரிசில் - வட்ட வடிவாகிய வோர் வகைத் தோணி, இது மூங்கிலகணியாற் செய்யப்பட்டுப் புறத்துத் தோ லான் மூடப்பட்டிருக்கும். இதனைத் தென்னாட்டிற் காவிரியாறு முதலியவற்றில் இஞ்ஞான்றுங் காணலாம். (அ)

### வேறு.

வளரிள வனமுலை மலைமகளுக்கோர் தவப்பேறே
மறிதிரை பொரசிமிர் கருணை கொழித்த பெருக்காறே
பளியுமி ழமுதொழு வெளியினில் வைத்த சுவைத்தேனே
யறமுது தவமொடு வளர வளர்த்திடு நற்றுபே

களிமயில் கடவிவி ணடைய முடுக்கிய புத்தேளே
  கலைமறை யெனுமுரல் வரியளி மொய்த்த மலர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி
  தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி.

(இ-ள்.) வளர் - வளர்கின்ற, இளவனமுலை - இளமையாகிய அழகிய முலையையுடைய, மலைமகளுக்கு - மலையரையன் பெண்ணுக்கு, ஓர் தவப்பேறே - ஒப்பற்ற தவப்பயனே, மறிதிரைபொர நிமிர் - மடங்குகின்ற அலைகள் மோதவுயர்ந்த, கருணைகொழித்த - கருணைநீரெறிகின்ற, பெருக்கு ஆறே - வெள்ளப் பெருக்கையுடைய நதியே, அளியும் - கனிந்த, இன் அமுது - இனிய அமிர்தமானது, எழுவெளியினில் - தோன்றின வெளியிடத்தில், வைத்த - வைக்கப்பட்ட, சுவைதேனே - சுவையையுடைய தேனே, அறம் - அறநெறியானது, முதுதவமொடு வளர - பெருந்தவத்தோடு வளரும்படி, வளர்த்திடும் - வளர்க்கின்ற, நல்தாயே - நல்ல தாயே, களிமயில்கடவி - களிப்பையுடைய மயிலைச்செலுத்தி, விண் அடைய முடுக்கிய - விண்ணுலக முழுதும் முடுக்கின, புத்தேளே - தெய்வமே, கலைமறை என்னும் - நூல்கள் வேதங்கள் என்று சொல்லப்படுகிற, முரல்வரி அளிமொய்த்த - சத்திக்கிற வரிவண்டுகள் நெருங்கின, மலர்க்காவே - பூஞ்சோலையே, தெளி தமிழ் பழகிய - தெள்ளிய தமிழ் பயின்ற மதவலி - மதவலியே, கொட்டுக சப்பாணி—, தினகரபுரிவரு - தினகரபுரியிலெழுந்தருளின, தனிமுதல் - ஒப்பற்ற முதல்வனே, கொட்டுக சப்பாணி—, எ-று.

மலைமகள் - பார்வதி. முடுக்குதல் - வேகமாய்ச் செலுத்தல். மதவலி - அண்மைவிளி. (௬)

களியொடு சுவையமு தொழுகிய சொற்பயி றத்தாய்வேள்
  கணையொடு பிணையென வுலவு கடைக்கண் மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய வெழிலி தழைத்த குழற்கோதாய்
  நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே

யெனவொரு குறமக ளடிமுடி வைத்தனை முத்தேவா
மிறைவரு முறைமுறை பணிய விருக்கு முதற்றேவே
சினவிடை யவருண் மழவிடை கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி.

(இ - ள்.) கனியொடு - கனிகளோடு, சுவை அமுது ஒழுகிய- சுவையையுடைய அமுதமொழுக, சொல்பயில் - மொழிகள் பயில்கின்ற, தத்தாய்-கிளியே, வேள்கணையொடு-மன்மதபாணத்தோடு, பிணை என - பெண்மான்போல, உலவு - உலாவுகிற, கடைக்கண்-கட்கடையையுடைய, மடப்பாவாய் - மடப்பாவையே, நனைமலர் பொதுளிய-குளிர்ந்த மலர்கள் நெருங்கின, எழிலி - மேகம்போல, தழைத்த - செழித்த, குழல் - கூந்தலையுடைய, கோதாய் - கோதையே, நளிர்புனமிசை - குளிர்ந்த புனத்தில், வளர்கலபம் விரித்த - வளர்ந்த கலாபத்தை விரித்த, மயில்பேடே - பெண் மயிலே, என - என்று சொல்லி, ஒரு குறமகள் - ஒரு குறப்பெண்ணின், அடி-பாதத்தை, முடிவைத்தனை - உன் திருமுடியில் வைத்துக்கொண்டு, முத்தேவு ஆம் - மும்மைத் தேவர்களாகிய, இறைவரும் - இறையவரும், முறைமுறை பணிய - முறைமுறையாக வணங்காநிற்க, இருக்கும் - எழுந்தருளியிருக்கிற, முதல்தேவே-முதன்மையாகிய தெய்வமே, சினவிடையவர் அருள்-பகைவர்மீது கோபத்தையுடைய விடையை யுடையவராகிய சிவபெருமான் ஈன்றருளின, மழவிடை - இளங்காளையே, கொட்டுகசப்பாணி—, தினகரபுரி—, எ - று.

தத்தை - கிளி. அது ஆயுருபேற்றுத் தத்தா யென்றாயிற்று. வேள்கணை யென்றாராயினும் கண்ணுக் குவமையாகப் புணர்க்கப் படலால் தாமரை நீலம் என்பவற்றைக் கொள்க. கலாபம் கலபம் எனக் குறுகி நின்றது. குறமகள் - வள்ளிநாயகி. முத்தேவாயிறைவர் என்றது மும்மூர்த்திகளை. (௧௦)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.



## முத்தப்பருவம்.



குருகு நாறு செந்தளிர்க்கைக் கொடிநுண் ணுசுப்பிற் கோட்டிமயக், குலப்பூங் கொம்பு நறவூழ்த்த கொழுந் தா மரையோ டவிழ்ந்த துழாய்ச்,

சருகு நாறு முடைத்தலையின் ருமநாறு திரடிண்டோட், டாதை யாருங் கண்டுகண்டு தடங்கண் களிப்பக் குரவு விரிந்,

தருகு நாறு திருமேனி யந்தீங் குதலை மழலைகனிந், தமுத மூறு பசுந்தேற லசும்பு நாறத் தெய்வமண,

முருகு நாறுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே, மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா முத்தந் தருகவே.

(இ-ள்.) குருகுநாறு-வளையல் பிரகாசிக்கிற, செந்தளிர்கை-செந்தளிர்போலுங் கையினையும், கொடி நுண் நுசுப்பின் - கொடி போலும் நுண்ணிய இடையினையுமுடைய, கோடு இமயம் குலம் பூங்கொம்பும் - சிகரங்களையுடைய இமயமலையிற் பிறந்த உயர்வாகிய பூங்கொடியும், நறவு ஊழ்த்த - தேனைச் சிந்துகிற, கொழுந் தாமரையோடு - செழுந்தாமரை மலரோடு, அவிழ்ந்த - விரிந்த, துழாய் சருகுநாறும் - துளவச்சருகு மணக்கின்ற, முடைதலையின் தாமம்நாறு - முடைத்தலை மாலைகள் நாறுகின்ற, திரள் திண் தோள் - திரண்ட திண்ணிய தோள்களையுடைய, தாதையாரும் - திருத்தந்தையாரும், கண்டுகண்டு - பார்த்துப் பார்த்து, தடம்கண் களிப்ப - பெருங்கண்கள் களிக்கும்படி, குரவுவிரிந்து - குராமலர் விரிந்து, அருகும் - சமீபப் பிரதேசங்களிலும், நாறு - பரிமளிக்கிற, திருமேனி - திருமேனியில், அம்தீ குதலை மழலைகனிந்து - அழகிய இனிய குதலைமழலைகள் முதிர்ந்து, அமுதம் ஊறு பசு தேறல் - அமிர்தம்போலச் சுரக்கிற பசிய தேனானது, அசும்பு நாற - துளிக்க, தெய்வமணம் முருகுநாறும் - தெய்வமணத்தை யுடைய தேன் பரிமளிக்கிற, செங்கனிவாய் முத்தம்தருக - செங்கனிவாய் முத்தம் தந்தருள்வாயாக, முத்தமே—, மும்மைத்தமிழ்

தேர் - முத்தமிழாராய்தற் கிடமாகிய, கந்தபுரி முருகா - கந்தபுரி முருகனே, முத்தம் தருகவே—, எ-று.

குருகுநாறு பூங்கொம்பு என்றது உமாதேவியை. நறவூழ்த்த தாதையார் என்றது சிவபெருமானை. அசும்புநாறல் ஒரு சொன்னீர்த்தாய் துளித்தவெனப் பொருடந்து நின்றது. தெய்வ மண முருகு என்றது வாய்நீரை. மும்மைத்தமிழ் - முத்தமிழ். (மூன்று தமிழ், அவை இயல் இசை நாடகம் என்பன.) 'தெரி மாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' என்புழிப்போல மும்மை யென்றது ஈண்டெண்ணின்க ணின்றது. சிவபெருமான் பிரமவிஷ்ணுக்களின் சிரங்களை மாலையாகக் கோத்தணிபவ ராதலின் "தாமரையோ டவிழ்ந்ததுழாய்ச் சருகுநாறு முடைத்தலையின் ருமாறுதிரள் திண்டோள்" என்றார். (க

நறவு விரிந்த விரைத்தோட்டு நளினத் தொட்டிற் றட முலைப்பா, னல்கி வளர்த்த கைத்தாயர் நகைவான் முகத்து மார்பகத்துங்,

குறுமென் னடைய சிறுபசுங்காற் குருதி ததும்ப வுதைந்து சில, குறும்பு செயத்தா ணுமெனமென் கோல்கொண் டோச்சப் பெரும்புவன,

சிறுவு மொருநின் பெருந்தன்மை நினைந்தாய் போலக் கனிந்தமுது, நெக்குப் பசுந்தே னசும்பூற நெடுவெண் ணிலவு விரிந்தகுறு,

முறுவ லரும்புஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே, மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா முத்தந் தரு கவே.

(இ - ள்.) நறவுவிரிந்த - தேன்விரிந்த, விரைதோடு - மண முள்ள இதழ்களையுடைய, நளினத்தொட்டில் - தாமரைத் தொட்டிலில், தடம்முலைப்பால் - பெரிய முலைப்பாலை, நல்கிவளர்த்த - ஊட்டிவளர்த்த, கைத்தாயர்-கைத்தாயரது, நகைவாள் முகத்தும்-நகையொளிகளுள்ள முகத்திலும், மார்பு அகத்தும் - மார்பினிடத்திலும், குறுமெல்நடைய - குறிய மெல்லிய நடையினையுடைய, சிறுபசுங்கால் - சிறிய பசிய காலில், குருதிததும்ப உதைந்து-உதி

ரம் தளும்ப வுதைந்து, சில குறும்புசெய்ய - சில குறும்புகளைச் செய்ய, தாள்நோம் என - திருவடி நோமென்று, மெல்கோல் கொண்டு ஒச்ச - மெல்லிய கோலினலடிக்க, பெரும்புவனம்- பெரிய புவனங்களையெல்லாம், நிறவும் - நிலைபெறுத்துகிற, ஒரு- ஒப்பற்ற, நின் பெருந்தன்மை - உன் பெருந்தன்மையை, நினைத் தாய்போல - கருதினுய்போல, கனிந்து அமுதநெக்க - பழுத்த அமுது நெகிழ்ந்த, பசுந்தேன் - பசுந்தேனனது, அசும்பு ஊற- துளி சுரக்க, நெடுவெள் நிலவுவிரிந்த - பெரிய வெண்ணிலா விரிந்த, குறுமுறுவல் அரும்பும் - புன்னகை யரும்புகிற, செங் கனிவாய்—, மும்மை—, எ-று.

கைத்தாயர் என்றது கார்த்திகை நாளாகிய அறுமினை. இதனை "நீர்த்திகைக் கங்கைதன்னில் திகழ்சர வணத்தில்வந்த, மூர்த்திகைக் குழவியேபோல் முதற்புரி யாடனேக்கி, யார்த்திகை யுருதவுள்ளத் தரிமுதலமரர் பாரும், கார்த்திகைத் தெரிவை மாரை விளித்திவை கழறலுற்றர்" என்றும், "சாற்றருஞ் சரவ ணத்தில் சண்முகத் தொருவனுகி, யீற்றிருந் தருளுகின்ற விமல னோர் குழவிபோலத், தோற்றின னவனுக்குங்க டுணைமுலை யமுத மூட்டிப், போற்றுதிர் நாளுமென்ன நன்றெனப் புகன்றுவந்தார்" என்றும் வருதல் காண்க. ஒச்சல் - அடித்தல். 'கனிந்தமுது நெக்கு பசுந்தேன் அசும்பூற' என்றது வாய்நீர் ஊறுதலை. (உ)

பொழியுங் கருணைப் பெருவெள்ளப் புணரி பெருகி யலை யெறியப், பொங்கி யெழுந்த பெருங்காதற் புளகம் போர்ப்பப் போதுசெயும்,

விழியு மனமுங் குளிர்தூங்க விரிநீர்ச் சடிலத் தொருவ னிரு, வீணைக் குதவுந் திருச்செவிகள் விருந்தாட் டயர விரைகொழித்து,

வழியுங் கொழுந்தேன் பிழிந்திட்டு மதுரவமுது குழைத் தூற்று, மழலை ததும்பப் பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தையொன்று,

மொழியும் பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத் தமே, மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா முத்தந் தருகவே.

(இ - ள்.) பொழியும் - சொரிகின்ற, கருணை - கருணையாகிய, பெருவெள்ளம்-பெரும் பெருக்கையுடைய, புணரிபெருகி - கடல் பெருகி, அலை எறிய - அலைவீச, பொங்கி எழுந்த-பொங்கி மேலே யெழுந்த, பெருங்காதல் - பெருங்காதலாகிய, புளகம் போர்ப்ப- புளகம் மூட, போதுசெய்யும் - தாமரை மலர்போன்ற, விழியும் மனமும் - கண்ணும்மனமும், குளிர்தூங்க - குளிர்ச்சியடைய, விரிநீர் - விரிநீரைத் தரித்த, சடிலத்து - சடையையுடைய, ஒருவன் - ஒப்பற்றவனாகிய சிவபிரானது, இருவீணைக்கு உதவும் - இரண்டு வீணைக்குக் கொடுக்கின்ற, திருச்செவிகள் - அழகிய செவிகள், விருந்தாட்டு அயர - விருந்தாடலைச் செய்ய, விரைகொழித்து - வாசனை வீசி, வழியும்-வழிகின்ற, கொழுதேன்பிழிந்திட்டு-செழுந்தேன் பிழிந்து, மதுரம் அமுது - இனியஅமிர்தத்தை, குழைத்து ஊற்றும் - குழைத்து வார்க்கிற, மழலைததும்ப - மழலைச்சொற்கள் ததும்பாநிற்க, பழமறையை - பழமையாகிய வேதங்களை, வடித்துதெளித்த - வடித்துத் தெளிவிக்கப்பட்ட, வார்த்தை ஒன்று - ஒரு சொல்லை, மொழியும் - சொல்லிய, பவளம் செங்கனிவாய் - பவளம்போலுஞ் செங்கனிவாயின், முத்தந்தருக —, மும்மைத் தமிழ்தேர்—, எ-று.

புளகம் - மயிர்க்குச் செறிதல் (ரோமாஞ்சலி). 'பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தையொன்று' என்றது பிரணவார்த்தத்தை. இதனை, "உழன்மதில் சுட்ட தழல்நகைப் பெருமான் வணங்கிநின் றேத்தக் குருமொழி வைத்தோய்" என்னும் கல்லாடச் செய்யுள் வலியுறுத்தும். இருவீணைக்குதவுந் திருச்செவிகள் - தும்புரு நாரதர்களுடைய இரண்டு வீணைகளுக்குச் சாய்கிற திருச்செவிகள். இதனை இந்நூலாசிரியர் "பகருமிசை திசை பரவ இருவர்கள் பயிலுமியல்தெரி வெள்ளைத் தோட்டின" மற்றைய பிள்ளைத் தமிழில் விரித்துக் கூறுதல் காண்க. (ரு.)

கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற் கல்விச் செல்வர்
கேள்விநலங், கனியக் கனிய வமுதூறுங் கடவுண்
மறையு முதற்சங்கத்,
தலைப்பா வலர்திஞ் சுவைக்கனியுந் தண்டே னறையும்
வடிததெடுத்த, சாரங் கனிந்தூற் றிருந்தபசுந் தமிழு
நாறத் தடங்கரைகொ,

லலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பு மகிலாண் டமும்
பன் முறையீன்று, மழகு முதிர முதிராவென் னம்மை
யமுது சூற்கொண்ட,

முலைப்பா லுறுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே,
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா முத்தந் தரு
கவே.

(இ - ள்.) கலைப்பால் - நூற்பகுதிகள், நிறைந்த - நிரம்பின, முதுக்குறைவின் - பேரறிவினையுடைய, கல்விச்செல்வர் - கல்வியாகிய செல்வமுடையவர்கள், கேள்விநலம் கனியகனிய - கேள்வி நலம் முதிரமுதிர, அமுது ஊறும் - அமிர்தம்போலச் சுரக்கிற, கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய, மறையும் - வேதங்களும், முதல்சங்கம் - முதற்சங்கத்திருந்த, தலைப்பாவலர் - முதற் பாவலர், தீ சுவைகனியும் - இன்சுவைக் கனியும், தண்தேன் நறையும், குளிர்ந்த தேனும், வடித்து எடுத்த - வடிகட்டி யெடுத்த, சாரம் கனிந்து ஊற்றிருந்த - சாரம் பழுத்துச் சுரந்திருந்த, பசுந் தமிழும் - பைந்தமிழும், நாற-பரிமளிக்க, தடம்கரைகொல் - பெருங் கரையை யழிக்கிற, அலைபாய்புனல் - அலையுருவாய்த் தாவுகிற நீரையுடைய, தெண்கடல் வைப்பும் - தெளிவாகிய கடல்சூழ்ந்த நிலவுலகையும், அகில அண்டமும் - (மற்றுமுள்ள) எல்லா அண்டங்களையும், பலமுறை ஈன்றும் - பலமுறை பெற்றும், அழகு முதிர - அழகானது மிகாநிற்க, முதிரா - தான் முதிராத, என் அம்மை - என் தாயினது, அமுது - அமிர்தமே, சூல்கொண்ட - சூல்கொண்டாற் போன்ற, முலைப்பால் நாறும்-முலைப்பால் மணக்கின்ற, செங்கனிவாய் முத்தந்தருக முத்தமே—, எ-று.

ஊற்றிருத்தல் - சுரத்தல். கொல்லல் - அழித்தல். 'அழகு முதிர முதிராவென்னம்மை' என்றது உமாதேவியை. 'சூல் கொண்ட முலைப்பால்' என்பதை பால்சூல் கொண்ட முலையென மாற்றிக்கொள்க. தெய்வத்தன்மை யமைந்த வேதமுதலியவை மணக்கின்ற வுன் கனிவாயில் உமாதேவியின் முலைப்பால் மணக்க வொரு முத்தந் தந்தருள்க வென்பது கருத்து. (௪)

புயலுண் டிருண்ட கொந்தளமும் பொன்னங் குழையு
மின்னகையும், புளகம் பொதிந்த விளமுலையும் புருவச்
சிலையும் போர்த்தடங்கட்,
கயலுங் கலப மயிலியலுங் கன்னிப் புனத்தோர் பெண்
ணமுதின், காமர் நலனும் பன்னிரண்டு கண்ணான்
முகந்துண் டின்னமுதி,
னியலுஞ் சுவைநல் லவியொடுநீத் தேக்கற் றிருந்தத் தாக்க
ணங்கி, னிழுமென் குதலை கனிந்தூறு மிதழ்த்தேன்
சுவைகண் டேமாப்பான்,
முயலுங் குமுதக் கனிவாயான் முத்தந் தருக முத்தமே,
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா முத்தந் தருகவே.

(இ-ள்.) புயல் உண்டு - மேகம்போன்று, இருண்ட - இருண்டிருக்கிற, கொந்தளமும் - கூந்தலையும், பொன்னம் குழையும் - பொன்னானியன்ற குழையையும், இன் நகையும்-இனிய நகையையும், புளகம் பொதிந்த - புளகம் போர்த்த, இளமுலையும்-இளமையாகிய தனங்களையும், புருவச்சிலையும் - புருவமாகிய வில்லையும், போர் - போர்த்தொழிலையுடைய, தடம்கண் கயலும் - பெருங்கண்ணாகிய கயலையும், கலபம் - கலாபத்தையுடைய, மயில் இயலும் - மயிற்சாயலையும். காமர் நலனும் - அழகின் மிகுதியையும், பன்னிரண்டு கண்ணால்-பன்னிரு கண்களாலும், முகந்து உண்டு- அள்ளியுண்டு, இன் அமுதில் இயலும் சுவை - இனிய அமிர்தத்திலுள்ள சுவையையும், நல் அவியொடு நீத்து - நல்ல அவியோடு விட்டு, எக்கற்றிருந்து - எங்கியிருந்து, அ-அந்த, தாக்கணங்கின்- தாக்கணங்கினது, இழுமென்குதலை கனிந்து ஊறும் - இனிமையாகிய மெல்லிய குதலைச்சொற்கள் முதிர்தலாலுண்டாகிற, இதழ் தேன் சுவைகண்டு - அதராமிர்தத்தின் சுவையைக் கண்டு, ஏமாப்பால் முயலும் - செருக்கினால் முயலுகின்ற, குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, கனிவாய் முத்தந்தருக முத்தமே—, மும்மைத் தமிழ்தேர்—, எ-று.

புயலுண்டு என்பதில் உண்ணல் உவமையுருபின் பொருட்டு. அன்றி புயலை விழுங்கியெனினுமாம். கலாபம் - தோகை, அது

கலபமெனக் குறுக்கல் பெற்றது. முகந்து மொண்டு என்றது மொன்று. அவி - அவியுணவு. தாக்கணங்கு என்றது வள்ளி நாயகியை. ஏமாப்பு - மிகுகளிப்பு. (௬)

வேறு.

கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட கொடி
யிடைக் கடைசியர் குழாங், குரவையிடு தழனியிற்
கொண்டறிரை யத்தாவு குழவுப் பகட்டு வாளை,
சேடுபடு புத்தே ணிலத்துப் புனிற்றிளஞ் சேதா வயிற்று
முட்டச், செங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற் பகத்,
தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந் தேரியொடு
கானிரம்ப, விழுதுபடு கழனியுந் தெய்வமணா நாற
வேன் றின்சுவை முதிர்ந்து விளையுங்,
காடுபடு செந்நெல்பைங் கன்னளிகர் புள்ளூர களிவாயின்
முத்த மருளே, கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு
மொருமகன் கனிவாயின் முத்த மருளே.

(இ - ள்.) கோடுபடு - யானைக் கொம்புபோன்ற, கொங்கைக் குவட்டுக்கு-தனமலைக்கு, இளைத்திட்ட-மெலிந்த, கொடி இடை-பூங்கொடிபோலும் இடையினையுடைய, கடைசியர் குழாம் - கடைசியர் கூட்டம், குரவையிடு தழனியின் - குரவைப்பாட்டுப் பாடுகிற சத்தத்தினால், கொண்டல் நிரைய - மேகங்கள் ஓரிடத்துச் சேர, தாவு - குதிக்கிற, குழவு - இளமை பொருந்திய, பகட்டு வாளை - பெரிய வாளைமீன்கள், சேடுபடு - பெருமைபொருந்திய, புத்தேள்நிலத்து - தெய்வலோகத்திலுள்ள, புனிறு - ஈன்றணிமையையுடைய, இளஞ்சேதா வயிற்றுமுட்ட - இளமையாகிய சேதாவின்மடியில் முட்டுதலும், செங்கன்று என - தனது செங்கன்றெனவெண்ணி, தடவு - பெரிய, மடி - மடியினின்றும், மடை திறந்து ஊற்று - மடைதிறந் தொழுக்குகின்ற, தீம்பால் - இனிய பாலானது, சினை - கிளைகளையுடைய, கற்பகத்து - கற்பகத்தருவிலுள்ள, ஏடுபடு - இதழ்களோடு கூடிய, தடமலர் - பெரிய மலரி

லுள்ள, தேன் - தேனானது, அருவியொடு சொரிந்து - அருவியாற்றோடு பொழியப்பட்டு, எரியொடு கால்நிரம்ப - ஏரிகளுடன் கால்வாய்களும் நிறைய, இழுதுபடு கழனியும் - சேறுபட்ட கழனிகளும், தெய்வமணம் நாற என்று - தெய்வமணங் கமழப் பெற்று, இன்சுவை முதிர்ந்து விளையும் - இனிய சுவைமிகுந்து விளையும், காடுபடு செந்நெல்-மிகுதியாகிய செந்நெற்றாள்கள், பைங்கன்னல் நிகர் - பசிய கரும்பை நிகர்க்கிற, புள்ளூர - புள்ளூரனே, கனிவாயின் முத்தம் அருள்—, கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒரு மகன் - கங்காதேவிக்கும் திருமாலின் தங்கையாகிய உமாதேவிக்கும் ஒப்பற்ற புதல்வனே, கனிவாயின் முத்தமருளே—, எ-று.

கோடு பலபொருளொரு சொல்லாயினும் கொங்கைக் குவமையாகப் புணர்க்கப்படுதலால் ஈண்டியானைக் கொம்பென் றுரையுரைக்கலாயிற்று. தழனியின் என்பதில் இன் ஐந்தாவதன் கருவிப்பொருட்டு. பகட்டுவாளை ஆண்வாளை எனினுமாம். சேதா-நற்பசு, செந்நிறப்பசு வெனினும் அழகிய பசுவெனினு மொக்கும். காடுபடுதல் - மிகுதல். மகன் அண்மைவிளி. (சு)

துளிதூங்கு மழைமுகிற் படலங் கிழிக்குந் துகிற்கொடி
  கள் சோலை செய்யத், தோரண முகப்பிற் றவழ்ந்தேறு
  கலைமதித் தோற்றத்தை யறுகான மடுத்,
தளிதூங்கு தேனிறு லிதுதம்மின் வம்மினென் றழிநறு
  வார்ந்து நிற்கு, மந்நலார் கைகூப்ப வாடவர் பிழிந்
  தூற்று மளவிலப ராத மிதெனு,
வொளிதூங்கு முகமதிக் கொப்பென்கி லேன்விடுதி ருயி
  ரொன்று மெனவிடலு மவ், வுடுபதிக் கடவுளற வுண்ட
  மற் றவரினு முய்ந்தோ மொழிந்தோ மெனக்,
களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக கனிவாயின்
  முத்த மருளே, கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு
  மொருமகன் கனிவாயின் முத்த மருளே.

(இ - ள்) துளிதூங்கும் - துளித்தலைப் பொருந்திய, மழை - குளிர்ச்சியை யுடைய, முகில்படலம் கிழிக்கும் - மேகக் கூட்டத்

தைக் கிழிக்கிற, துகில் கொடிகள் - கொடியாடைகள், சோலை செய்ய - சோலை நிழலைச்செய்ய, தோரண முகப்பில் - தோரணங் கட்டின முகப்பின்மேல், தவழ்ந்து ஏறு - தவழ்ந்தேறுகின்ற, கலைமதி தோற்றத்தை - கலைகள் நிறைந்த சந்திரோதயத்தை, அறுகால்மடுத்து - ஆறு கால்களையும் பதித்து, அளிதூங்கு - வண்டுகள் உறங்குகிற, தேன் இறால் இது - தேன் கூடாகிய இதனை, தம்மின் - தாருங்கள், வம்மின் - வாருங்கள், என்று - என்று சொல்லி, அழி - அறிவழிதற் கேதுவாகிய, நறா - கள்ளை, ஆர்ந்து நிற்கும் - குடித்துநிற்கிற, அங்கலார் - மாதர்கள், கைகூப்ப - கை குவித்து வணங்க, ஆடவர் - புருடர்கள், பிழிந்து ஊற்றும் அளவில் - (சந்திரனாகிய தேன் அடையை) பிழிந்து வார்க்கும் பொழுது, இது அபராதம் என - இது அபராதமென்று, ஒளி தூங்கும் - ஒளி தங்கிய, முகமதிக்கு - (மாதர்களது) முகமாகிய சந்திரனுக்கு, ஒப்பு என்கிலேன் - (யான்) நிகரென்று சொல்லேன், உயிர் ஒன்றும் விடுதிர் என - உயிரொன்றை மாத்திரம் விடுங்களென்று (சந்திரன்) வேண்ட, விடலும் - (அவ்வாறே அப் புருடர்கள்) விட்டவுடன், அ - அந்த, உடுபதிகடவுள் - சந்திரன், நறவுண்ட - கள்ளுண்ட, அவரினும் - அவரிடத்தினின்றும், உய்ந்தோம் ஒழிந்தோம் என - உய்ந்தொழிந்தோமென்று, களி தூங்கு - களிப்புக் கொள்ளுதற்குரிய, மாடம்மலி - மாடங்கள் மிகுந்த, கந்தபுரிவரும் - கந்தபுரியி லெழுந்தருளிய, முருக - முருகா, கனிவாயின் முதத்தமருள்—, கங்கைக்கு—, எ-று.

ஆர்தல் - குடித்தல். உடுபதி - நக்ஷத்ர நாயகன். உய்ந்தோம் முற்றெச்சம். அபராதம் - குற்றம். என - செய்யாவென்னும் வாய்பாட் டிறந்த காலவினை யெச்சம். மற்றவர் என்பதில் மற்று அசை. (எ)

பூமரு வுயிர்க்குங் கருங்கொந் தளத்துவிரி பூந்துகட்படலமு மனைய, பொங்கிய நறும்புகைப் படலமுங் காலமழை பொழிமுகிற் படலஞ் செயத்,

தாமரை முகச்சோதி யெழவெழுஞ் சிறுமுறுவ றண்ணிலவு செயவெயில் செயத், தழனமணிக் கலைக கனிதம்பமொடு வெம்முலை தடங்கடலு மலையுஞ் செயத்,

தேமரு குழற்கோதை மயிலனீர் கோசிகன் செம்மலென
வேறு புவனஞ், செயவும்வல் லீரென மணந்திடை
தணந்தவர்சொல் செஞ்சொற் பசுங்கிளி சொலக்,
காமரு மனங்குழைய மாதர்பயில் வேளூர கனிவாயின்
முத்த மருளே, கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு
மொருமகன் கனிவாயின் முத்த மருளே.

(இ-ள்.) பூமரு உயிர்க்கும் - மலர்கள் மணத்தை வீசுகிற, கருங்கொந்தளத்து - கருங்கூந்தலில், விரி - விரிந்த, பூதுகள் படலமும் - மலர்த் துகட் கூட்டமும், மணம் பொங்கிய - மண மிகுந்த, நறுபுகை படலமும் - நறிய புகைக் கூட்டமும், கால மழை பொழி - பருவ மழைபொழிகிற, முகில்படலம் செய - மேகத் தொகுதியை நிகர்க்க, தாமரைமுகம் சோதி எழ - தாமரை மலர்போலும் முகவொளி யெழுதலும், எழும் - தோற்றுகிற, சிறு முறுவல் - புன்சிரிப்பானது, தண் நிலவுசெய்ய - குளிர்ந்த நில வைத்தோற்றுவிக்க, தழல் மணிக்கலன் - நெருப்புப் போலும் மணிக் கலன்கள், வெயில்செய - வெயிலையுண்டாக்க, அகல் - அகன், நிறதம்பமொடு - நிதம்பத்துடன், வெம்முலை - விருப்பத் துக் கேதுவாகிய தனங்கள், தடம் கடலும் மலையும் செய - முறையே பெரிய கடலையும் மலையையும் போன்றிருக்க, தேமரு - மணம்பொருந்திய, குழல் - ஐம்பாலின, கோதை-கூந்தலையுடைய, மயில் அன்னீர் - மயிலை நிகர்ப்பவரே, கோசிகன் செம்மல் என - விசுவாமித்திரன்போல, வேறுபுவனம் - வேறாகிய வுலகங்களை, செயவும் வல்லீர் என - உண்டாக்கவும் வல்லீரென்று, மணந்து இடை தளர்ந்தவர்-கூடி இடையே பிரிந்தவர்கள், சொல்-சொல்லு கிற, செஞ்சொல் - செவ்விய சொற்களை, பசுங்கிளிசொல - பைங் கிளிகள்சொல்ல, காமர் - அழகிய, மனங்குழையும் - மனமுருகா நின்ற, மாதர் பயில் - மாதர்கள் சஞ்சரிக்கிற, வேளூர - வேளூ ரனே, கனிவாயின் முத்தம் அரு—, கங்கைக்கு—, எ-று.

கொந்தளத்து விரியென்றதனுன் முடித்தபோது போதா யிருந்ததென்பது விளங்கிற்று. காலமழை - பெய்யவேண்டும் பருவத்துப் பெய்யு மழை. தழல் என்னும் அடையால் மணி

மாணிக்க முதலிய செம்மணிகளைக் குறித்தது. நிதம்பமொடு வெம்முலை தடங் கடலு மலையுஞ் செய என்றது முறை நிரனி றைை. கோசிகன் செம்மல் - கோசிக முனிவன், மகனாகிய கௌசிகன் காமரு என்பதில் உகரஞ் சாரியை. வேளூர் என்பது புள்ளூரிருக்கு வேளூரை - இது சடாயுவும் வேதமும் மன்மதனும் பூசித்த காரணத்தால் வந்த பெயர். (அ)

வேறு.

மதியு நதியு மரவும் விரவு மௌலி யொருவன் முக்கணும்,
வனச முகமு மகமு மலர மழலை யொழுகு சொற்சொலும்,

புதல்வ விமய முதல்வி யருள்செய் புனித வமரர் கொற்றவன், புதல்வி தழுவு கொழுந குறவர் சிறுமி குடிகொள் பொற்புய,

கதிரு மதியு மொளிர வொளிரு மொளிய வளிய கற்பகக்,
கனியி லினிய வுருவ பருவ மழைபி னுதவு கைத்தல,

முதிரு மறிவி லரிஞ ருணரு முதல்வ தருக முத்தமே,
முனிவர் பரவு பரிதி புரியின் முருக தருக முத்தமே.

(இ - ள்.) மதியும் - சந்திரகண்டமும், நதியும் - ஆகாய கங்கையும், அரவும் - பாம்பும், விரவும் - கலந்திருக்கப்பெற்ற திருமுடியையுடைய, ஒருவன் - ஒப்பற்றவனாகிய சிவபெருமானது, முக்கணும் - மூன்று கண்களும், வனசம் முகமும் - தாமரை மலர் போன்ற முகமும், அகமும் - திருவுள்ளமும், மலர - விகசிக்கும்படி, மழலைஒழுகு - மழலைத்தன்மை யொழுகாநின்ற, சொல் சொல்லும் - சொற்களைச் சொல்லுகிற, புதல்வ - புதல்வனே, இமயம் - இமயமலையி லவதரித்த, முதல்வி - தலைவியாகிய உமா தேவி, அருள்செய் - ஈன்றருளின, புனித - பரிசுத்தனே, அமரர் கொற்றவன் - தேவேந்திரனது, புதல்வி - மகளாகிய தெய்வயானையானவள், தழுவு - அணைகின்ற, கொழுந - கணவனே, குறவர்சிறுமி - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகி, குடிகொள் -

குடிகொண்டிருக்கிற, பொன்புய - அழகிய தோள்களையுடைய வனே, கதிரும் மதியும் ஒளிர - சூரியனும் சந்திரனும் ஒளி செய்ய, ஒளிரும் - விளங்குகிற, ஒளிய - ஒளியையுடையவனே, அளிய கற்பகக்கனியின் - கனிந்த கற்பகக்கனியினும், இனிய வுருவ - இனிதாகிய திருவுருவமுடையவனே, பருவமழையின் - பருவ மழைபோல, உதவு - கொடுக்கிற, கைத்தல - கரதலத்தை யுடையவனே, முதிரும் அறிவின் - பேரறிவையுடைய, அறிஞர் உணரும் - ஞானிகள் அறிதற்குரிய, முதல்வ - முதல்வனே, தருக முத்தம் - முத்தம் தருக, முனிவர்பரவு - முனிவர் வழிபடுதற்கிட மாகிய, பரிதிபுரியில் - பரிதிபுரியி லெழுந்தருளிய, முருக - முரு கனே, முத்தம் தருக —, எ-று.

குடிகோடல், எஞ்ஞான்றும் இடையறாது தழுவிக்கொண்டே யிருத்தல். சூரிய சந்திரர்கட் கந்தர்யாமியா யிருந்து அவரை விளங்குவிப்போ னாதலால் 'கதிருமதியு மொளிர வொளிரு மொளிய,' என்றார். ஒளிய என்பதற்கு ஒள்ளியனேயென் றுரைப் பினுமாம். பருவமழையின் என்பதில் இன் ஐந்தாவதனுப்புப் பொருட்டு. முனிவர் - மநநசிலர் (கடவுளை யிடையறாது சிந்திப் பவர்.)' 'கற்பகக்கனியி லினிய' உருவம் என்பதற்கு கற்பகக் கனி யினும் இனிமையானவனே அழகிய உருவம் வாய்ந்தவனே என் றுரைப்பினும் பொருந்தும். (க)

வடிவி னழகு மெழுத வரிய புயமு நறிய செச்சையு,
 மருமம விரவு குரவு மரையின மணியு மணிகொள் கச்சையுங்,

கடவு மயிலு மயிலு மொழுகு கருணை வதன பத்மமுங்,
 கமல விழியும் விழியு மனமு மெழுதி யெழுதி நித்தலு,

மடிக ளௌவு னடிகள் பணியு மடிய ரலது மற்றும்வே,
 றமரர் குழுவு மகில மறையு மரியு மயனு முற்றுகின்,

முடியு மடியு முணர வரிய முதல்வ தருக முத்தமே,
 முனிவர் பரவு பரிதி புரியின் முருக தருக முததமே.

(இ - ள்.) வடிவின் அழகும் - உன் வடிவழகும், எழுத அரிய புயமும் - எழுதுதற்கரிதாகிய தோள்களும், நறிய செச்சையும் - நறுவிய செச்சைமலர் மாலையும், மருமம் விரவும் - திருமார்பிற் பொருந்திய, குரவும் - குரவமலர் மாலையும், அரையில் மணியும்- திருவரையிற் கட்டப்பட்ட மணியும், அணிகொள் கச்சையும் - அழகைக்கொண்ட கச்சையும், கடவும் மயிலும் - (உன்னால்) செலுத்தப்படுகிற மயிலும், அயிலும் - வேலும், ஒழுகுகருணை - ஒழுகாநின்ற கருணையையுடைய, வதநபத்மமும்-முகத்தாமரையும், கமலவிழியும்-தாமரைமலர்போலுங் கண்களும், விழியும் மனமும்- (அடியார்கள்) தமது கண்ணிலும் மனத்திலும், எழுதியெழுதி-பல காலெழுதி, நித்தலும் - நாள்தோறும், அடிகள் என-சுவாமிகளே யென்று, உன் அடிகள் பணியும் - உன் திருவடிகளை வழிபடுகிற, அடியர் அல்லது - அடியார்களேயன்றி, மற்றும் வேறு அமரர் குழுவும் - மற்றுமுள்ள வேறாகிய தேவர்கூட்டமும், அகிலமறையும்-எல்லா வேதங்களும், அரியும் - திருமாலும், அயனும் - பிரமனும், முற்றும் - முழுதும், நின் - உனது, முடியும் அடியும் - தலையையுங் காலையும், உணர அரிய - அறிதற்கரிய, முதல்வ - முதல்வனே, தருகமுத்தமே—, முனிவர்—, முத்தமே—, எ-று.

செச்சை குரவு என்பன முதலாகுபெயர்களாய் அவற்றின்மலர்களை யுணர்த்தி, அம்மலர்கள் கருவியாகுபெயர்களாய் அவற்றானியன்ற மாலைகளை யுணர்த்தினமையால் இருமடியாகுபெயர்கள். மணிகொள் கச்சையும் எனப் பிரித்து மாணிக்கத்தைக் கொண்டிருக்கிற பாப்புக்கச்சை யெனினுமாம். பதுமவதனம் என்னாது வதனபதுமம் என்றதனால் பதுமத்தின்றோல்வி பெறப்பட்டது. விழியுமனமுமெழுதி யென்றது இடையறாது சேவித்தலையும் சிந்தித்தலையுங் குறித்தது. அடிகள் இரண்டனுள் முன்னையது அண்மைவிளி. (௧0)

முத்தப்பருவம் முற்றிற்று.



## வருகைப்பருவம்.



செம்பொற் கருங்கழ லரிக்குரற் கிண்கிணி சிலம்பொடு கலின்கலினெனத், திருவரையி லரைமணி கிணின்கிணி னெனப்பொலந் திண்டோளின் வளைகலிப்ப,

வம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமு மாரமுந் திருவில் வீச, வணிமகர குண்டலம் பரிதிமண் டலமென்ன வலர்கதிர்க் கற்றைசுற்றப்,

பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுகுழ ழியமுடன் பட்ட மொளி விட்டெறிப்பப், பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும் பனிமுறுவ னிலவரும்பக்,

கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக் குமாரநா யகன் வருகவே, குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொ ண்ட குமரகுரு பரன்வருகவே.

(இ - ள்.) செம்பொன்-செம்பொன்னாற் செய்யப்பட்ட, கருகழல்-பெரிய கழலிற்பெய்த, அரி-பருக்கைக் கற்களாகிய, குரல்-சத்தத்தையுடைய, கிங்கிணி - கிங்கிணிகள். சிலம்பொடு-சிலம்புகளுடன், கலின்கலின் என - கலின் கலின் என்றொலிக்க, திரு அரையில் - திருவிடையில், அரைமணி - உடைமணி, கிணின் கிணின் என-கிணின்கிணின் என்றொலிக்க, பொலம்-பொன்மயமாகிய, திண் தோளில் - திண் புயங்களில், வளை கலிப்ப - வாகுவலயங்கள் சத்திக்க, அம்பொன் - அழகிய பொன்னிறமுள்ள, பகடுமார்பில்-விசாலமாகிய திருமார்பில், சன்னவீரமும் ஆரமும்-சன்னவீரமும் ஆரமும், திருவில்வீச - அழகிய ஒளியைவீச, அணி - அணியப்பட்ட, மகரகுண்டலம் - மகரகுண்டலங்கள், பரிதிமண்டலம் என்ன - சூரியமண்டலம்போல, அலர் - பரந்த, கதிர் கற்றை சுற்ற - ஒளிப்பிழம்பு சூழ, பைம்பொன் - பசும்பொன்னாலியன்ற, சுடர் சுட்டி - ஒளியையுடைய சுட்டடியானது, கட்டு - கட்டப்பட்ட, குழியமுடன் - குழியத்தோடு, பட்டம் -

நெற்றிப்பட்டமானது, ஒளிவிட்டு எறிப்ப - ஒளிவிட்டு வீச, பங்கயம் மலர்ந்த - தாமரை மலர்போல மலர்ந்த, திருமுகமண்டலந்தொறும் - திருமுக மண்டலந்தோறும், பனிமுறுவல் - குளிர்ந்த முறுவலாகிய, நிலவு அரும்ப - நிலாவுண்டாக, கும்பம் - குடம் போன்ற, படா முலை - சாயாத் தனங்களையுடைய, மலைப்புதல்வி - மலைமகளுக்கு, செல்வக் குமாரநாயகன் வருக - செல்வக் குமாரனாகிய இறைவன் வருக, குரவு கமழ்தரு - குராமலர் மணக்கின்ற, கந்தபுரியில் அருள் குடிகொண்ட - கந்தபுரியில் அருளே உருவாகக் குடிகொண் டிருந்தாற் போன்ற, குமர - குமாரக் கடவுளே, குருபரன் - மேலான ஆசிரியனே, வருக—, எ-று.

செம்பொற் கருங்கழல் முரண்டொடை. திருவரையிலரை மணியை உடைமணியென்பர். "உடைமணி கட்டிச் சிறுதேரூருட்டி யுலாத்தருமிந் நடைமணியைத் தந்தபின்னர்" என்றார் மணிவாசகரும். சன்னவீரம் - வெற்றிமாலை. மகர குண்டலம் - மகரமீன் வடிவாகச் செய்யப்பட்டதோர் குண்டல விசேடம். நிலவு - சந்திரிகை. மலைப்புதல்வி - பார்வதி. குரவு கமழ்தரு கந்தபுரியாதலால் குமரகுருபரற்கு விருப்புறு திருப்பதியாயிற் றென்க. என கலிப்ப வீச சுற்ற எறிப்ப அரும்ப வருக என முடிக்க. (௪)

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகின் மடித்தல
 நனைப்பவம்மை, மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி யெம்
 பிரான் மார்பினிற் குரவையாடி,

முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனன் மோலிநீர்
 பெய்தவித்து, முளைமதியை நெளியரவின் வாய்மடுத்
 திளமானின் முதுபசிக் கறுகருத்தி,

விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ மிகப்புழுதி
 யாட்டயர்ந்து, விரிசடைக் காட்டினின் றிருவிழிகள்
 சேப்பமுழு வெள்ளநீர்த் துளையமாடிக்,

குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு குறும்புசெய்
 தவன்வருகவே, குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடி
 கொண்ட குமரகுரு பரன்வருகவே.

(இ - ள்.) மழவுமுதிர் - இளமை மிகுந்த, கனிவாய் - கனி வாயினின்றும் வடிகிற, பசுந்தேறல் - பசிய தேனுனது, வெள் துகில் - வெள்ளாடை யணிந்த, மடித்தலம் - மடியிடத்தை, நனைப்ப - நனைக்க, அம்மை - இறைவியின், மணிவயிறுகுளிர - அழகாகிய வயிறு குளிர்ச்சியடைய, தாழ்ந்து எறி - தாவி எறி, எம்பிரான் மார்பினில் - இறைவனது மார்பினிடத்தே, குரவையாடி - குரவைக் கூத்தாடி, முழவுமுதிர் - முழவொலி மிகுந்த, துடியினின் - துடியினிடத்தே, சிறுபறைமுழக்கி - சிறுபறை முழங்கச்செய்து, அனல் - நெருப்பை, மோலிநீர்பெய்து அவித்து - சடைநீரைச் சொரிந்து அவித்து, முளைமதியை - பிறையை, நெளி - நெளிகின்ற, அரவின்வாய் மடுத்து - பாம்பின்வாயிலிட்டு, இளமானின்-மான்கன்றின், முதுபசிக்கு - பெரும்பசிக்கு, அறுகு அருத்தி - அறுகையுண்பித்து, விழவுமுதிர் - அழகுமிகுந்த, செம்மேனி-செம்மேனியில், 'வெண்ணீறு தூள் எழ - வெண்ணீற்றுத் துகளெழும்படி, மிக-மிகுதியாக, புழுதியாட்டு அயர்ந்து - புழுதியாடல் செய்து, விரிசடைக்காட்டில் - விரிந்த சடாடவியில், நின்-உனது, திருவிழிகள் - திருக்கண்கள், சேப்ப - செவக்க, முழுவெள்ளநீர் - முழுப்பெருக்கு நீரில், துளையம் ஆடி - மூழ்கி, குழவுமுதிர் செவ்வி - இளமை முதிர்கின்ற பருவத்தில், பெருங்களிவர-பெருமகிழ்ச்சியுண்டாக, சிறுகுறும்பு செய்தவன்-சிறு குறும்புகள் செய்தவனே, வருக—, குரவு—, வருக—, எ-று.

அனல் - நெருப்பு, (மழுவாகிய நெருப்பு), மோலிநீர்-சடையிலுள்ள கங்கைநீர், குறும்புசெய்தவன் குமரகுருபரன் அண்மைவிளிகள். எறி ஆடி முழக்கி அவித்து மடுத்து அருத்தி அயர்ந்து ஆடி குறும்புசெய்தவன் வருக என முடிக்க. (உ)

இருளற விமைக்குநின் றிருவுருவி னலர்சோதி யிளஞாயி
றெனமுகையவிழ்ந், தேடுவிரி தாமரைக் காடுமுகிழ்
நகைநில வெறிப்பவலர் குமுதவனமுங்,

கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ களிறெனவுழ
க்கியொருநின், கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்
பெருங் கலவியங் கடலின்மூழ்கும்,

வெருளின்மட நோக்கினீ ரரமகளி ருடனுடும் விளையாட்
டெனத்திரைபொரும், வெள்ளநீர்ச் சரவணப் பொய்
கையந் துறையினீள் வீரர்க ளெனுங்கோளரிக்,

குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய குமாரநா
யகன்வருகவே, குரவுகமழ் தருநந்த புரியிலருள் குடி
கொண்ட குமரகுரு பரன்வருகவே.

(இ - ள்.) இருள் அற - இருளொழியும்படி, இமைக்கும் - பிரகாசிக்கிற, நின் திருவுருவின் - உன் திருவுருவத்தின், அலர் சோதி - பரந்த வொளியை, இளஞாயிறு என - இளஞ்சூரிய னென் றெண்ணி, முகை அவிழ்ந்து - மொட்டு விரிந்து, எடுவிரி - இதழ்களலர்ந்த, தாமரைக்காடு - தாமரை மலர்க்காடும், முகிழ் நகை - குறுநகையாகிய, நிலவு எறிப்ப - நிலாவீசுதலால், அலர் - மலர்ந்த, குமுதவனமும் - குமுதமலர்க்காடும், கரைபுரள - கரை புரளும்படி, அலைமோது - அலைமோதுகிற, கடலை - சமுத்திரத் தை, கலக்கும் - கலக்குகின்ற, மழகளிறு என உழக்கி - இளங் களிறுபோலக் கலக்கி, ஒரு - ஒப்பற்ற, நின் கண்மலர்கள் - உன் கண்மலர்களானவை, செம்மலர்கள் ஆக - செவந்த மலர்களாகும் படி, மோகம் - மோகமாகிய, பெரு - பெரிய, கலவிகடலில் மூழ்கும் - கலவிக்கடலின் கண் மூழ்காநின்ற, வெருளின் - வெரு ட்சியோடு கூடிய, மடநோக்கின் - மடநோக்கினையுடைய, நீரர மகளிருடன் - நீரரமகளிரோடு, ஆடும் - ஆடுகின்ற, விளையாட்டு என - விளையாட்டுப்போல, திரைபொரும் - அலைகள் மோதா நின்ற, வெள்ளநீர் - பெருக்கு நீரையுடைய, சரவணப் பொய்கை துறையில் —, நீள் வீரர்கள் என்னும் - பெரிய வீரர்களென்கிற, கோளரி குருளைகளொடும் - சிங்கக்குட்டிகளோடும், புனல் குடைந்து விளையாடிய - நீர் குடைந்து விளையாடின, குமார நாய கன்வருக —, குரவு — வருக —, எ-று.

இமைத்தல் - ஒளிசெய்தல். குமுதம்-அல்லி. செம்மலர்களாக வென்றது செவக்க வென்றபடி. கலவி - புணர்ச்சி. குருளை - குட்டி, இதுமரபு, "சிங்கக் குருளைக் கிடுதீஞ்சுவையூன்" என்றூர் மஹாகவியும். கலவிக்கடலில் நீரரமகளிரோடாடல் போலச் சரவ

ணப் பொய்கையில் வீரர்களோடாடல் செய்த குமார நாயகன் வருகவென முடிக்க (ரு)

கட்டுண்ட படர்சடைக் காட்டெம்பி ரான்வைத்த கலை
மதியொ டையநீயக், கவுரிதிரு முடியினித் திலமிட்
டிழைத்திட்ட கதிரிளம் பிறையிணைப்பத்,
தெட்டுண்ட போன்முழுத் திங்களென் றேக்கறுஞ் செழும
ணிச் சூட்டுமோட்டுச், செம்பாம்பு பைவிரித் தாடுதலு
மோடிநின் சிறுநறுங் குஞ்சிக்கிடு,
மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றணையவம் மாசு
ணம்வெ ருண்டோடலு, மணிமுடியி னகுதலையை மற்
றெமை நகைத்தியான் மலரவன் றலைநீமுனங்,
குட்டுண்ட தறியாய்கொ லெனவித ழுதுக்குங் குமாரநா
யகன் வருகவே, குரவுகமழ்தரு கந்த புரியிலருள் குடி
கொண்ட குமரகுரு பரன்வருகவே.

(இ - ள்.) கட்டுண்ட - கட்டுப்பட்ட, படர் சடைக்காட்டு - பரந்த சடைக்காட்டில், எம்பிரான் வைத்த - எம்பெருமான் வைத்த, கலைமதியொடு - மதிக்கலையோடு, ஐய - ஐயனே, நீ —, அ - அந்த, கவுரி - உமாதேவியின், திருமுடியில் - திருமுடியின் கண், நித்திலம் இட்டு இழைத்திட்ட - முத்துக்களாற் செய்யப் பட்ட, கதிர் இளம்பிறை இணைப்ப - ஒளியையுடைய இளம்பிறை யைப் பொருத்த, தெட்டுண்ட முழுத்திங்கள் என்று - தெளிந்த பூர்ண சந்திரனென்று, எக்கறும் - எங்குகிற, செம்மணி - மாணிக் கத்தோடு கூடிய, சூட்டு - உச்சியையும், மோடு - பெருமையையு முடைய, செம்பாம்பு - செம்பாம்பானது, பைவிரித்து ஆடுதலும்- படம் விரித்தாடுதலும், ஓடி—, நின் - உனது, சிறு நறு குஞ்சிக்கு இடும் - சிறிய நறிய குஞ்சியிலிட்ட, மட்டுண்ட - தேனோடுகூடிய, பைகுலைகாந்தள் என்று அணைய - பசிய குலைகளையுடைய காந் தட்டுடுப்பென்று சேர, அ - அந்த, மாசுணம் வெருண்டு ஓடலும்- பாம்பானது அஞ்சியோடுதலும், மணிமுடியில் - அழகாகிய சடை யில். நகுதலையை - சிரித்துக்கொண்டிருக்கிற தலையை, எம்மை

நகைத்தி - எம்மைநோக்கிச் சிரிக்கின்றனை, ஆல்-ஆதலால், மலரவன்தலே - பிரமன் தலேயே, நீ முன்னம் குட்டுண்டது அறியாய் கொல் - நீ முற்காலத்தில் குட்டுப்பட்டதை யறிந்திலேபோலும், என - என்று, இதழ் அதுக்கும் - உதட்டை யதுக்குகிற, குமாரநாயகன் வருகவே—, குரவு—, வருக—, எ-று.

அறுகு ஆத்தி பாம்பு முதலியவற்றிற் கிடமாயிருத்தலால் சடையினைக் காடென்றும், இவையாவு மடங்குதற் குரிய பரப்பினையுடைத்தாதலால் படர் சடையென்றும் கூறினர், "வெள்ளந்தாழ் விரிசடையாய்" என்றும், "புயலன்றலர் சடையேற்றவன்" என்றும் மேலோர்கூறுதலுங்காண்க. கவுரி-கவுர நிறமுள்ளவள். 'நித்திலமிட் டிழைத்திட்ட கதிரிளம் பிறை' யென்றது திருமுடியிலணியு மோராபரண விசேஷத்தை. போல் - அசை போன்ற என்னும் மகரக் குறுக்கமாய் ஒப்பில் போலியாய் வந்ததெனினுமாம். செம்பாம்பு - கேது. காந்தள் முதலாகு பெயர். மலரவன் றலே அண்மைவிளி; மலரவன் றலே நீ யென்பதற்கு மலரவன் றலேயாகிய நீயென் றுரைப்பினுமாம். இதழதுக்குதல்- உதட்டை மேற்பல்லால் அமுக்குதல். (௬)

அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற் கடங்காமை
யாலெம்பிரா, னலர்விழிகள் பொத்தலு மிருட்படல
மூடவுள் ளஞ்சிநின் றேங்கவேங்கிச்,
செங்கைத் தலங்கொண் டெடுத்தணைப் பாட்குந் திருத்
தாதை யார்க்குமுத்தந், திருமுகமொ ராறுங் கொடுப்
பக் கதுப்பிற் றெறித்துமுத் தந்தருகெனுங்,
கங்கைக்கு நல்கா தெழுந்தலறி யோடலுங் கண்ணீர்
துடைத் தெடுத்துக், கான்மலரு நீவித்தன் மார்புற
வணைக்குமக் கவுமாரி யருண்மாரியிற்,
கொங்கைக் குடங்கொட்டு பாலருவியாடுங் குமாரநாயகன்
வருகவே, குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடி
கொண்ட குமரகுரு பரன்வருகவே.

(இ - ள்.) அம்மை செங்கண் - இறைவியின் செவந்த கண்களை, அங்கைத்தலத்து - அங்கைத்தலத்தால், புதைத்தற்கு அடங்காமையால் - மூடற்கடங்காமையினால், எம்பிரான் அலர்விழிகள் பொத்தலும் - எம்பிரானது பரந்த கண்களைப் பொத்துதலும், இருள்படலம் மூட - இருட்கூட்டம் மூடிக்கொள்ள, உள் அஞ்சி நின்று ஏங்க - மனமஞ்சி யழாநிற்க, ஏங்கி - இரங்கி, செங்கைத் தலம்கொண்டு - செங்கைத் தலத்தால், எடுத்து அணைப்பாட்கும் - எடுத்தணைத்துக் கொள்பவளாகிய வுமாதேவிக்கும், திருத்தாதையார்க்கும் - திருத்தந்தையாராகிய சிவபிரானுர்க்கும், திருமுகம் ஓராறும் - ஆறு திருமுகங்களும், முத்தம் கொடுப்ப - முத்தங் கொடாநிற்க, கதுப்பில்தெறித்து - கன்னத்திலறைந்து, முத்தம் தருக என்னும் - முத்தம் தருகவென்கிற, கங்கைக்கு - கங்காதேவிக்கு, நல்காது - கொடாமல், எழுந்து அலறி ஓடலும் - எழுந்தலறிக்கொண் டோடுதலும், கண்ணீர் துடைத்து எடுத்து—, கால்மலரும்நீவி - திருவடி மலரையும் தடவி, தன் மார்பு உற அணைக்கும் - தன் மார்பிற் பொருந்த அணைக்கின்ற, அ - அந்த, கவுமாரி - உமாதேவியாரின், அருள்மாரியின் - அருள் மழைபோல, கொங்கைக்குடம் கொட்டு - அவளுடைய தனக்குடங்கள் கொட்டுகிற, பால் அருவி ஆடும் - பாலருவியில் விளையாடுகின்ற குமாரநாயகன் வருக—, குரவு—, வருக—, எ-று.

அம்மைவிழிகள் "பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங் கண்களே" "அம்பஞ்சியா வம்புகமிக நீண்டரி சிந்து கண்ணுன்" "ஒரோ குடங்கைப் பெரியனகெண்டைக் குலமிவையோ வந்துபேர்கின்றவே" என்றற் றொடக்கத்தனவற்றிற் கூறப்படுவதுபோல மிகப் பெரியவாதலால், 'அங்கைத் தலத்தம்மை செங்கண்புதைத்தற்கடங்காமையால்' என்றார். இறைவன் விழிகளாயிருப்பன முச்சுடர்களாதலாலும், அவை புதைக்கப்படுதலும் இருட்படல மூடுதலியல்பாதலாலும், 'எம்பிரானலர் விழிகள் பொத்தலு மிருட்படலமூட' என்றார். கதுப்பு - கன்னம். தெறித்தல் - அறைதல். மலர்க்கால் என்னாது - கான்மலர் என்றமையால் மலரினுஞ் சிறந்தது காலென்றதாயிற்று. நீவல்- துடைத்த லெனினுமாம். (௬)

## வே று.

பைந்தண் கமல வட்டவணைப் பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின் படலமூட முடை
நறவின்,
கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க் கடைசி மகளிர் செந்
நெலைப்பைங், கன்ன லெனவுங் கன்னலைப்பூங் கமுக
மெனவுங் கடைக்கூடாத்,
தந்தங் கருத்துக் கமைந்தபடி. சாற்றிச் சாற்றி முழுமாயச்,
சலதி மூழ்கித் தடுமாறுஞ் சமயத் தவர்போற் றலை
மயங்கு,
மந்தண் பழனக் கந்தபுரிக் கரசே வருக வருகவே, யருளா
னந்தக் கடற்பிறந்த வமுதே வருக வருகவே.

(இ-ள்.) பைதண் - பசுமையும் குளிர்ச்சியுமுள்ள, கமலம் - தாமரை மலராகிய, வட்டம் அணை - வட்ட வணையிலுள்ள, பாவை அனையார் - பிரதிமைபோலுந் திருமகளை நிகர்த்தமாதர், பூவிரியும் - மலர்கள் மலர்கின்ற, பசுமெல் குழற்கு ஊட்டு - பசிய மெல்லிய கூந்தலுக்கு ஊட்டுகிற, அகில்புகையின் படலம் மூட - அகிற் புகைக்கூட்டமானது மூடாநிற்க, முடைநறவின் - முடை நாற்றம் பொருந்திய கள்ளினது, கந்தம் பொதிந்த - நாற்றம் பொருந்திய, செந்துவர்வாய் - செவந்த பவளம் போலும் அதரத்தையுடைய, கடைசி மகளிர் - கடைசியர், செந்நெலை - செந் நெற்பயிரை, பைங்கன்னல் எனவும் - பசிய கரும்பு என்றும், கன்னலை - கரும்பை, பூ கமுகம் எனவும் - பொலிவாகிய கமுக மரங்களெனவும், கடைக்கூடா - முடிவு பெறாத, தம் தம் கருத்துக்கு அமைந்தபடி - தத்தம் மனத்தில் தோன்றினவண்ணம், சாற்றி சாற்றி - சொல்லிச்சொல்லி, முழுமாயச் சலதிமூழ்கி - முழுமாயக் கடலில் முழுகி, தடுமாறும் - தடுமாறுகிற, சமயத்தவர்போல் - சமயவாதிகள் போல, தலை மயங்கும் - தடுமாறுகிற, அம்தண் பழனம் - அழகிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த, கந்தபுரிக்கு அரசே - கந்தபுரிக் கரசனே, வருக வருக—, அருளா

னந்தக் கடற்பிறந்த அமுதே - அருளோடு கூடிய ஆனந்த சாக ரத்திற் றோன்றிய அமிர்தமே—, வருக வருக—, எ-று.

பைந்தண் கமலவட்ட வணையென்னும் அடையால் பாவை திருமகளை யுணர்த்திற்று. பூவிரியும் பசுமென் குழல் என்றமை யால் அணியும்போது போதா யிருந்ததென்பது பெறப்பட்டது. கந்தம் சுகந்த துர்க்கந்தங்க ளிரண்டையு முணர்த்துமாயினும், ஈண்டு முடை நறவின் கந்தம் என்றமையால் துர்க்கந்தத்தையே பெரும்பாலுங் குறிக்கு நாற்றமென் றுரைக்கப்பட்டது. கடைசி மகளிர் கள்ளுண்ட பெருங்களிப்பானும் புகைப்படல மூடலா னும் செந்நெலைக் கன்னலெனவும், கன்னலைக் கமுகமெனவுந் தலைமயங்குவாராயின ரென்க. 'கடைக்கூடா தந்தங் கருத்துக் கமைந்தபடி சாற்றிச் சாற்றி முழுமாயச் சலதி மூழ்கித் தடுமாறுஞ் சமயத்தவர்போல் முடை நறவின் கந்தம் பொதிந்த செந்துவர் வாய்க் கடைசிமகளிர் தலை மயங்குமந்தண் பழனக் கந்தபுரிக் கரசே வருக' என முடித்துக்கொள்க. "சமயவாதிகடத்த மதங்களே யமைவதாக வரற்றி மலைந்தனர்" "சமயவாதிளெலாந் தந்தெய்வ மெந்தெய்வமென் றெங்குந் தொடர்ந்தெதிர் வழக் கிடவு நின்றதெது" என்றற் றொடக்கத் தான்றோர் திருவாக்குக் களானுஞ் சமயத்தவர் இழித்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. அருளானந்தக் கடல் என்றது சிவபெருமானை, "ஆனந்தமா கட லாடு சிற்றம்பலம்" என்றார் மணிவாசகப் பெருமானாரும் (சு)

வள்ளைக் குழையிற் றுவடிபோ மடமா னேக்கிற் கடைசியர் கண், மாலைக் குழல்வண் டோலமிட மடுவில் வெடி போம் வரிவாளை,
பள்ளத் திருடேர் கழுவரீர்ப் பரப்பென் றகல்வான் மிசைத் தாவப், பாகீரதித்தீம் புனல்கிடைத்த பரிசு வீட்டின் பயன் றுய்க்கு,
முள்ளக் கருத்தாற் பிறிதொன்றை யுண்மைப் பொரு ளென் றுள்ளவுந்த, முணர்விற் றெய்வங் கடைக்கூட்ட வுறுதி கிடைத்த படிபோலு,
மள்ளற் பழனப் புள்ளூருக் கரசே வருக வருகவே, யருளா னந்தக் கடற்பிறந்த வமுதே வருக வருகவே.

வள்ளை - வள்ளைத்தண்டுபோன்ற காதிலணிந்த, குழையில் - குழைமீது, தாவடிபோம் - போர் செய்யப்போகிற, மடமான் நோக்கின் - மடமானேக்கத்தையுடைய, கடைசியர்கள் - கடைசி மகளிர்களுடைய, மாலை - பூமாலை யணிந்த, குழல் - கூந்தலில் மொய்த்த, வண்டு - வண்டுகள், ஒலமிட - சத்திக்க, மடுவில் - மடுக்களினின்றும், வெடிபோம் - துள்ளி யெழுகிற, வரிவாளை - நீண்ட வாளைமீன்கள், பள்ளத்து - ஆழத்தையுடைய, இருள் தூங்கு - இருள்தங்கிய, அழுவம் நீர்பரப்பு என்று - கடனீர்ப் பரப்பென்று, அகல் - அகன்ற, வான்மிசைதாவ - ஆகாயத்தின் மேற் குதிக்க, பாகீரதி - ஆகாய கங்கையின், தீ புனல்கிடைத்த - இனியநீர் கிடைத்த, பரிசு - தன்மையானது, வீட்டின் பயன் துய்க்கும் - வீட்டின் பயனை நுகர்கின்ற, உள்ளக் கருத்தால் - மனக்கருத்தால், பிறிது ஒன்றை - வேறொன்றை, உண்மைப் பொருள் என்று - மெய்ப்பொருளென்று, உள்ளவும் - நினையா நிற்கவும், தம் உணர்வில் தெய்வம் - தமதறிவிலுள்ள தெய்வ மானது, கடைக்கூட்ட - முற்றுவிக்க, உறுதி - உறுதிப்பொரு ளானது, கிடைத்தபடி போலும் - கிடைத்த தன்மையை நிகர்க் கின்ற, அள்ளல் பழனம் - சேற்றையுடைய வயல்கள் சூழ்ந்த, புள்ளூருக்கு அரசே—, வருகவருக—, அருளானந்தக் கடற் பிறந்த அமுதே—, வருகவருக—, எ-று.

வள்ளை உவமையாகுபெயர். குழை - காதணி. தாவடி - போர். "தாவடி வந்திப்படியென தாவி தளர்வித்தவே" என்றூர் பிறரும். கள் மாலைக்கு உழல் எனப் பிரித்து, தேனின்பொருட்டுப் பூமாலையி லுழல்கின்ற என்று உரைப்பினுமாம். வெடிபோதல் ஒரு சொல், துள்ளி வெளிப்படுதவென்பது பொருள். பகீரதனு லிவ்வுலகத்துக் கொணரப்பட்டமையால் கங்கையைப் பாகீரதி யென்பர் வடநூலார். வீடு - முக்தி. பிறிதொன்று - வேறொரு தெய்வம். புள்ளூர் - சடாயுபுரம். (எ)

நஞ்சிற் றோய்த்துக் கொலைதீற்று நயநவேலுங் கரும்புருவ,
நாமச் சிலையு மகலல்கு னகுபொற்றேரு மிகல்கடந்து,

வஞ்சிக் கொடிநுண் ணிடைசாய்த்து மதர்த்துக் களித்த மால்களிறு, மற்றும் படைகள் பற்பலவும் வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த,

கஞ்சத் தவிசிற் றிருவன்னார் கடலந் தானைக் கைகிமிரக்,
காமன் படைவீ டெனப்பொலியுங் காட்சியானு மப் பெயரிட்,
டஞ்சொற் றமிழோர் புகழ்வேளூர்க் கரசே வருக வரு கவே, யருளா னந்தக் கடற்பிறந்த வமுதே வருக வருகவே.

(இ - ள்.) நஞ்சில் தோய்த்து - விடத்தில் தோய்த்து, கொலை நிற்றும் - கொலைபூசிய, நயனம் வேலும் - கண்களாகிய வேற் படைகளையும், கருபுருவம் நாமம்சிலையும் - கரிய புருவமென்னும் பெயரையுடைய வில்லினையும், அகல் அல்குல் நகுபொன்தேரும்- அகன்ற அல்குலாகிய விளங்குகின்ற பொற்றேரினையும், இகல் கடந்து - பகைவரை வென்று, வஞ்சிக்கொடி நுண் இடை சாய்த்து - வஞ்சிக்கொடிபோலும் நுண்ணிய இடையை வருத்தி, மதர்த்து களித்த - மதர்த்துக் களித்திருக்கிற, மால்களிறும் - மத மயக்கத்தையுடைய யானைகளையும், மற்றும் படைகள் பற்பலவும்- மற்றுமுள்ள படைகளாகிய பற்பலவற்றையும், வகுத்துக்கொண்டு- ஏற்படுத்திக்கொண்டு, மடல் அவிழ்ந்த - இதழ்விரிந்த, கஞ்சம் தவிசில் - தாமரைமலர்ப்பீடத்தில் வீற்றிருக்கிற, திரு அன்னார் - இலக்குமியை நிகர்ப்பவராகிய மாதரென்கிற, கடல்தானை - சேனை சமுத்திரமானது, கைமிர - மிக்குவர, காமன் படைவீடு என - மன்மதனது படைவீடென்று சொல்லும்படி, பொலியும் காட்சியானும் - விளங்குகிற தோற்றத்தாலும், அப்பெயர் இட்டு - அந்தப் பெயரையேயிட்டு, அம்சொல் தமிழோர் - அழகிய சொல் விலக்கணம்வல்ல தமிழ்நூலோர், புகழ் - புகழ்கிற, வேளூர்க்கு அரசே—, வருகவருக—, அருளாநந்த—, வருக—, எ-று.

தோய்த்தல் - நனைத்தல். மால்களிறு என்றது தனத்தை. கஞ்சம் - நீரிற்றோன்றுவது, இது இங்கு கஞ்சத்தவிசிற் றிருவென் றமையால் செந்தாமரைக்காயிற்று. கைமிர்தல் ஒரு சொல். காமன் படைவீடாய்த் தோன்றுங் காட்சியால் இதற்கு வேளூர் எனப் பெயர் கூறுவர் தமிழரென்பது கருத்து. வேள் - விருப் பத்தை யுண்டாக்குவோன். காமன் என்னும் வடசொற்கு மிதுவே பொருளென் றுணர்க. (அ)

## வேறு.

உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே, யுருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுந லுதயமே,
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே, கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே,
யலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே, யறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே,
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே, வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே.

(இ - ள்.) உலகுகுளிர-உலகம் குளிரும்படி, எமது மதியில்-எமதறிவில், ஒழுகும் - ஒழுகாநின்ற, அமுதகிரணமே - சந்திரனே, உருகும் - உருகாநின்ற, அடியர் - அடியார்களுடைய, இதயம் நெகிழ - இருதயமானது நெகிழும்படி, உணர்வில் எழும் - அறிவினிடத்துத் தோன்றுகிற, நல் உதயமே - நல்ல சூரியனே; கலையும் - நூல்களும், நிறையும் - நிறையும், அறிவும் - உணர்வும், முதிர - முதிரும்படி, முதிரும் - முதிர்கிற, மதுரம் நறவமே - இனிய தேனே, கழுவு துகளர் - குற்றமற்ற ஞானியர், முழுக - முழுகும்படி, நெடிய கருணைபெருகு - பெரிய கருணைநீர் பெருகுகின்ற, சலதியே - கடலே, அலகு இல் புவனம் - அளவில்லாத புவனங்கள் யாவும், முடியும் வெளியில் - முடிகின்ற வெளியிடத்தில், அளியும் - முதிர்ந்த, ஒளியின் நிலயமே - ஒளிக்குப் பிறப்பிடமே, அறிவு உள் அறிவை - அறிவுக் கறிவாயிருப்பதை, அறியுமவரும் - அறிகிறவராகிய ஞானியரும், அறிய அரிய - அறிதற்கரிதாகிய, பிரமமே—, மலையின் மகள்-மலைமகளது, கண்மணியை அனைய - கண்மணியை நிகர்த்த, மதலை - புதல்வனே, வருக வருக—, வளமைதழுவு - வளங்கள் யாவும் பொருந்திய, பரிதிபுரியில்—, மருவு - எழுந்தருளிய, குமரன்-குமரனே, வருகவருக—, எ-று.

துகள்கழுவினாரைக் கழுவுதுகளர் என்றார். இது வடமொழியில் கதகல்மஷர், ஜிதேந்த்ரியர், என்பன போல்வது. இதை யடி

யொற்றித் தமிழறிஞரும், பவங்கடந்தவர் என்றற்கு "கடக்கும் பவத்தர்" என்றும், பற்றுவிட்டவர் என்றற்கு, "விட்டபற்றினர்" என்றும் கூறுதல் காண்க. நிலயம் - பிறப்பிடம். "உணர்ந்தார்க் குணர்வரியோன்" "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என இறைநிலையுணர்ந்த மேலோர் கூறுதலான், 'அறிவு ளறிவையறியு மவருமறிய வரிய பிரமமே' என்றார். சூரியன் பூசித்த திருப்பதி யாதலால், பரிதிபுரியென் றிதற்குப் பெயர் வழங்கும். (க)

இழுமெ னருவி சொரியு மிமயமுதல்வி புதல்வன் வருகவே,
யியலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன் வருகவே,

யொழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே,
யொருவ னிருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே,

விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக வருகவே,
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குமரன் வருகவே,

மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே,
வளமைதழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே.

இழுமென் அருவி - இழுமென்னும் அருவிகளை, சொரியும் - சொரிகின்ற, இமய முதல்வி - இமயமலையிற் பிறந்த முதல்வி யின், புதல்வன் - புதல்வனே, வருக—, இயலும் நடையும் வடிவும் அழகும் - இயலையும் நடையையும் வடிவையும் அழகையும், எழுத-எழுதுதற்கு, அரியன் - அரியனானவனே, வருக—, ஒழுகு கருணை - ஒழுகாநின்ற கருணைவெள்ளத்தில், முழுகு - மூழ்கி யிருக்கிற, கமலவதனன் - கமலமுகனே, வருக—, ஒருவன் - ஒப்பற்றவனாகிய சிவபிரான், இருவரொடு - பிரம விட்டுணுக்க ளாகிய இருவரோடு, கைதொழும் - கை குவித்து வணங்குகிற, நல் - நன்மையைத் தருகிற, உபயசரணன் - இரு சரணனே, வருக—, விழுதுவிடு - விழுதுவிட்ட, வெள்நிலவு பொழியும் - வெண்ணிலவைச் சொரிகின்ற, நகையன் - நகையை யுடைய வனே, வருக வருக—, விளரிபயிலும் - விளரியைப் பழகுகிற, அளியும் ஞிமிறும்-கருவண்டும் பொன் வண்டும், விரவு - கலந்து

வாழ்கின்ற, குரவன்-குராமலர் மாலையை யுடையவனே, வருக—, மழலை முதிர - மழலை முதிராநிற்க, முதிரும் - முதிர்கின்ற, மதுரம் - இனிமையாகிய, வசனன் - சொல்லையுடையவனே, வருக வருக—, வளமைதழுவு பரிதிபுரி—, வருக—, எ-று.

விளரி - எழிசையினொன்று, அது நெஞ்சிற் பிறப்பது, யாழோசை யெனினுமாம். புதல்வன், அரியன், வதனன், சரணன், நகையன், குமரன், வசனன் என்பன அண்மைவிளிக ளாதலால் இயல்பாயின. முழுது என மேல்வருதலால் கருணை வெள்ளமாக்கி யுரைக்கப்பட்டது. (ம),

வருகைப்பருவம் முற்றிற்று.



## அம்புலிப் பருவம்.



மண்டலம் போற்றுருவ மமுதமய மாய்முழு மதிக் கடவு ளெனவருதலால், வானூறு தலைமடுக் கப்பொங்கு மான ந்த மாக்கட லிடைத்தோன்றலாற்,

றண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத் தாமரை முகிழ்த் திடுதலாற், சகலபுவ னத்தினு முயிர்ப்பயிர் தழைப்பநற் றண்ணளி சுரந்திடுதலாற்,

றுண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ் சோதிகட் பொறியாதலாற், றேன்றவிவ னின்னை யொத் துளனு னினக்குமொரு துணையிவன் போலில்லைசா,

ணண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொடம்புலீ யாடவாவே, யழகுபொலி கந்தபுரி தனையவரு கந்த னுட னம்புலீ யாடவாவே.

(இ - ள்.) மண்டலம்போற்று உருவம் - எல்லாவுலகங்களும் வணங்குதற்குரிய வடிவமானது, அமுதமயமாய் - அமிர்தரூபமாய், முழுமதிக்கடவுள் என வருதலால் - முற்றறிவுடைய தெய்வம் என வருதலாலும், வான்ஆறு தலைமடுக்க பொங்கும்-வானாறு

தலைமடுத்தலாற் பொங்குகிற, ஆநந்தமாக் கடலிடை தோன்ற லால் - சிவபெருமானிடத்தில் தோன்றுதலால், தண்டல் இல் - தடையில்லாத, கொடிச்சிவாய்-குறத்திவாயாகிய, குமுதம் விள்ள- குமுதமலர, கரத்தாமரை முகிழ்த்திடுதலால் - கையாகிய தாம ரையை கூப்புதலால், சகல புவனத்திலும் - எல்லா வுலகங்களி லும் உள்ள, உயிர்பயிர் தழைப்ப - உயிர்களாகிய பயிர்கள் செழி க்க, நல்தண்ணளி சுரந்திடுதலால் - நல்ல கிருபையை தோற்று விக்கின்றமையாலும், துண்டம் மதி நதியொடு பொதிந்த - சந்திர கண்டத்தை நதியோடு அணிந்த, வேணி - சடாபாரத்தையுடைய, பரஞ்சோதிகட் பொறிஆதலால் - சிவபெருமானுடைய கட்பொறி யாய் விளங்குதலால், தோன்றல் இவன் - தோன்றலாகிய இவன், நின்னை ஒத்து உளன் ஆல் - உன்னை நிகர்த்திருக்கிறு னுதலால், நினக்கும் - உனக்கும், இவன்போல் - இவனைப்போல, ஒரு துணை இல்லை - ஒரு சகாயமில்லை, (ஆதலால்) அண்டர் அண்டத்தொடு- தேவலோகத்தோடு, அகில அண்டம் படைத்தவனொடு - எல்லா வுலகங்களையும் படைத்தவனுகிய இவனுடன், அம்புலீ - சந்தி ரனே, ஆடவா - விளையாட வருவாயாக, அழகுபொலி - அழகா னது மிக்கு விளங்குகிற, கந்தபுரி தழையவரு - கந்தபுரி செழிக்க எழுந்தருளிய, கந்தனுடன்—, அம்புலீ யாடவா—, எ-று.

இந்தப்பருவம் சந்திரனை நோக்கிச் சதுருபாயத்தாலு மழை த்ததாகக் கூறப்படுதல் கவி மரபாதலால், அவ்வுபாயங்களை அவ் வச்செய்யுட்களின் கீழ்க் குறித்திருத்தல் காண்க. சதுருபாயம் நால்வகை யுபாயங்கள். அவை; சாமம் பேதம் தானம் தண்டம் என்பன, அவற்றுள் சமப்படுத்திக் கூறல் சாமமென்றும், வேறு படுத்திக்கூறல் பேதமென்றும், வேண்டியதொன்றைக் கொடுத் துக் கூறல் தானமென்றும், தண்டிப்பதாகக் கூறல் தண்டமென் றுங் கூறப்படும். இவை இப் பருவத்தின் செய்யுட்களின் கீழ்க் குறித்தும் ஆண்டுக் கண்டுகொள்க. மண்டலம் இடவாகுபெயர்.

சந்திரன்—அமுதகிரணனுய் முழுமதிக் கடவுள் என வருதலால்.

குமரன்—மோக்கவடிவாய் முற்றறிவுடைய தெய்வம்.

சந்திரன்—வான்ஆறு தலைமடுக்க பொங்குமானந்த மாகடலிடை தோன்றலால் - மேன்மையாகிய நதிகள் வந்து கலத்தலால்

பொங்குகிற பெரிய சங்கங்கள் தவழ்கிற அழகிய கடலிடையில் தோன்றுதலால்.

குமரன் — ஆகாயகங்கை முடியிற் பொருந்தலால் களிக்கின்ற சிவபிரானிடத் தவதரித்தலால்.

சந்திரன் — கொடிச்சிவாய் குமுதம்விள்ள, கரத்தாமரை முகிழ்த்திடுதலால் - கொடியின்கட் குமுதமலர ஒளியுள்ள தாமரை குவிதலால்.

குமரன் — வேடிச்சி வாயாகிய குமுதம் விரியக் கைத்தாமரை கூப்புதலால்.

சந்திரன் — உயிர்பயிர் தழைப்ப நல் தண்ணளி சுரந்திடுதலால் - உயிருள்ள பயிர்கள் செழிக்க நல்ல குளிர்ச்சி சுரத்தலால்.

குமரன் — உயிர்களாகிய பயிர்கள் செழிக்க நற்கருணை சுரத்தலால்.

சந்திரன் — துண்டமதிநதியொடு பொதிந்த வேணிப் பரஞ்சோதிகட் பொறியாதலால் - சந்திரகண்டம் கங்கையாற்ருேடு பொருந்திய சடையையுடைய சிவபிரானது கண்ணுகிய பொறியாதலால்.

குமரன் — கண்ணிற்ருேன்றின தீப்பொறியாதலால்.

தோன்றல் - பெருமையிற் சிறந்தோன். அண்டர்-தேவர். ஆனந்தமாக்கடல் - சிவபிரான், இது "ஆனந்தமாக்கடலாடு சிற்றம்பலம்" என்னும் மணிவாசகர் திருவாக்கினு லினிது விளங்கும். (க)

**சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந் தோகைமேல் கொண் டருளினுய், தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச் சோதி வேலையு முகந்தாய்,**

**குற்றமில் குணத்தைக் குறித்தவிர வலர்முகங் கோடாதளித்தல் செய்தாய், கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக் குடங்கொடிய தாகவைத்தா,**

யுற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதன் டேனொழுக வொளி
நிலா நகை முகிழ்த்தா, புன்செய்கை யெம்பிரான் றன்
செய்கை போலுமா லுனையுமிவ னெவ்வாதிரா,
னற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுட னம்புலீ யாட
வாவே, யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே.

(இ-ள்.) சொற்றரு பெரும்புலவர் கலைஅமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்,

சந்திரன் — புகழ்பெற்ற பெருந்தேவர் கலையமிர்தத்தைக்கொள்ள
விருந் துவகையைக் கொண்டருளினை.

குமரன் — சொன்மாலைசூட்டுகிற பெரிய புலவராகிய நக்கீரரது
கலைச்சுவையாகிய அமுதைக்கொள்ள பெரிய மயிலின்மீ
தெழுந்தருளினை,

தோற்றிமுன்பொங்கி மலைபோல வலைமோது மச்சோதி
வேலையு முகந்தாய்.

சந்திரன் — எதிரே தோன்றிப் பொங்கி மலைபோல அலைமோது
கிற அந்த வொளியுள்ள கடலையும் உவந்தனை.

குமரன் — (அன்பர்க்கு) எதிரே தோன்றி, சிறிய கிரவுஞ்ச மலை
யைப்போல சமுத்திரத்தையும் (வருணன்விட்ட கடலைக்
கெடுக்கிற அந்த வொளியுள்ள வேற்படையையும் விரும்பினை,

குற்றமில் குணத்தை குறித்த விரவலர்முகங் கொடாதளித்
தல் செய்தாய்.

சந்திரன் — குற்றமில்லாத குணத்தை யுடைய இராமலர்களின்
முகங் கோடாது காத்தனை.

குமரன் — குற்றமற்ற குணத்தையுடைய ஞானியரிடத்தில் நடுவு
நிலையாய் நின்று அவர்களைக் காத்தருளினை,

கோகநக நாயகன் வரக் கூவிடுங் குக்குடம் கொடியதாக
வைத்தாய்.

சந்திரன் — சூரியன்வரக் கூவுகிற சேவற்கோழியைக் கொடி
தாக வைத்தனை.

குமரன் — சூரியன் உதிக்கக் கூவுகிற சேவற்கோழியைத் துவச மாயமைத்துக் கொண்டனை.

சந்திரன் — மிக்க, இதழ்களையுடைய குமுதங்கள் வெடித்துக் குளிர்ந்த தேனொழுகும்படி ஒளிநிலாவைத் தோற்றுவித்தாய்.

குமரன் — பொருந்திய இதழாகிய குமுதமலர் விரிந்து தேன் ஒழுகாநிற்க ஒளிநிலாவாகிய புன்முறுவலைச்செய்தாய். ஆத லால் உன்செய்கை யெம்பிரான்றன் செய்கை போலுமா லுனையுமிவ னெவ்வாதிரான்-உன் செய்கைகளெல்லாம் எம் பெருமானது செய்கைகளை யொத்திருக்கின்றன ஆதலால் இவன் உன்னையும் ஒவ்வாதிரான், அல் பொலி - இருட்டுப் போல விளங்குகிற, களத்தவன்-கண்டத்தை யுடையவனாகிய சிவபிரான், அளித்த - பெற்ற, குமரேசனுடன் - குமாரக் கட வுளோடு, அம்புலீ யாடவா—, அழகுபொலி—, வா—, எ-று

புலவர் தேவர்க்கும் கற்றறிந்தார்க்கும் பெயர். ஓகை உவகை யென்பதன் மரூஉ. தோகை சினையாகுபெயர். இராமலர்-குமுத முதலாயின. கொடிதாகவைத்தல் - விரகிகளுக்குக் கொடிதா யிருக்கச் செய்தல். இதழ் - சந்திரனுக்குப் பூவிதழும், குமரனு க்கு வேடிச்சியிதழும். இவ்விரண்டு செய்யுளும் சாமோபாயத் தாற் கூறப்பட்டன. (உ)

கங்கைமுடி யடிகட்கொர் கண்ணா யிருத்தியக் கண்ணினுண் மணியிவன்காண், கலைகள் சில நிறைதி பின் குறைதியிவ னென்றுமொண் கலைமுழுது நிறையநின்று,

னெங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவ ரெவர்க் குமிர வினையொழித்தா, னிருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தி யிவ னெவ்வுயிரும் வாழச்செய்தான்,

பொங்கமுத மமுதா சனர்க்குதவி னுயிவன் புத்திமுத் தியு மளித்தான், புவனம் படைத்தவிவ னின்னின்மிக்காரெ னப் புகல்வதோர் பொருளன்றுகா,

ணங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுட னம்புலீ யாடவாவே, யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட னம்புலீ யாடவாவே

(இ - ள்.) நீ - சந்திரனாகிய நீ, கங்கைமுடி அடிகட்கு - கங்கையைச் சிரோபூஷணமாக முடித்துக்கொண்ட சிவபெருமானுக்கு, ஓர் கண்ணாய் இருத்தி - ஒரு கண்ணாயிருக்கிறாய், இவன் - குமரனாகிய இவன், அ கண்ணினுள் மணி - அந்தக் கண்ணுள்ளே மணியாயிருக்கிறான், கலைகள் சில நிறைதி பின் குறைதி - நீ சில நாள் கலைகள் நிறைகிறாய் பின்னே குறைகிறாய், இவன் என்றும் - எந்நாளும், ஒண்கலை முழுதும் நிறைய நின்றான் - ஒட்பமாகிய கலைகளெல்லாம் நிறைய நிற்கிறான், எங்கும் இரவோன் எனத் திரிதி - நீ எவ்விடத்தும் இரவோனென்று சொல்லும்படி திரிகிறாய், இவன் அடியவர் எவர்க்கும் - அடியார் யாவர்க்கும், இரவினை ஒழித்தான் - இரவைத் தவிர்த்தான், இருநிலத்து அங்குரிக்கும் பயிர் வளர்த்தி - நீ பெரிய நிலத்தில் முளைக்கிற பயிர்களை வளர்க்கிறாய், எவ்வுயிரும் வாழச்செய்தான் - இவன் எல்லாவுயிர்களையும் வளர்த்தான், பொங்கு அமுதம் அமுதாசநர்க்கு உதவினாய் - நீ விளங்குகிற அமிர்தத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தாய், புத்திமுத்தியும் அளித்தான் - இவன் புக்திமுக்திகளையுங் கொடுத்தான், புவநம்படைத்த இவன் - உலகங்களைப் படைத்த இவன், நின்னின் மிக்கான் என - உன்னினு மேலானவனென்று, புகல்வது - சொல்லுவது, ஓர் பொருள் அன்று - ஒரு பொருளல்ல, அம்கண்மறை ஓலமிட்டு அரற்ற நின்றவனுடன் - அழகிய அறிவைத் தருகிற வேதங்களும் முறையிட்டரற்றும்படி நின்றவனோடு, அம்புலீ யாடவாவே—, எ-று.

கங்கைமுடி யென்பதற்குக் கங்கையை முடியிலுடையவெனினுமாம். சந்திரனுக்குக் கலை கூறுகளும் குமரனுக்குக் கலை வேதாகம புராணேதிஹாஸாதிகளும். இரவோன் சந்திரனைக் குறிக்குங்கால் இரவினை யுண்டாக்குவோனென்றும், குமரனைக் குறிக்குங்கால் இரவு எற்குந் தொழிலென்றும், அறியாமையாகிய இருளென்றும் கொள்க. அங்குரித்தல் - முளைத்தல். அமுதாசநர் - அமுத அசநர் எனப் பிரிக்க. அமிர்தத்தை யுணவாகவுடையவர் என்பது பொருள். புத்தி - நுகர்தற்குரிய இகபோகங்கள், முத்தி - வீடு, இவ்விரண்டும் புக்திமுக்தி என்னும் வடசொற்றிரிபு. நின்னின் என்பதில் இன் என்னுமைந்தாவது உறழ்பொருளது. அங்கண் என்பதற்கு அழகிய காண்டம் முதலிய வுறுப்புக்களெனி

னுமாம். மறை யென்பதற்கு அறமுதலிய நாற்பயனையுந் தன்னுள்ளே மறைத்திருப்பதென்றும், அந்தணர்க்கன்றி யேனையர்க்கு அதிகரிக்கத் தகாததென்று மறுக்கப்பட்டதென்றும் பொருள் கூறுவர். ஓலமிட்டென்பது ஓலிட்டெனத் தொகுத்தது. மறையோலிட்டரற்ற லெற்றுக்கெனின், இக் குமரன் பெருமை தமக்கெட்டாமையானென்க. "அல்லையீதல்லையீதென மறைகளு மன்மைச் சொல்லினாற் றுதித்திளைக்கும்" என்று பிறரு மிவ்வாறு கூறுதல் காண்க. (௬.)

பாயிருட் போதத் திருட்டன்றி யகவிருட் படலங் கிழிப்ப
துணராய், பனிவிசும் பிற்பொலிவ தொன்றலாற் புவனப்
பரப்பெலாம் பொலிவதோராய்,

சேயிதழ்க் குமுதந் திறப்பதல் லாதுளத் திருமலர் திறக்க
வறியாய், சிறைவிரி சகோரப்பு ளன்றி யெவ் வுயிருந்
திளைத்தின்ப மாரச்செயாய்,

நீயிவற் கொப்பன்மை செப்புவ தெனிப்பரிசி னின்பெருந்
தவமென சொல்கே, னெடியவன் முதற்றேவர் குறுகிற்
பவுமுனை நினைத்தழைத் தருளினன்கா,

ணுயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனெ டம்புலீ
யாடவாவே, யழகுபொலி கந்தபுரி தழைபவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே.

(இ - ள்.) பாய் இருள்போதத்து இருட்டு அன்றி - பரவிய இராக்காலத்து இருட்டையன்றி, அகம் இருள்படலம் கிழிப்பது உணராய் - உள்ளிருட்டொகுதியைக் கீள்வ தறிந்திலை, பனிவிசும்பில் பொலிவது ஒன்று அல்லால் - குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தில் விளங்குவ தொன்றையன்றி, புவனப் பரப்பு எல்லாம் பொலிவது ஓராய்-உலகப் பரப்பு முழுதும் விளங்குத லறிந்திலை, சே இதழ் குமுதம் திறப்பது அல்லால் - செவ்விதழ்களையுடைய குமுதமலரை விரிப்பதல்லாமல், உள்ளத்திருமலர் திறக்க அறியாய் - இதயமாகிய அழகிய தாமரைமலரை விரிக்க வறிந்திலை, சிறைவிரி சகோரப்புள் அன்றி - சிறை விரிக்கிற சகோரப் பறவை

யன்றி, எவ்வுயிரும் திளைத்து இன்பம் ஆரச்செயாய் - எல்லா வுயிர்களும் பேரின்பம் நுகரச்செய்திலை, இவற்கு ஒப்பு அன்மை- இக்குமரநாயகனுக் கொப்பல்லாமையை, செய்வது என் - சொல்லுவதென், இப் பரிசில் - இந்தத் தன்மையில், நின் பெருந்தவம் என் சொல்கேன் - உனது பெரிய தவப்பயன் யாதென்று சொல்லுவேன், நெடியவன் முதல் தேவர் - நெடியோன் முதலிய தேவர்கள், குறுகி நிற்பவும் - கிட்டி நிற்கவும், உன்னை நினைத்து அழைத்தருளினன் - உன்னை நினைந்து உன்னுடன் விளையாடுமாறு அழைத்தருளினன், ஆயிரமறைக்கும் - ஆயிர வேதங்களுக்கும், ஒரு பொருளாயிருப்பவனோடு - ஒப்பற்ற பொருளா யிருப்பவனோடு, அம்புலீ யாடவாவே—, எ-று.

பொழுதென்று பொருள்படும் போதென்னுஞ் சொல் அத்துச் சாரியை பெற்றுப் போதத்தென நின்றது. உள்ளிருள்-அஞ்ஞானவிருள். ஓர்தல்-அறிதல். நெடியவன்-திரிவிக்கிரமனாய் நீண்டவன் (திருமால்). ஆயிரம் ஈண்டுப் பலவென்னும் பொருட்டு. இவை யிரண்டு செய்யுளானும் பேதோபாயங் கூறப்பட்டது. (ச)

தருமன்னு பொன்னுலகு மண்ணுலகு மொக்கத் தலைத்தலை
மயங்கத்தொகுஞ், சன்னிதி யடைந்தவர்கள் பையுளோய்
முற்றுந் தவிர்ந்தக மகிழ்ந்து தவிராச்,
கருமன்னு மூழிப் பெரும்பிணியு மாற்றிடுதல் கண்டனை
யிருந்தியானின், கயரோக முடன் முயற்கறையுந்
துடைத்திடக் கருதிடுதி யேலெம்பிரான்,
றிருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத் திருச்சாந்து
நிற்கவற்றுச், சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்
குறுந் திவலையொன் றேயமையுமா,
லருவென்ன வுருவென்ன வன்றென்ன நின்றவனொ டம்புலீ
யாடவாவே, யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட
னம்புலீ யாடவாவே.

(இ - ள்) தருமன்னு பொன் உலகும் - (கற்பகத்) தரு நிலை பெற்றிருக்கிற வானுலகும், மண் உலகும் ஒக்க - மண்ணுலகும் ஒத்திருக்கும்படி, தலைத்தலை - இடமிடந்தோறும், மயங்க - தலை

மயங்க, தொகும் - கூடுகிற, சந்நிதி அடைந்தவர்கள் - (இவனது) சந்நிதியைச் சேர்ந்தவர்களுடைய, பையுள் நோய் முற்றும் - (பிற வித்) துன்பமுழுதும், தவிர்த்து - நீங்கி, அகம்மகிழ்ந்து - மன மகிழ்ந்து, தவிரா - நீங்காத, கருமன்னும் - கருப்பத்தில் நிலை பெற்ற, ஊழி பெரும்பிணியும் - ஊழிப் பெருநோயும், மாற்றிடு தல் - ஒழித்திடுதலை, கண்டனை இருத்தி ஆல் - கண்டிருக்கிறு யாதலால், நின் கயரோகமுடன் - உன்னுடைய க்ஷய ரோகத் தோடு, 'முயல்கறையும் - முயற்களங்கமும், துடைத்திட - ஒழித் துக்கொள்ள, கருதிடுதியேல் - நினைப்பையாயின், எம்பிரான் - எம்பெருமானது, திருமுன்னர் - சந்நிதிக்கெதிரே, வெண்சாந்து - வெண்ணீற்றை, அள்ளி இடு - அள்ளித் தரித்துக்கொள், திருச் சாந்து நிற்க - வெண்ணீறு நிற்க, வற்று - வடியாத, சித்தாமிர் தம் - சித்தாமிர்தமென்கிற, தடத்தீர்த்தத் துறைக்கு உறும் - பெருமையுள்ள தீர்த்தத் துறையிற் பொருந்திய, திவலை ஒன்றே அமையும் - துளியொன்றே போதும், ஆல் - ஆதலால், அரு என்ன - அருவெனவும், உரு என்ன - உருவெனவும், அன்று என்ன - (இவ்விரண்டும்) அன்றெனவும், நின்றவனொடு - நின்றவ ஞகிய குமாரக்கடவுளோடு, அம்புலீ யாடவாவே —, அழகு பொலி —, வாவே —, எ-று.

தரு - பஞ்சதருக்க ளெனினுமாம். அவை யாவன - அரிசந் தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. தேவ லோகம் பொன்மயமா யிருத்தலால் அதனைப் பொன்னுலகு என்றார். உன் கயரோகமும் முயற்கறையும் ஒழிய வேண்டுவை யாயின் இவன் சந்நிதியின் வெண்ணீற்றை யள்ளித் தரித்துக் கொள், சித்தாமிர்தத் தீர்த்தத்தொரு துளியை யள்ளி யுன் உடல் மேல் தெளித்துக்கொள் என்பது கருத்து. (ரு)

ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப தொருதெய்வ
முண்டெனவெடுத், துரையா லுணர்த்து மறை யொழி
யவெவ ரெவர்கட்கு மூன்கண்ணு ளக்கண்ணதாம்,

விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள் வேண்டிய
வரமகொடுப்பாவ், மெய்கண்ட தெய்வமித் தெய்வமல்
லாற் புவியில் வேறில்லை யென்றுணர்தியாற்,

பொழியாத புயறங்கு புவனமுந் திசைமுகப் புத்தேள்
பெரும்புவனமும், பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு
வேண்டினும் பொருளன் றிவற்குமற்ற,
வழியாத வீடுந் தரக்கடவ னிவனுட னம்புலீ யாடவாவே,
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட னம்புலீ
யாடவாவே.

(இ - ள்.) ஒழியாத - தொலையாத, புவனத்து - புவனங்களி லுள்ள, உயிர்க்கு - உயிர்களுக்கு, உயிர்ஆய் நிற்பது - உயிராய் நிற்பதாகிய, ஒரு தெய்வம் உண்டு என - ஒரு தெய்வமுண்டென்று, உரையால் எடுத்து உணர்த்துவதை ஒழிய - சொல்லால் எடுத்தறிவிப்பதை யொழிய, எவர் எவர்கட்கும் - எவ்வெவர்களுக்கும், ஊன்கண் - மாமிசக்கண், உள்ளக்கண்ஆம் விழியாக - மனத்தின்கண்ணிருக்கிற கண்ணாக, முன்நின்று-எதிர்நின்று, தண்ணளி சுரந்து-கருணைசுரந்து, அவர்கள் வேண்டிய அவர்கள் விரும்பின, வரம்கொடுப்பான் - வரங்களைத் தந்தருள்வான், புவியில்-இவ்வுலகத்தில், இதெய்வம் அல்லால்-இந்தத் தெய்வமன்றி, மெய்கண்ட தெய்வம் - மெய்கண்ட தெய்வமானது, வேறு இல்லை என்று உணர்தி - வேறில்லையென் றறிவாயாக, பொழியாத புயல்தங்கு புவனமும் - விஷ்ணுலோகமும், திசைமுகப்புத் தேள்பெரும் புவனமும் - பிரமனது பெரிய வுலகமும், பொன் உலகும் - சுவர்க்கலோகமும், மண்ணுலகும் - மத்தியலோகமும் (ஆகிய இவற்றுள்), எவ்வுலகு வேண்டினும் - எவ்வுலகம்பெற விரும்பினாலும், இவற்கு - இவனுக்கு, பொருள் அன்று - ஒருபொருளன்று, மற்ற - (இவ்வுலகங்களின்) வேறாகிய, அழியாத வீடும் - கெடாத முத்தியையும், தரக்கடவன் - தந்தருளவல்லன், (ஆதலால்) இவனுடன்- இவனோடு, அம்புலீ யாடவாவே—, எ-று.

மேகவண்ணனாதலால் திருமாலைப் பொழியாதபுயல் என்றார் இது உவமை யாகுபெயர். வீடு - முத்தி. இதனீற்றும்மை உயர்வு சிறப்பு. இறந்தது தழீஇயதுமாம். அழியாதவீடும் என்றமையால் மேற் கூறப்பட்ட வுலகங்கள்யாவு மழிவனவென்பதும் பெறப்பட்டது. இவையிரண்டு செய்யுளானும் தானோபாயங் கூறப்பட்டது. (சு)

நெட்டுடற் பைங்கட் கருப்பேய்கள் செம்மயிர் நிரைத்
தூணம் வீக்கியார்த்து, நிற்குங் குறட்பூத மொன்றினை
விடுத்துடலி னெடியபழு வென்பு நெரியக்,

கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக் கண
நாதர் கடுகமுடுகிக், கடல்வாய் திறந்தெனப் பிலவாய்
திறந்தலறு காட்சிநீ காணுயலை,

மட்டுடைத் தூறுந் தடங்கமலன் முதலியோர் வாய்புதைத்
தஞ்சிநிற்ப, வருகென் றழைத்திடவும் வாரா திருத்தி
யான் மற்றிவன் முனிந்தாலுனக்,

கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மைபனுட னம்புலீ
யாடவாவே, யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்த
னுட னம்புலீ யாடவாவே.

(இ - ள்.) நெடு உடல் - நெடியவுடம்பையும், பைகண்-பசிய
கண்களையுமுடைய, கருபேய்கள் - கரிய அலகைகள், செம்மயிர்
நிரை - செம்மயிர் வரிசையாகிய, தூணம் - தூணில், வீக்கி-கட்டி,
ஆர்த்துநிற்கும் - ஆரவாரித்து நிற்கிற, குறள்பூதம் ஒன்றினை விடு
த்து - குறும்பூதமொன்றை யேவி, உடலில் - உடம்பிலுள்ள,
நெடிய பழு என்பு நெரிய - நெடுகிய பழுவெலும்பு நெரியும்படி,
கட்டு என - கட்டென்றும், பிடி என - பிடியென்றும், கொடிறு
உடைத்து அடி என - கபோலத்தையுடைத்து அடியென்றும்,
கணநாதர் கடுக-கணநாதர் கடுகுதலும், முடுகி - விரைந்து, கடல்
வாய் திறந்தென - கடலானது வாய்திறந்தாற்போல, பிலவாய்
திறந்து அலறு - குகைபோலும் வாயைத் திறந்தலறுகிற, காட்சி-
காட்சியை, நீ காணுய் அல்லை - நீ பாராயல்லை, மட்டு-தேனானது,
உடைத்து - முறுக்குடைத்து, ஊறும் - சுரக்கிற, தடம்கமலன்
முதலியோர் - பெரிய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன் முத
லானவர், வாய்புதைத்து - வாய்பொத்தி, அஞ்சி நிற்ப - பயந்து
நிற்க, வருக என்று அழைத்திடவும் - (உன்னை) வாவென்றழைக்
கவும், வாராது இருத்தி - வராமலிருக்கிறாய், ஆல் - ஆதலால்,
இவன் முனிந்தால் - இவன் வெகுள்வானுயின், உனக்கு-நினக்கு,

அட்டதிக்கினிலும் - எட்டுத்திசையிலும், ஒரு திக்கு இல்லை - ஒரு புகலிடமில்லை, (ஆதலால்) எம் ஐயனுடன் - எமதிறைவனாகிய குமரனோடு, அம்புலீ யாடவாவே—, அழகுபொலி, எ-று.

பழுவெலும்பு-விலாவெலும்பு கொடிறு - கன்னம். காணாயலையென்றது கண்டேயிருக்கிறாயென்றவாறு. பிரமன் முதலியோர் வாய்புதைத்து நிற்க உன்னிடத்துக் கருணையாலுன்னையழைத்தான், நீ வாராதிருப்பின் இவன் முனிவான். அப்போது உனக்குப் புகலாயிருந்து உன்னைக் காப்பவரொருவருமிலர் ஆதலால் இவனுடனுடவாவென்பது கருத்து. (எ)

குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர் குடித்திட விடுத்து நின்றான், குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப் பசுங் குருதிபொங் கப்புடைத்தா,
னின்றைக் குழந்தையென் றெண்ணாது குலிசன்முதலெண் மரும் பிறருமொருஞான், றெதிர்நின் றுடற்றியவர் பட் டபா டறியா திருத்தியலை யதுகிடக்க,
முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன முடிய மரர் மொத்துண்டநாண், முழுமதிக் கடவுணீ யவமதிப் புண்டதை மொழிந்திடக் கடவ தன்று,
லன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி யம்புலீ யாட வாவே, யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட னம் புலீ யாடவாவே.

(இ - ள்.) குன்றம் திறந்திட்ட - மலையைப் பிளந்திட்ட, குடுமிவேல் - நுனியையுடைய வேற்படையை, சூர் உயிர் குடித்திட - சூரனுயிரை யுண்ணும்பொருட்டு, விடுத்து நின்றான் - எவி நின்றான், குண்டிகை கள்வனை - பிரமனை, குடுமித்தலை - குடுமித் தலையில், பசுங்குருதி பொங்க புடைத்தான் - பச்சுதிர மொழுகக் குட்டினான், இன்றை குழந்தை யென்று எண்ணாது - இன்று பிறந்த குழந்தையென்று நினையாமல், குலிசன் முதல் - இந்திரன் முதலாகிய, எண்மரும் - அட்டதிக்குப்பாலகரும், பிறரும் - மற்றுள்ளாரும், ஒருஞான்று - ஒருநாள், எதிர்நின்று உடற்றி - எதிர்

நின்று போர்செய்து, அவர் பட்டபாடு - அவர்கள் பட்ட பாட்டினை, அறியாது இருத்தி அல்லை - நீ அறியாமலிருக்கிறாயல்லை, அது கிடக்க - அது நிற்க, முன் - முற்காலத்தில், தக்கன் - தக்கனது, வேள்விக்களம் - வேள்விக்களமானது, கொலைக்களம் என்ன - கொலைக்களமென்று சொல்லும்படி, முடி அமரர் - முடியையுடைய தேவர், மொத்துண்ட நாள் - அடியுண்ட நாளில், முழுமதிக்கடவுள் - பூர்ண சந்திரனே, நீ அவமதிப்பு உண்டதை - நீ அவமானப்பட்டதை, மொழிந்திடக் கடவது அன்று ஆல் - சொல்லக்கடவதன்றாதலால், அன்றைக் கணக்கு இன்றும் வந்திருக்கின்றது—, இனி—, அம்புலீயாட வரவே—, எ-று.

குன்றமென்றது கிரவுஞ்ச மலையை. குண்டிகை - கமண்டலம். வேதப்பொருளை யுணராது எல்லாம் உணர்ந்தவன்போல் தருக்குற்று நடித்தவனாதலின் பிரமனைக் 'கள்வன்' என்றார். குலிசம் - வயிரப்படை, அதனை யுடையவனாதலால் இந்திரனைக் குலிசன் என்றார். உடற்றி யென்பதிற் பகுதி உடற்று. பாடு-துன்பம். களம் - இடம். கணக்கு என்பது ஈண்டு நிலைமை என்னும் பொருள் தந்து நின்றது. (அ)

தள்ளும் பவக்கட லுழக்குமெனை முத்திக் தடங்கரை விடுப்
பவனுனைத், தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடிற்
றண்ணளி சுரந்துகருணை,
வெள்ளங் கொழிக்குங் கடைக்கண் சிவப்பவிவன் வெகு
ளாது விடினுமழகு, விழிசிவப் பக்காணி லிரவிபகை
சாய்த்தவிள வீரன்பொ றுப்பானலன்,
கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிறார்திரைக் காவிரித் தண்
டுறை தொறுங், கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறி
யக் கலைமதிக் கலசவமுதை,
யள்ளுந் தடம்பணைச் சோணா டனிவனுட னம்புலீ யாட
வாவே, யழகுபொலி கந்தபுரி தழைபவரு கந்தனுட னம்
புலீ யாடவாவே.

(இ - ள்.) தள்ளும் - தள்ளப்பட்ட, பவக்கடல் உழக்கும் என்னை - பிறவிக்கடலில் வீழ்ந்து வருந்துகிற என்னை, முத்தி-மோக்கமாகிய, தடம்கரை - பெருங்கரையில், விடுப்பவன் - செலுத்துபவன், உன்னை - உன்னையும், தலையளிப்பான்-தலையளி செய்வானுய், வரவழைப்பவும் - வரவழைக்கவும், வராவிடின் - வராவிட்டால், தண்ணளிசுரந்து - தண்ணளிசுரந்து, கருணைவெள்ளம் கொழிக்கும் - கருணைவெள்ள மெறிகிற, கடைக்கண் சிவப்ப - கடைக்கண் சிவக்கும்படி, இவன் வெகுளாது விடினும் - இவன் முனியாவிடினும், அழுதுவிழி சிவப்பக்காணில் - அழுது கண் சிவக்கக் கண்டால், இரவிபகை சாய்த்த - பானுகோபனைக் கொன்ற, இளவீரன் - இளையவீரன், பொறுப்பான் அல்லன் - பொறுப்பவனல்லன், கள்ளம்படைத்த கண் - கள்ளத்தைப் பெற்றிருக்கிற கண்களையுடைய, கடைசியர் - கடைசியரது, சிறார் - மக்கள், திரை - அலைகளையுடைய, காவிரி - காவிரியாற்றின், தண்துறைதொறும் - குளிர்ந்த துறைதோறும், கதிர்-ஒளியுள்ள, நித்திலம் குவி - முத்தினுற் குவிக்கப்பெற்ற, மணல்குன்றம் எறி-மணற்குன்றின் மீதேறி, அ - அந்த, கலைமதி - கலைமதியாகிய, கலச அமுதை - கலசத்திலுள்ள அமிர்தத்தை, அள்ளும் - அள்ளிக்கோடற்குரிய, தடம்பணை - பெரிய வயல்கள் சூழ்ந்த, சோணுடன் இவனுடன் - சோணுடனுகிய இவனோடு, அம்புலீ யாடவாவே—, எ-று.

தலையளி - ஒருசொல், கருணையென்பது பொருள். இரவி பகைசாய்த்த விளவீரன் - வீரவாகு. கள்ளம் - ஆடவரை மயக்கும் வஞ்சத் தொழில். கலசம் - கலயம். கலைமதி - பூர்ணசந்திரன். (க)

தன்னொத்த தெய்வச் சிறுருபிள வீரருந் தாணிழற் கிழ்கிற்பவிச், சகதண்ட மண்டல மடுக்கழியு நாளமரர் தமையழக் காண்பவனிவ,

னின்னைப் பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி நீள்கழற் ருளுதைந்து, நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தன னினக்கிதில் வியப்பில்லைகாண்,

பின்னற் றிரைச்சுர நதித்தண் டுறைத்தேவர் பேதைக்
குழாங்களென்னப், பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் டுறைச்சிறைவிரித்,

தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுட னம்புலி யாட
வாவே, யழகுபொலி கந்தபுரி தழைபவரு கந்தனுட
னம்புலி யாடவாவே.

(இ - ள்.) தன் ஒத்த - தன்னை சேர்த்த, தெய்வச்சிறுரும் - தெய்வச் சிறுவரும், இளவீரரும் - இளையவீரரும், தாள் நிழல் கீழ் நிற்ப - திருவடி நிழலின் கீழே நிற்க, இ - இந்த, சகத் அண்டம் மண்டலம் - சகமும் தேவருலகமும் மற்றை யுலகங்களும், அடுக்கு அழியும் நாள்-நிலை குலையு நாளில், அமரர்தமை-தேவரை, அழக் காண்பவன் - அழக் காண்போனாகிய இவன், நின்னை பொருள் படுத்து - உன்னை யொருபொருளாக்கி, ஒரு விரல் தலை சுட்டி - ஒருவிரலி னுனியாற் சுட்டி, நீள்கழல் - நீண்ட கழலை யணிந்த, தாள் உதைந்து - காலுதறி, நெடுமலர் கண் பிசைந்து - நீண்ட கமலம்போலும் கண்ணைப் பிசைந்து, அழுது அழுது அழைத்தனன் —, நினக்கு இதில் வியப்பு இல்லை - உனக்கு இதில் ஒரு வியப்பில்லை, பின்னல் - (ஒன்றோடொன்று) பின்னவிடுகிற, திரை - அலைகளோடு கூடிய, சுரநதி - தேவநதியின், தண் துறை- தண்ணிய துறையில், தேவர் பேதை குழாங்கள் என்ன - தெய்வப் பெண்களுடைய கூட்டங்கள்போல, பெருகும் - பெருகி வருகிற, தடம்புனல் - நீர்ப்பெருக்கையுடைய, காவிரி - காவிரியாற்றின், பூவிரிபெருதண் துறை - மலர்கள் விரிந்த பெருங்குளிர்த் துறைகளில், அன்னக்குழாம் - அன்னப்புட் குழாங்கள், திளைத்து ஆடு- மூழ்கி விளையாடுகிற, சோணாடனுடன் - சோணாடனோடு, அம்புலீ யாட வாவே —, அழகுபொலி —, வரவே —, எ-று.

இளவீரர் - வீரவாகுதேவர் முதலியோர். சகத்து - தோன்றி யழிதன் மாலையதாகிய பிரபஞ்சம். வியப்பு - அதிசயம். கவேர ராஜ புத்ரியாதலால் காவேரியெனற்பாலது காவிரியென வழங்கப்படுகின்றது. இவை நான்கு செய்யுளாலும் தண்டோபாயம் கூறப்பட்டது. (௬௦)



## சிற்றிற்பருவம்.



குறுமென் னடையு நெடுவெணிலாக் கோட்டு நகையும் வாட்டடங்கண், குளிர முகந்துண் டொளிர் சுட்டிக் குஞ்சி திருத்தி நறுங்குதலை,

முறுகு நறைத்தேன் கனிபவள முத்துண் டுச்சி மோந்து கொண்டுன், முகமுந் துடைத்து விளையாட முன்றிற் புறத்துப் பொன்றதும்பி,

யிறுகும் புளகக் கும்பமுலை யெம்பி ராட்டி விடுத்ததுமற் றிளையார் மறுக மறுகுதொறு மிடுக்கண் செயற்கோ வெந்தாய்நின்,

சிறுகிங் கிணிச்செஞ் சீறடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ - ள்.) குறுமெல் நடையும் - குறுகிய மெல்லிய நடையினையும், நெடுவெள்நிலாகோட்டு நகையும் - நெடிய வெண்ணிலவைச் செய்கிற நகையினையும், வாள்தடம் கண்குளிர - வாள் போலும் பெரிய கண்கள் குளிரும்படி, முகந்து உண்டு - அள்ளியுண்டு, ஒளிர்-பிரகாசிக்கிற, சுட்டி-சுட்டியோடு, குஞ்சி திருத்தி-குடுமியைத் திருத்தி, நறு குதலை முறுகு-நல்ல குதலை முதிர்கின்ற, நறைதேன் - மணத்தையுடைய தேன்போன்ற, கனிபவளம் - கனிந்த திருப்பவளத்தை, முத்துண்டு-முத்தமிட்டு, உச்சிமோந்து கொண்டு - உச்சியை மோந்து, உன் முகமும் துடைத்து - உன் திருமுகத்தையும் துடைத்து, விளையாட - விளையாடும்பொருட்டு, முன்றில்புறத்து - முன்றிற் புறத்தே, பொன்ததும்பி இறுகும் - தேமல்படர்ந்து இறுகிய, புளகம் - புளகம்போர்த்த, கும்பம்முலை-குடம்போன்ற தனங்களையுடைய, எம்பிராட்டி விடுத்தது - எம்பெருமாட்டி யனுப்பினது, இளையார் மறுக - இளஞ்சிறுமியர் வருந்த, மறுகுதொறும் - தெருத்தோறும், இடுக்கண் செயற்கோ-

துன்பஞ் செய்யத்தானே, எந்தாய் - எந்தையே, நின் - உனது, சிறு கிங்கிணி - சிறிய கிங்கிணி யணிந்த, செம்சீறடியால், செவந்த சிற்றடியினால், சிறியேம் சிற்றில் சிதையேல் - சிறியேங்களுடைய சிறுவீட்டை யழிக்காதை, செந்நெல் பழனம் - செந்நெல் வயல்கள் சூழ்ந்த, புள்ளூரா—, சிறியேம்—, எ-று.

குறுமென்னடை - தளர்நடை. திருத்தல் - ஒப்பனை செய்தல். கனிபவளம் என்றது திருவாயை. எம்பிராட்டி - உமாதேவி. எம்பிராட்டி யுன்னை யொப்பனைசெய்து வீதியில் விடுத்தது விளையாடற்கேயன்றி யெம்போல்வாரது சிற்றிலைச் சிதைத்தற்கன்றாதலால் இது செய்யாதை யென்பது கருத்து. (௪)

கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக் குரவு நாறு நறுங்குஞ்
 சிக், கோமான் மகனே நங்கள்குலக் கொழுந்தே யென்று
 குறையிரந்து,
தொழுவா னவர்த முடிசூட்டுஞ் சோதி முடியிற் றுகளெழ
 நின், றுணைத்தாள் வண்டற் றுறைப்புழுதித் தூளி படி
 னும் படுகசுடர்க்,
கழுவா மணியு நிலவுவிரி கதிர்நித் திலமு முமையம்மை,
 கண்ணி லுழுத்த வடிகேணின் காலி லுறுத்தல் கட
 னன்றாற்,
செழுநான் மறையின் பெருஞ்செல்வச் செருக்கே சிற்றில்
 சிதையேலே, செந்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ்
 சிற்றில் சிதையேலே.

கொழு - செழிய, நாள் - புதிய, மலர்கற்பகமும் - கற்பக மலரும், நறைகுரவும் - மணம் பொருந்திய குராமலரும், நாறும் - பரிமளிக்கிற, நறுங்குஞ்சி - அழகிய குடுமியையுடைய, கோமான் மகனே - இறைவன் மகனே, நங்கள் குலக்கொழுந்தே - எங்கள் குலக்கொழுந்தே, என்று - என்றுசொல்லி, குறையிரந்து - குறைகூறி யிரந்து, தொழு - வணங்குகின்ற, வானவர்தம் - தேவர்களுடைய, முடிசூட்டும் - முடிகளைத் தரிக்கச் செய்கிற, சோதி முடியில் - ஒளியுருவனாகிய சிவபிரானது திருமுடியில், துகள் எழ - துகளெழும்படி, நின் துணைத்தாள் - உன் இரண்டு திருவடிகளும், வண்டல்துறை - வண்டல் விளையாடுமிடத்திலுள்ள, புழுதினுளி

படினும் - புழுதியாகிய துளிபட்டாலும், படுக - படட்டும், சுடர்-ஒளியையுடைய, கழுவாமணியும்-சுத்தப்படுத்தாத இரத்தினமும், நிலவுவிரி - நிலாவிரிகின்ற, கதிர்த்திலமும் - ஒளியுள்ள முத்தும், உமையம்மை - உமை யம்மையின், கண்ணில் உறுத்த - கண்ணி லுறுத்தும்படி, அடிகேள் - சுவாமீ, நின்காலில் உறுத்தல் - உன் திருவடியி லுறுத்துதல், கடன் அன்று ஆல் - முறைமையன் றாதலால், செழுநால் மறையின் - செழுமையாகிய நால் வேதத்தின், பெருஞ்செல்வச் செருக்கே - பெருஞ் செல்வக் களிப்பே, சிற்றில் சிதையேல்—, செங்நெற்பழனப்—, எ-று.

கோமான் - சிவபிரான். கோமான்மகன் - ஒருசொல்லாய்க் கந்தவேளைக் குறித்தது, கற்பக மலரும் குராமலரும் நாறுதல் கந்தவேள் குஞ்சியிலெனக் கொள்க. யாமிழைத்து விளையாடுஞ் சிற்றிலைச சிதைக்குங்கால் அங்குள்ள மணியுமுத்தும் உன் திருவடியிலுறுத்தும், அவை யுறுத்தல் உன் திருத்தாயாகிய வுமாதேவியின் கண்ணி லுறுத்தல்போலும் ஆதலால் அது செய்யா தொழிதி யென்பது கருத்து. (உ)

வழிக்குப் புறம்பா யாமிழைத்த வண்டன் மனையவ் வசுரேசன், வான் கூட் டுண்பா னடுக்கடலில் வகுத்த நகரென் றிகழாமே,

கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக் கொடுவந் தடியேமனை முன்றிற், குவியா நின்ற மணிக்குவையைக் குருகு பெயர்க்குன் றமுமன்றாற்,

சுழிக்குண் டகழி வாய்மடுப்பச் சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தாற், சுரபி சொரிபான் மடையடைத்த சோற்றி ஞேடுங் கலந்தூட்டிச்,

செழிக்குந் தடங்கா விரிநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ - ள்.) வழிக்கு புறம்பாய் - வழிக்கு ஒதுக்கமாக, யாம், இழைத்த - நாங்கள் செய்த, வண்டல் மனை - வண்டல்வீடு, அ - அந்த, அசுரேசன் - அசுரர்கோன், வான் - விண்ணுலகை, கூட்

டுண்பான் - கொள்ளை கொண்டுண்ண, நடுக்கடலில் - கடனடுவே, வகுத்த நகர் என்று - எற்படுத்தின நகரமென்று, இகழாமே - இகழாமல், கொழிக்கும் சிறுமுற்றிலில் வாரி - கொழித்தற்குரிய சிறு சுளகில் வாரி, கொடுவந்து - கொணர்ந்து, அடியேம் - அடியேங்களுடைய, மனைமுன்றில் - வீட்டு முற்றத்தில், குவியாநின்ற மணிக்குவை - குவிக்கிற மணிக்குவியல், அ - அந்த, குருகுபெயர் குன்றமும் அன்று - புட்பெயரையுடைய மலையுமன்று, ஆல் - ஆதலால், சுழிகுண்டு - சுழிகளோடுகூடி ஆழ்ந்திருக்கிற, அகழிவாய் மடுப்ப - அகழியினிடத்து விழ, சுடர் வால்வளை - ஒளிர்கின்ற வெள்வளையை யுடைய, தெள்திரை கரத்தால் - தெளிவாகிய அலைகளென்கிற கைகளால், சுரபி சொரிபால் - பசுக்கள் பொழிகின்ற பாலானது, மடை அடைத்த - மடைகளை யடைத்துக் கொண்ட, சோற்றினோடும் கலந்து ஊட்டி - சோற்றோடு கலந்து உண்பித்து, செழிக்கும் - தழைக்கிற, தடம்காவிரி நாடா - பெரிய காவிரி நாடனே, சிறியேம்—, செங்கெநற்பழன—எ-று.

அசுரேசன் என்றது சூரபன்மனை. கூட்டுண்பான் என்பதில் பான்செய வென்னும் வாய்பாட்டு வினையெச்ச விகுதி. நடுக்கடலில் வகுத்தநகர் - மகேந்திரம். சுளகு - முறம். குருகுபெயர்க் குன்றம் கிரவுஞ்ச மலை. சோறு - தாழை மலர் முதலியவற்றின் சோற்றி வால்வளை - வெள்ளிய சங்கு எனவும், வாலிய வளையலெனவும், நீருக்கும் கைக்கும் பொருந்த வுரைத்துக்கொள்க. செழிக்கும் என்னும் பெயரெச்சம் காவிரி நாடு என்னும் பெயர் கொண்டு முடிந்தது. செழிக்குந் தடங்காவிரி நாடா வென்பதற்குச் செழிக்கின்ற பெரும் பொழில்கள் விரிந்த நாடா வெனினுமாம். (௬.)

மூரிக் களிறே மழவிடையோ முடுகிற் றெனப்பார்த் துழியுனது, முகத்தி னழகெம் மடிக்கண்ணோன் மொண்டுண் டனம்யா மென்றுமிகப்

பாரித் தோங்கிப் பூரித்த பைம்பொற் புயத்தைக் கண்ணேறு, பட்டே மெனவு மடிகள்பகை பாராட்டுவதோர் பண்பன்றால்,

வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை விரிபூங் கமுகும் பால்
பாயும், வேழக் கரும்பு மிருட்பிழம்பை விழுங்கிக் கக்
குஞ் சுடர்ப்பரிதித்,

தேருக் கெழில்செய் சோணாடா சிறியேஞ் சிற்றில் சிதை
யேலே, செங்கெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில்
சிதையேலே.

(இ - ள்.) மூரிகளிறோ - வலிமைபொருந்திய யானையோ, மழ
விடையோ - இளமைபொருந்திய இடபமோ, முடுகிற்று என -
முடுகிவந்ததென்று, பார்த்துழி - பார்த்தபோது, உனது முகத்
தின் அழகு - உனது முகத்தழகை, எம் வடிக்கண்ணால் - எமது
வடிக்கண்ணினால், யாம் மொண்டு உண்டனம் என்று - யாம்
முகந்துண்டோமென்று, மிக பாரித்து - மிகு பொறையுடைத்
தாய், ஓங்கி பூரித்த - உயர்ந்து பருத்த, பைம்பொன் புயத்தை -
பசும்பொன் மலைபோலும் திருத்தோள்களை, கண்ணேறு பட்
டேம் எனவும் - கண்ணெச்சிற் பட்டோமென்றும், அடிகள் -
சுவாமீ, பகை பாராட்டுவது - பகை பாராட்டுதல், ஓர் பண்பு
அன்று - ஒரு நற்குணமன்று, ஆல் - ஆதலால், வேரி - வாசனை
யுள்ள, கொழுதாறு - செழுமையாகிய தாறுகளையுடைய, இளம்
பாளை விரி - இளம்பாளைகள் விரிந்த, பூகமுகும் - பொலிவாகிய
கமுகமரங்களும், பால்பாயும் வேழக்கரும்பும் - பால் பெருகிப்
பாய்கிற வேழக் கரும்புகளும், இருள் பிழம்பை - இருட்கூட்
டத்தை, விழுங்கி கக்கும்-விழுங்கி யுமிழ்கின்ற, சுடர் - காந்தியை
யுடைய, பரிதி தேருக்கு - சூரியனது தேருக்கு, எழில்செய் -
அழகு செய்கிற, சோணாடா - சோணாடனே, சிறியேஞ்—, எ-று.

வடி - மாவடுவகிர், இது "வடிக்கணிவை" என்னு முதற்
குறிப்பினையுடைய திருச்சிற்றம்பலக் கோவைச் செய்யு ளுரையா
லினிது விளங்கும். கண்ணெச்சிற்படல் - திருஷ்டிபடல். பால்-
சாறு. வேழக்கரும்பு ஒருவகைக் கரும்பு, வேழக்கரும்பு - மூங்கி
லோடு கரும்பும் என் றுரைப்பினுமாம். கமுகு கரும்பு என்பன
பரிதித்தேருக் கெழில்செய் என்றதனால் இவை சூரியமண்டலத்
தளவு முயர்ந்திருக்கின்றன வென்பது பெறப்பட்டது. (௪)

பொன்னங் கொடிபோ னுடங்குமிடைப் புத்தேண் மகளிர் விளையாடப், புனைமா ளிகையுஞ் சூளிகையும் புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞான,

மெய்ந்நின் றவருள் விழிப்பாவை விளையாட் டயர வழியாத, வீடுங் கொடுத்தா யெம்மனையும் விடுத்துச் சென்றான் மிகையுண்டோ,

பின்னுந் திரைத்தீம் புனற்கங்கைப் பேராற் றூற்று நறைக் கோட்டுப், பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப் பிறழும் வாளைப் பகடுதைத்த,

தென்னம் பழம்வீழ் சோணாடா சிறியேஞ் சிற்றில் சிதை யேலே, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ-ள்.) பொன்அம் கொடிபோல் - பொன்னானியன்ற அழகிய கொடிபோல, நுடங்கும் - துவளாநின்ற, இடை - இடையையுடைய, புத்தேள்மகளிர் விளையாட - தேவமாதர் விளையாடும் பொருட்டு, புனைமாளிகையும் - அலங்கரிக்கப்பட்ட மாளிகைகளும், சூளிகையும்-கோபுரங்களும், புதுக்கி கொடுத்தாய் - புதுக்கித் தந்தாய், பொதுஞான மெய்நின்றவர் - பொதுவாகிய மெய்யறிவோடு நின்றவரது, உள்விழிபாவை - உட்கண்பாவை, விளையாட்டு அயர - விளையாடலைச் செய்ய, அழியாத வீடும் கொடுத்தாய் - கெடாத வீட்டையும் தந்தாய், எம்மனையும் விடுத்து சென்றால் - எங்கள் வீட்டையும் விட்டுப் போனால், மிகை உண்டோ - குற்றமுண்டாமோ, பின்னும் - பின்னவிடுகிற, திரை - அலைகளையும், தீம்புனல் - இனிய நீரையுமுடைய, கங்கை - கங்கையாகிய, பேர் ஆற்று - பெரிய யாற்றில், ஊற்று-ஊற்றினையுடைய, நறை-தேனைப் பொருந்திய, கோட்டு - கிளைகளோடு கூடிய, பெருங் கற்பகத்தின் - பெரிய கற்பகமரத்தின், கழுத்து ஒடிய - கழுத்து முறியும்படி, பிறழும் - துள்ளுகிற, வாளைப்பகடு - வாளைப் பகடுகளால், உதைத்த - மோதப்பட்ட, தென்னம்பழம்வீழ் - தென்னம் பழங்கள் விழுகின்ற, சோணாடா - சோணாடனே, சிறியேம்—, சிதையேல்—, செந்நெற்—, எ-று.

புத்தேண்மகளிர் விளையாட மாளிகைமுதலிய புதுக்கிக் கொடுத்தாய் என்றது விண்குடியேற்றினமையைக் குறித்தது. ஞானமெய் நின்றவர் - மெய்யுணர்வோடு நின்றவராகிய ஞானியர். மெய்யுணர்வில்வழிப் பயனின்றென்பது தோன்ற இவரைப் பொதுஞான மெய்ந்நின்றவர் என்றார். "ஐயறிவறிந்தவை யடங்கி னர்களேனும், மெய்யறிவிலாதவர்கள் வீடதுபெருரே" என்றார் பிறரும். அழியாதவீடு - முத்தி. "பெருங் கற்பகத்தின் கழுத் தொடிய தென்னம்பழம்வீழ் சோணாடா என்றமையால், சோணாட் டுத் தென்னமரங்கள் கற்பகமரத்தினு முயர்ந்திருக்கின்றன வென்பதினிது விளங்கும். (௫

கானக் குறப்பெண் குடியிருந்த கன்னிப் புனத்துத் தினை மாவுங், கமழ்தேன் றெளிவு முண்டுசுவை கண்டா மென் றே மதுவல்லான்,

மீனத் தடங்க ணவண்மிச்சின் மிசைந்திட் டதுவு நசை மிக்கு, விரைத்தீங்கு முதத் தமுதடிகள் விருந்தா டிய தும் விண்டோமோ,

கூனற் பிறையின் கோடுரிஞ்சுங் கொடிமா டத்து வெயில் விரிக்குங், குருமா மணியாற் சுரநதியிற் கொழுந்தா மரை கண் முறுக்குடைந்து,

தேனக் கலருஞ் சோணாடா சிறியேஞ் சிற்றில் சிதை யேலே, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ - ள்.) கானம் — காட்டில் வாழ்கின்ற, குறப்பெண் குடி யிருந்த - குறப்பெண்ணாவள் குடியிருந்த, கன்னிப்புனத்து - இளம்புனத்தில், தினைமாவும் —, கமழ் - மணக்கின்ற, தேன் தெளிவும் - தேனின் தெளிவையும், உண்டு - நுகர்ந்து, சுவை கண்டாம் என்றேம் - சுவைகண்டனெ மென்றனம், அது அல் லால் - அதுவேயன்றி, மீனத்தடங்கண் - மீன்போலும் பெருங்) கண்களையுடைய, அவள் - அவளது, மிச்சில் மிசைந்திட்டதுவும் - எச்சில் தின்றதையும், நசைமிக்கு - ஆசைமிகுந்து, விரை - மணங்

கமழ்கின்ற, தீங்குமுதத்து - இனிய குமுதமலரின், அமுது - அமிர்தத்தை, அடிகள் - சுவாமிகள், விருந்தாடியதும் - விருந்துண்டதையும், விண்டோமோ - சொன்னேமோ, கூனல் - வளைவாகிய, பிறையின் கோடு உரிஞ்சும் - பிறைநுனி யுரிஞ்சுகின்ற, கொடிமாடத்து - கொடிகள் கட்டிய மாடங்களின்மேல், வெயில் விரிக்கும் - வெயில் பரப்புகிற, குருமாமணியால் - ஒளியுள்ள பெரிய மணிகளால், சுரநதியில் - கங்கையாற்றிலுள்ள, கொழுதாமரைகள் - செழிய தாமரைகள், முறுக்கு உடைந்து - முறுக்கவிழ்ந்து, தேன்நக்கு அலரும் - தேனோடு விளங்கி மலர்கிற, சோணாடா—, சிறியேம் —, எ-று.

கானக் குறப்பெண் என்றது வள்ளிநாயகியை. விரைத்தீங் குமுதம் என்றது அவளததரத்தை, விருந்தாடியது - சுவைத்தது. குருமாமணி - மாணிக்கம். இதனொளி வெயில்போறலால் இதனை வான்யாற்றுத்தாமரைகள் மலர்வனவாயின. குறப்பெண் கொடுத்த தேனுந் தினைமாவு முண்டனை யென்றதன்றி நீயவளெச்சிலுண்டதும் அதரஞ் சுவைத்ததுஞ் சொன்னேமல்லேம். அங்ஙனமாக நீயெமது சிற்றில் சிதைத்தலடாதென்பது கருத்து.

பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும் பெருமானுர்க்கு முலகேழும், பெற்ற தாய்க்கு நீயருமைப் பிள்ளை யெனினெலம் பேராய,

வெள்ள மமைத்த சிறுசோறு வேண்டி விடுகேமலதெளியேம், விளையா டிடத்துச் சிறுகுறும்பு விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ,

கள்ள விழிச்சூரரமகளிர் காமன் கொடியேற் றெனவியப்பக், கற்ப தருவிற் படர்ந்தேறும் காமர் கொடிச்செங் கயல்பாயுந்,

தெள்ளு புனற்கா விரிநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, நெந்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ - ள்.) பிள்ளைமதி - இளஞ்சந்திரனை, செஞ்சடை செருகும் - செவ்ந்த சடையிற் செருகுகிற, பெருமானுர்க்கும் - சிவபெருமானுர்க்கும், உலகு எழும் - எழுலகத்தையும், பெற்றதாயக்கும் - ஈன்ற தாயாகிய உமாதேவியார்க்கும், நீ அருமைபிள்ளையெனில் - நீ யருமைப்பிள்ளையானுல், எம் - எமது, பேர் ஆயவெள்ளம் அமைத்த - பெரிய ஆயவெள்ளத்தால் அமைக்கப்பட்ட, சிறுசோறு - சிறுசோற்றை, வேண்டில் - வேண்டினுல், இடுகேம் அலது - படைக்கிறேம் அன்றி, எளியேம் விளையாடு இடத்து - எளியேங்கள் விளையாடுமிடத்தில், சிறுகுறும்பு விளைத்தால் - சிறுகுறும்புகள் செய்தால், பொறுக்க விதி உண்டோ - பொறுக்கச் சட்டமுண்டோ, கள்ளம்விழி - வஞ்சம்பயின்ற கண்களையுடைய, சூர்-அச்சத்தை விளைக்கிற, அரமகளிர் - தெய்வமாதர்கள், காமன் கொடியேற்று என - மன்மதத் துவஜாரோஹணமென்று, வியப்ப - வியக்கும்படி, கற்பதருவில் படர்ந்து எறு - கற்பகமரத்தின் மேற் படர்ந்தேறுகிற, காமர்கொடி - காமர் வல்லிக்கொடிமேல், செங்கயல்பாயும் - செவந்த கயல்மீன்கள் பாயாநின்ற, தெள்ளுபுனல் - தெளிந்த நீரையுடைய, காவிரிநாடா - காவிரிநாடனே சிறியேம் சிற்றில் சிதையேலே—, எ-று.

பிள்ளைமதி - ஒற்றைக்கலையாகிய சந்திரன். சிறுசோறு - சிறுமியர் விளையாட்டுக்குச் சமைக்குஞ் சோறு. குறும்பு - சிறுதீங்கு. கொடியேற்று - கொடியேற்றம். கள்ளவிழிச் சூரரமகளிர் காமன் கொடியேற்றென வியப்பக் கற்பதருவிற் படர்ந்தேறுங் காமர்கொடிச் செங்கயல்பாயுந் தெள்ளுபுனற் காவிரிநாடா என்றமையால் சோணுட்டு நீர்வளச் சிறப்பு விளங்காநின்றது. (எ)

மடல்வா யவிழ்ந்த குழற்பேதை யொருத்தி திருத்தும்
பகிரண்ட, மணற்சிற் றிலேயோர் கணத்தின் கண் மட்டித்
தாடு மைந்தனருள்,
விடலாய் தமியேஞ் சிற்றின் முற்றும் விளையாட்டாகாவொ
ருநீயும், வீட்டா நிற்பத் தொடங்கினையால் வித்து மூளை
யும் வேறன்றே,

கடமா மருப்புஞ் சுடர்மணியுங் கதிர்நித் திலமு மகளிர்
முலைக், களபத் தொடுகுங் குமச்சேறுங் கரைத்து விடுத்
தக் கடற்றுட்டர்,
திடராச் செபுங்கா விரிநாடா சிறியேஞ் சிற்றில் சிதை
யேலே, செங்நெற் பழனப் புள்ளுரா சிறியேஞ் சிற்றில்
சிதையேலே.

(இ - ள்.) மடல்வாய் அவிழ்ந்த - பூமடல்கள் வாய்விரிந்த, குழல் - கூந்தலையுடைய, பேதை ஒருத்தி - பேதைப்பெண்ணொருத்தி, திருத்தும் - திருத்துகிற, பகிரண்டம் - பகிரண்டங்களாகிய, மணல் சிற்றிலை - மணற் சிறுவீட்டை, ஓர் கணத்தின் கண் - ஒரு கணப்பொழுதில், மட்டித்து ஆடும் - அழித்தாடுகிற, மைந்தன் - வலியோனாகிய சிவபிரான், அருள் - ஈன்றருளின, விடலாய் - விடலையே, தமியேம் - தமியேங்களது, சிற்றில் முற்றும் - சிற்றில் முழுதும், விளையாட்டு ஆக - திருவிளையாடலாக, ஒருநீயும் - ஒப்பற்ற நீயும், வீட்டாசிற்ப - அழிக்க, தொடங்கினை - ஆரம்பித்தாய், ஆல் - ஆதலால், வித்தும் முளையும் வேறு அன்றே-வித்தும் முளைக்குஞ் செடியும் வேறல்லவே, கடமாமருப்பும் - மதயானைக் கொம்புகளையும், சுடர்மணியும் - ஒளியுள்ள மணிகளையும், கதிர்நித்திலமும் - பிரகாசமுள்ள முத்துக்களையும், மகளிர் முலை - மாதர் முலையிற் பூசப்பட்ட, களபத்தொடு - கலவைச்சாந்துடன், குங்குமச்சேறும் - குங்குமக் குழம்பையும், கரைத்துவிடுத்து - கரைத்துவிட்டு, அ-அந்த, கடல்குட்டம் - கடற்பள்ளத்தை, திடர்ஆ செய்யும் - மேடாகச்செய்கிற, காவிரிநாடா - காவிரிநாடனே, சிறியேஞ்சிற்றில் சிதையேலே—, எ-று.

மடல்வாயவிழ்ந்த குழற்பேதை யொருத்தி யென்றது உமாதேவியை. மைந்து - வலி, அதனையுடையவனாதலால் சிவபெருமானை மைந்தன் என்றார். இவனுக்கு வலியாவது எல்லாம்வல்ல பேராற்றல். மட்டித்தல்-அழித்தல். வித்துமுளையும் வேறாகாமை போல நீயும் உன் தந்தைசெயலை மேற்கொண்டா யென்பது கருத்து. (அ)

வாமாண் கலைப்பே ரகலல்குன் மடமா னேக்கி னரமகளிர்,
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு வந்த விடுக்கண் மாற்றி
னையால்,

கோமா னினக்கப் பெருந்தேவர் குலமே யன்றி யடியே
மும், குற்றே வலுக்கா மகம்படிமைக் குடியாக் கொண்
டாற் குறையுண்டோ,

காய்மாண் குலைச்செவ் விளநீரைக் கடவுட் சாதிமட நல்லார்,
கதிர்ப்பூண் முலையென் றேக்கறப்பைங் கமுகு நகை
வாண் முத்தரும்புந்,

தேமாம் பொழிற்றீம் புனனுடா சிறியேஞ் சிற்றில் சிதை
யேலே, செந்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில்
சிதையேலே.

(இ-ள்.) வாமம் மாண்கலை - அழகுமாட்சிமைப்பட்ட மேக
லையையணிந்த, பேர் அகல் அல்குல் - பெரிய அகன்ற அல்குலை
யும், மடமான் நோக்கின் - மடமானின் நோக்கத்தையுமுடைய,
அரமகளிர் - தெய்வமாதர், மகிழ்பூத்திருப்ப - மகிழ்ச்சிகொண்
டிருக்க, புத்தேட்குவந்த - தேவர்களுக்கு நேர்ந்த, இடுக்கண் மாற்
றினை - துன்பத்தையொழித்தனை, ஆல் - ஆதலால், கோமான் -
பெருமானே, நினக்கு - உனக்கு, அ - அந்த, பெருதேவர் குல
மேயன்றி - பெரிய தேவர் கூட்டமேயன்றி, அடியேமும் - அடி
யேங்களும், குற்றேவலுக்கு ஆம் - குற்றேவலுக்காகிற, அகம்படி
மைக்குடி ஆ கொண்டால் - அகம்படிமைக் குடிகளாகக் கொண்
டால், குறைஉண்டோ - குறையுளதோ, காய்மாண் - காய்கள்
மாட்சிமைப்பட்ட, குலை செவ்விளநீரை - குலையாகிய செவ்விள
நீர்களை, கடவுள்சாதி - தேவகுலத்தி லுதித்த, மடநல்லார் - இள
மாதரது, கதிர்பூண் முலையென்று - ஒளியுள்ள ஆபரணங்க
ளணிந்த முலையெனக்கருதி, எக்கற - எக்கற்றுநிற்க, பைகமுகு -
பசியகமுகமரங்கள், நகைவாள் முத்து அரும்பும் - நகையாகிய
ஒளியுள்ள முத்துக்களை யரும்புகிற, தேமாம்பொழில் - தேமாஞ்
சோலைகள் சூழ்ந்த, தீ புனல்நாடா - இனிய நீர் நாடனே, சிறி
யேஞ்சிற்றில் —, எ-று.

வாமம் - வாம்எனத் தொகுக்கப்பட்டது. மேகலை - மாதரிடை யணியிலொன்று. இது எழ்கோவையுள்ளது. குற்றேவல் - சிறுபணிவிடை. அது அடைப்பையேந்தல் முதலியபோல்வது. அகம்படிமைக்குடி - உள்வேலை செய்யுங் குடும்பம். காய்மாண் குலைச்செவ்விளநீரைக்கூடவுட்சாதிமட நல்லார். கதிர்ப்பூண் முலையென்றேக் கறப்பைங் கமுகு நகைவாண் முத்தரும்பும் என்றதனால் தெய்வப்பெண்களது பேதைமையை நோக்கிக் கமுகு நகைக்கின்ற தென்பது பெறப்பட்டது. (க)

கருவீற் றிருந்த பெருங்கருணைக் கடைக்கண் பொழிய வீற்றிருக்குங், கடவு ணீயே பகிரண்டங்கண்டா யெனின்வண் டடைகிடப்ப,

மருவீற் றிருந்த குழன்மகளிர் வண்டற் றுறைக்கு மணற்சிற்றின், மனைகோலுவது மற்றடிகேள் வகுக்குந் தொழிற்கு மாறன்றே,

குருவீற் றிருந்த மணிமாடக் கொடிமா நகரந் தொறுமலர்ந்த, கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்கோடி யுருவங் கொண்டுசெழுந்,

திருவீற் றிருந்த சோணாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே செந்நெற் பழனப் புள்ளூரா சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(இ - ள்.) கருவீற்றிருந்த - கருப்பங்கொண்டு வீற்றிருந்த, பெருகருணை - பெருங்கருணை மழையை, கடைக்கண் பொழிய - கடைக்கண் சொரியும்படி, வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கிற, கடவுள்நீயே - கடவுளாகிய நீயே, பகிரண்டம் கண்டாய் எனின் - பகிரண்டங்களை யுண்டாக்கினையென்றால், வண்டு அடைகிடப்ப - வண்டுகள் அடைகிடக்கும்படி, மருவீற்றிருந்த - மணம்தங்கிய, குழல் - கூந்தலையுடைய, மகளிர் - மாதர்கள், வண்டல் துறைக்கு - வண்டல் விளையாடிடத்துக்கு, மணல்சிற்றில் மனைகோலுவது - மணற்சிறுவீடு கோலுவது, அடிகேள் வகுக்கும் தொழிற்கு மாறு அன்றே - சுவாமிகள் படைக்குந் தொழிற்கு விரோதமன்றே

குருவீற்றிருந்த - நிறந்தங்கிய, மணிமாடக்கொடி - மணிகள் பதித்த மாளிகைக்கொடிகள் கட்டிய, மாநகரம்தொறும் அலர்ந்த - பெரிய நகரந்தோறும் விரிந்த, கொழுதாமரைப்பூ கோயிலில் - செழுமையாகிய தாமரைமலராகிய கோயிலில், பல்கோடி உருவம் கொண்டு - அநேககோடி யுருவுகொண்டு, செழுதிருவீற்றிருந்த - செழுமையாகிய திருமகள் வீற்றிருக்கிற, சோணாடா - சோணாடனே, சிறியேஞ் சிற்றில் சிதையேலே—, எ-று.

பொழியவென மேல்வருதலால் கருணை மழையாக்கி யுரைக்கப் பட்டது. மரு-மலர்மணமும் இயற்கைமணமும். யாம் சிற்றில் கோலுதல் நீ பகிரண்டம்வகுக்குந் தொழிற்கு மாறன்றாதலால் எஞ்சிற்றில் சிதைத்தலுனக் கடாதென்பது கருத்து. (ய)

சிற்றிற்பருவம் முற்றிற்று.



## சிறுபறைப்பருவம்.



ஊற்றும் பசுந்தே னுவட்டநெட் டிதழ்விரியு மொண் காந்தண் முச்சிபுச்சி, யொருவனீ ழும்முதற் கடவுளு மிளைப்
உ பாற வுலகெலாந் தலை யளித்துப்,
போற்றுந் திறத்தினைப் பழமறைக் கிழவன் புரிந்தபகி ரண்டங்கடாம், புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி புதுநிலாக் கற்றையிட்டுத்,
தூற்றும் பெயர்க்கரு முகிற்படாத் தையும்வெண்டுகிற்படா மாக்கிவீக்கித், தொடுகடற் புவனப் பெருந்தட்டொ டண்டச் சுவர்த்தலத் தக்கும் வெள்ளை,
தீற்றுஞ் சுதைத்தவள மாடமலி வேளூர சிறுபறை முழக்கியருளே, தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ சிறுபறை முழக்கியருளே.

(இ - ள்.) ஊற்றும் பசுந்தேன் - ஒழுக்குகிற பசிய தேனனது, உவட்ட-ததும்ப, நெடு இதழ்விரியும் - நெடிய இதழ்கள் விரிகிற,

ஒள்காந்தள் - ஒட்பமாகிய காந்தள் மலரைமுடித்த, முச்சி உச்சி - முச்சியைக்கொண்ட உச்சியையுடைய, ஒருவன் நீ - ஒப்பற்றவனாகிய நீ, மும்முதல் கடவுளும் இளைப்புஆற - மும்முதற் கடவுளும் இளைப்பொழியும்படி, உலகு எல்லாம் தலை யளித்து - எல்லாவுலகங்களையுங் கருணைசெய்தருளி, போற்றும் திறத்தின் - காப்பாற்றுந் தன்மையால், அ - அந்த, பழமறைகிழவன் - பழமறைக்கிழவனாகிய பிரமன், புரிந்த - படைத்த, பகிரண்டங்கள் - பகிரண்டங்களை, புதுக்குவ கடுப்ப - புதுக்குவனவற்றை நிகர்க்க, நெடுவெளி முகட்டுக்கு - பெருவெளி முகட்டுக்கு, விரிபுதுநிலா கற்றையிட்டு - விரிந்த புதுநிலவின் கற்றையை யமைத்து, ஆற்றும் - சிதறுகிற, கருமுகில் - கரிய மேகமாகிய, படாத்தையும் - ஆடையையும், வெள்துகில்படாம் ஆக்கி - வெள்ளாடையாகச் செய்து, வீக்கி - கட்டி, தொடு - தோண்டப்பட்ட, கடல் - கடல் சூழ்ந்த, புவனம் - உலகமாகிய, பெருதட்டொடு - பெரிய தட்டுடனே, அண்டச்சுவர்த்தலத்துக்கும் - அண்டச்சுவ ராகிய இடத்திற்கும், வெள்ளை நீற்றும் - வெள்ளை நீற்றுகிற, சுதை - சுண்ணசசார்தமைந்த, தவளமாடம் - வெண்மாடங்கள், மலி - மிக்கு விளங்குகிற, வேளூர - வேளூரனே, சிறுபறை முழக்கியருள் - சிறுபறை முழக்கி யருள்வாயாக, தென்கலைக்கும் - தென்மொழிக்கும், பழைய வடகலைக்கும் - பழமையாகிய வடமொழிக்கும், தலைவ - முதல்வனே, சிறுபறை முழக்கியருள் —, எ-று.

முச்சி - ஐவகைமயிர்முடியினொன்று. இதனை உச்சிக்கொண்டை யென்பர். மும்முதற் கடவுள் - முதன்மையுள்ள முத்தேவர். இவர் உலகை அளித்தளித் தழிப்பவர், இவரது முத்தொழிலுங் குமரவேள் மேற்கோடலால் அவரிளைப்பாறின ரென்பார், மும்முதற் கடவுளு மிளைப்பாற வுலகெலாந் தலையளித்துப் போற்றுந் திறத்தின், என்றார். கிழவன் - உரியவன், விருத்தன். கடுத்தல் - நிகர்த்தல். படாம் - ஆடை. வீக்குதல் - கட்டுதல். அண்டச்சுவர் - சக்ரவாளகிரி. சிறுபறைமுழக்கல் - சிறுபறை யடித்தல். மும்முதற் கடவுளுமிளைப்பாற இவர் உலகெலாந் தனையளித்த தெஞ்ஞான்றெனின், பிரமன் தலையிற் குட்டிச்சிறையிட்ட ஞான்றென்க. (ச)

விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை வெள்
ளஞ் சுருங்கவீங்கி, வேதண்ட மெட்டினெடு மூதண்ட
கூடத்தும் விளையாடி யுலகமேழும்,

வளைக்குங் கருங்கடல் பெரும்புறக் கடலொடும் வாய்
மடுத்தெதி ரெடுப்ப, வருபுனற் காவேரி வடநாட
நாடொறு மதிக்கடவு ளேறியேறி,

யிளைக்கும் பளிக்கறை முயற்கறை யறக்காலு மிள நிலா
வெள்ளமூழ்கி, யெறிதிரைப் பாகீரதிப்புனல் குடைந்
திடு மிடைக்கொடி நகிற்கொடியெனத்,

திளைக்குந் துகிற்கொடி முகிற்கோடிசெய் வேளூர சிறு
பறை முழக்கியருளே, தென்கலைக் கும்பமைய வடகலைக்
குலைந்தலைவ சிறுபறை முழக்கியருளே.

(இ - ள்.) விளைக்கும் - உண்டாக்கப்பட்ட, பெரும்புவனம் ஒக்கக் கரைத்த - பெரிய வுலகங்களெல்லாவற்றையும் சேரக் கரைத்த, கடைவெள்ளம் சுருங்க - ஊழிப்பெருக்கும் சுருங்கும்படி, வீங்கி - பொங்கி, வேதண்டம் எட்டினெடு - அஷ்டகுலகிரிகளோடு, மூதுஅண்ட கூடத்தும் - பழமையாகிய அண்டமுகட்டினும், விளையாடி—, உலகம் ஏழும்வளைக்கும் - ஏழுலகங்களையும் வளைக்கின்ற, கருங்கடல் - கருங்கடலானது, பெரும்புறக் கடலொடும்—, வாய்மடுத்து - கலந்து, எதிரெடுப்ப - எதிர்த்துவர, வருபுனல்-ஒழுகாநின்ற நீரையுடைய, காவேரி-காவிரியாறுசூழ்ந்த, வளநாட-வளநாடனே, நாள்தொறும்—, மதிக்கடவுள் ஏறி ஏறி-சந்திரன் ஏறியேறி, இளைக்கும்-இளைத்தற்குரிய, பளிக்கு அறை - பளிக்கறைகள், முயல்கறை அற - முயற்களங்கமொழிய, காலும்-உமிழ்கின்ற, இளநிலாவெள்ளம் மூழ்கி - இளநிலாப்பெருக்கில் படிந்து, எறிதிரை-வீசுகின்ற அலைகளையுடைய, பாகீரதிப்புனல் குடைந்திடும்-கங்கைநீரில் மூழ்குகின்ற, இடைக்கு ஒடி-இடையையொடிக்கிற, நகில்கொடியென - முலைக்கொடிகள்போல, திளைக்கும் - நிறைந்த, துகில்கொடி - துகிற்கொடிகள், முகிற்கு ஒடி செய் - மேகங்களை யொடிக்கிற, வேளூர—, சிறுபறை—, எ-று.

அஷ்டகுலகிரிகள் - கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரி, கந்தமாதநம் என்பன. இடைக்கு - முகிற்கு என்பன உருபுமயக்கம். ஒடிசெய் - ஒருசொல், ஒடித்தலைச் செய்கிற வெனினுமாம். (உ)

இருளுந் தரங்கக் கருங்கடன் முகட்டெழு மிளம்பிறை
முயற் குழந்தைக், கேறவிடு மோடமென வான்மீன்
றடந்திரை யெடுத்தெறியு நெடுமீனெனத்,

தரளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு தருநிழற் செல்
வருய்க்குந், தமனிய விமானமும் வெயிற் கதிர்ப் போர்
வையான் றனியாழி திசையுருட்ட,

வுருளுங் கொடித்தேரும் வீற்றுவீற் றெழில்புனைந்தோட்டு
பொற் றெப்பமென்ன, வுலகேழு மலையெட்டு மொழுகு
கதிர் விழுதவிடு மொண்ணிலாப் புணரிகோப்பத்,

திரளும் பளிக்குமா டங்கள்பொலி வேளூர சிறு பறை
முழக்கியருளே, தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்
தலைவ சிறுபறை முழக்கியருளே.

(இ - ள்.) இருளும் - இருளாநின்ற, தரங்கம் - அலைகளையுடைய, கருங்கடல் முகட்டு எழும் - கருங்கடல் முகட்டி லெழுகின்ற, இளம்பிறை - இளம்பிறையானது, முயல் குழந்தைக்கு- முயலாகிய குழந்தைக்கு, ஏறவிடும் ஓடம் என - ஏறவிடுகிற வோடம்போலவும், வான்மீன் - வான்மீன்கள், தடம்திரை - பேரலைகளால், எடுத்தெறியும் - எடுத்து வீசப்பட்ட, நெடுமீன் என- நெடுமீன்கள் போலவும், தரளம் பதிந்திட்ட - முத்துக்கள் பதிந்தாற்போன்ற, மணிமுறுவலவரோடு - அழகிய பல்லையுடைய மாதருடன், தருநிழல் செல்வர் உய்க்கும் - கற்பகத்தருவினிழலில் வாழ்கின்ற செல்வராகிய தேவர்கள் செலுத்துகிற, தமனிய விமானமும் - பொன் விமானமும், வெயில்கதிர் போர்வையான் - வெங்கதிர்ப் போர்வையையுடையவனாகிய சூரியன், தனிஆழி - ஒற்றையாழியை யுடையதாய், திசை உருட்ட உருளும் - எல்லாத் திசைகளினும் உருட்ட வுருளாநின்ற, கொடித்தேரும் - கொடிகள் கட்

டின தேரும், வீற்றுவீற்று எழில்புனைந்து - வெவ்வேருகிய அழகு பெற்று, ஓட்டு - ஓட்டப்படுகிற, பொன் தெப்பம் என - பொற் றெப்பம் போலவும், உலகு எழும் - எழுலகத்தினும், மலையெட் டும் - மலை யெட்டினும், ஒழுகுகதிர் - ஒழுகாநின்ற கிரணங்கள், விழுதுவிடும் - விழுது விடுகிற, ஒள்நிலா புணரிகோப்ப - ஒள்ளிய நிலாக்கடல் சோத்துக்கொள்ள, திரளும் - திரண்ட, பளிக்கு மாடங்கள்—, பொலி - விளங்குகிற, வேளூர—, சிறுபறை—, எ-று.

முகடு - உச்சி. தமனியம் - தபநியம் என்னும் வடமொழித் திரிபு. பளிங்கு - பளிக்கு என வலித்தலாயிற்று. (௩)

மொய்ம்பிற் பெரும்புவன மொக்கச் சுமக்கின்ற மோட் டாமை முதுகுளுக்க, முடவுப் படங்கிழிந் தரவரசினுயிர முடித்தலையு மூளைபொங்கக்,

கம்பக் கடாயானை யெட்டும் பிடர்த்தலை கழுத்தொடு முரிந்து கவிழக், கதிர்மணிச் சூட்டுநெட் டரவெட்டும் வடவைக் கடுங்கனற் கண்பிதுங்க,

வம்பொற் றடம்புரிசை யெழுபெருந் தட்டுருவி யண்டகூ டத்தளவலா, வைரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென வடுக்கேழு நிலையேழுமாஞ்,

செம்பொற் றிருக்கோ புரங்கள் பொலி வேளூர சிறுபறை முழக்கியருளே, தென்கலைக் கும்பழைய வடகலைக் குந் தலைவ சிறுபறை முழக்கியருளே.

(இ - ள்.) மொயம்பின் - வலியினுல், பெரும்புவனம் - பெரிய புவனங்களை, ஒக்கச் சுமக்கின்ற - ஒருசேரச் சுமக்கிற, மோடு ஆமை - பெரிய ஆமையானது, முதுகு உளுக்க - முதுகு நௌிய வும், முடவு - வளைவாகிய, படம் கிழிந்து - படம் கிழிபட்டு, அர அரசின் - ஆதிசேடனது, ஆயிர முடித்தலையும் - ஆயிர முடித் தலைகளும், மூளைபொங்க - மூளை கொதிக்கவும், கம்பம் - கட்டுத் தறியிற் கட்டப்படுகிற, கடாயானை எட்டும் - மதங்கொண்ட அஷ்டதிக்கயங்களும், பிடர்த்தலை கழுத்தொடு முரிந்து கவிழ -

பிடர்த்தலையானது கழுத்துடனொடிந்து கவிழ்ந்து விழவும், கதிர்மணி - ஒளியுள்ள மாணிக்கத்தை, சூட்டு - உச்சிக்கொண்டையிலுடைய, நெடு அரவு எட்டும் - நெடியவாகிய அஷ்ட நாகங்களும், வடவைகடுங்கனல் - வடவையாகிய கடுந் தீயினையுடைய, கண் பிதுங்க - கண்கள் பிதுங்கவும், அம்பொன் - அழகிய பொன்னினாற் செய்யப்பட்ட, தடம்புரிசை - பெரிய மதிலானது, எழுபெருந்தட்டு உருவி - ஏழாகிய பெருந்தட்டுக்களை யூடுருவி, அண்டகூடத்து - அண்ட முகட்டில், அளவலால் - சேர்தலால், அவரவர் - அவ்வவ்வுலகத்தார், வழங்குதற்கு - சஞ்சரிப்பதற்கு, இடு - அமைக்கப்பட்ட, தலைக்கடை யென - தலைக்கடை யென்னும்படி, அடுக்கு ஏழும் - ஏழடுக்கும், நிலை எழும் - ஏழ் நிலையும், ஆம் - ஆகிய, செம்பொன் - செம்பொன்னானியன்ற, திருக்கோபுரங்கள் - அழகிய கோபுரங்கள், பொலி - விளங்காநின்ற, வேளூர - வேளூரனே, சிறுபறை —, எ-று.

மொய்ம்பு - வலி. கம்பம் - சாதியடை. அஷ்டநாகங்களாவன - வாசுகி, அநந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன், என்பன. இவை முறையே கிழக்கு முதலெண்டிசைகளைத் தாங்குவதன்றி, இவற்றினடுவே சேடன் பூமியைச் சுமவாநிற்பன. இந்நவநாகங்களும் காசிபனுக்கும் அவன் மனைவியாகிய கத்துருவுக்கும் பிறந்தன. அஷ்டதிக்கயங்களாவன - ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சப்ரதீபம் என்பன. இவை முறையே கிழக்கு முதலிய வெண்டிசைகளினு நிலர்தாங்கி நிற்பன. இவற்றிற்கு முறையே பிடியானைகளாவன. அப்ரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரபர்ணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி என்பன. (ச)

தரிக்குஞ் சுடர்ப்பரிதி முழுமதிக் கடவுளொடு தடமதில் கடந்தககர், சாரவரி தாற்புவன கோடிகட் கொளிசெயச் சதுமுகன் கற்பந் தொறும்,

விரிக்கின்ற விருசுடரு மொருவழித் தொக்கென வியன் கதிர்ப் படலமுடி, வீங்கிருள் விழுங்குசெம் மணிமாடநிரையுமொளி விளைபசுங் கதிர்வெண்புரி,

புரிக்குஞ் செழுந்தரள மாடமும் வெயிலினொடு பொழி
 நிலாப் போர்ப்ப முற்றும், போதுதெரி யாமையிற்
 குமுதமொடு சதவிதழ்ப் போதுமே யிருபோதையுந்,
தெரிக்குந் தடம்பணை யுடுத்ததமிழ் வேளூர சிறு பறை
 முழக்கியருளே, தென்கலைக் கும்பமழைய வடகலைக் குந்
 தலைவ சிறுபறை முழக்கியருளே.

(இ - ள்.) தரிக்கும் சுடர் - தரிக்கின்ற காந்தியையுடைய, பரிதி - சூரியன், முழுமதிக் கடவுளொடு - பூர்ண சந்திரனோடு, தடமதில் கடந்து - பெரிய மதிலைத்தாண்டி, அகநகர் - நகரினுள்ளே, சார - சேர, அரிதால் - அருமையாதலால், புவனகோடி கட்கு - அண்டகோடிகளுக்கு, ஒளிசெய்ய - ஒளியைத் தரும்பொருட்டு, சதுர்முகன் - நான்முகனாகிய பிரமன், கற்பம்தொறும்- கற்பங்கடோறும், விரிக்கின்ற இருசுடரும் - படைக்கின்ற இருசுடர்களும், ஒருவழி தொக்கென - ஓரிடத்திற் கூடினாற்போல, வியன் - பெரிய, கதிர்படலம் மூடி - ஒளித்தொகுதியை மூடி, வீங்கு - அதிகரித்த, இருள் - இருட்டை, விழுங்கு - விழுங்குகிற, செம்மணி - செம்மணிகள் பதிந்த, மாடநிரையும் - மாளிகை வரிசையும், ஒளிவிளை-ஒளியுண்டாகிற, பசுங்கதிர் - பசிய கிரணத்தையுடைய, வெள்புரி - வெண்சங்குகள், புரிக்கும் - ஈனுகின்ற, செழுதரள மாடமும் - செழிய முத்துமாளிகைகளும், வெயிலினொடு பொழிநிலாபோர்ப்ப - (முறையே) வெயிலினுடன் சொரிகின்ற நிலாவினால் மூட, முற்றும் - முழுதும், போது தெரியாமையின் - பொழுது அறியப்படாமையால், குமுதமொடு சதம் இதழ் போதுமே - குமுதங்களோடு நூற்றிதழ்க் கமலங்களுமே, இரு போதையும் - இரு பொழுதையும், தெரிக்கும் - உணர்த்துகிற, தடம்பணை உடுத்த - பெரிய வயல்கள் சூழ்ந்த, தமிழ்-தமிழ் வழங்குகிற, வேளூர—, சிறுபறை—, எ-று.

கோடி - வரிசை. இருசுடர் - சூரியசந்திரர்கள். இருபோதும்-இராப்பொழுதும் பகற்பொழுதும். குமுதம் இராப்பொழுதையும், கமலம் பகற்பொழுதையும் தெரிவிக்கின்றன வென்பது கருத்து. (௬)

வே று.

மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை மடமயி லின மகவ, மால்கட லோலிடு மொலியென விரக மடந்தையர் மனநெகிழப்,

பழமறை யார்ப்பென வாகுதி வேட்டெழு பண்ணவ ருண் மகிழப், பரநா தத்தொலி யெனவறு பூதி பலித்தவர் நெக்குருக,

வழலவிர் சோதியெ மைய னடஞ்செய வாயிர மங்கையினே ரண்ணறு வைத்திடு குடமுழ வொடு சுட ராழி யவன் கொட்டு,

முழவென வமரரு முனிவரு மார்ப்ப முழக்குக சிறு பறையே, முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன் முழக் குக சிறுபறையே.

(இ - ள்.) மழைமுகில் - குளிர்ச்சியையுடைய மேகங்கள், பிளிறு-ஒலிக்கின்ற, முழக்கு என - முழக்கமென்றெண்ணி, விரி சிறை - விரித்த கலாபத்தை யுடையனவாய், மடமயில் இனம் அகவ - இளமயிற் கூட்டங்கள் ஆடவும், மால்கடல் ஒலிடும் ஒலி யென - பெரிய கடல் ஒலமிடுகிற சத்தமென்றெண்ணி, விரக மடந்தையர் - விரகங்கொண்ட மாதர்கள், மனம்நெகிழ - மன முருகாநிற்கவும், பழமறை ஆர்ப்பு என - பழமையாகிய வேத கோஷமென் றெண்ணி, ஆகுதிவேட்டு எழு - ஆகுதியை விரும்பி யெழுந்த, பண்ணவர் - தேவர்கள், உள்மகிழ - மனமகிழவும், பரநாதத்து ஒலியென - பரநாதத் தொனியென்றெண்ணி, அறு பூதிபலித்தவர் - அறுபவம் பலிக்கப் பெற்றவர், நெக்கு உருக - மனநெகிழ்ந்துருகவும், அழல் அவிர்சோதி - அனல் விளங்குகிற ஒளியுருவாகிய, எம் ஐயன் நடம்செய - எம்மிறைவன் நடஞ் செய்ய, ஆயிரம் அங்கையின் - ஆயிரம் கைகளையுடைய, ஒர் அண் ணல் - ஒரு பெரியோன், துவைத்திடு - முழக்குகிற, குடமுழ வொடு - குடமுழாவுடனே, சுடர் ஆழியவன் கொட்டும் - ஒளியை யுடைய சக்கராயுதத்தை யேந்தினவனாகிய திருமால் கொட்டுகிற,

முழவு என - முழவொலியென்றெண்ணி, அமரரும் முனிவரும் ஆர்ப்ப - தேவர்களும் முனிவர்களும் ஆரவாரிக்கவும், சிறுபறை முழக்குக—, முத்தமிழ்பயில் - முத்தமிழ் வழங்குகிற, பரிதிப்பதி முருகன் - பரிதிபுரி முருகனே, சிறுபறை முழக்குக—, எ-று.

மழை - மழைபெய்கிற வெளினுமாம். அகவுதல் - ஆடுதல். ஆகுதி-தேவருணவு. (யாகத்திற் றரப்படுமுணவு) ஆயிரமங்கையினேரண்ணல் என்றது வாணாசுரனை. முத்தமிழாவன இயல் இசை நாடகம் என்பன. (கூ)

பெருவெளி முகடு திறந்திட் டண்டப் பித்திகை வெடி
யாமே, பேரண் டத்துள வேதண் டங்கள் பிதிர்ந் துதி
ராகாமே,

குருமணி சிதறிய வென்ன வுடுத்திரள் கொட்டுண் டுதி
ராமே, குவடு படுந்திசை செவிடு படச்சிலர் குடர்கள்
குழம்பாமே,

திருவிர லொடுநக கண்களி னுஞ்செங் குருதி ததும்பாமே,
சேயொளி நின்று தளும்பிட நின்சிறு செங்கை வருந்
தாமே,

முருகலர் தாரவ னொருமுறை மெல்ல முழக்குக சிறு
பறையே, முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன் முழக்குக
சிறுபறையே.

(இ - ள்.) பெருவெளி முகடு திறந்திட்டு - பெரு வெளியின் முகடு பிளந்திட்டு, அண்டப்பித்திகை வெடியாமே - அண்டச் சுவர் வெடிக்காமலும், பேர் அண்டத்து உள்ள - பெரிய அண்டங்களிலுள்ள, வேதண்டங்கள் - மலைகள், பிதிர்ந்து உதிர் ஆகாமே - சிந்தி யுதிராமலும், குருமணி சிதறிய என்ன - நிறமுள்ள மணிகள் சிதறின வென்னும்படி, உடுத்திரள் - உடுக் கூட்டம், கொட்டுண்டு உதிராமே - கொட்டுண்டு உதிராமலும், குவடுபடும்திசை - குலமலைகள் பொருந்திய எட்டுத் திக்கிலுள்ளாரும், செவிடுபட - செவிடுபடும்படி, சிலர் குடர்கள் குழம்பாமே - சிலர் குடர்கள் குழம்பாமலும், திருவிரலொடு - திரு

வீரலோடு, நகக் கண்களிலும் - நகக்கண்களிலும், செங்குருதி ததும்பாமே - செங்குருதி ததும்பாமலும், சேயொளிநின்று துளும்பிட - செவ்வொளிநின்று ததும்பிட, நின்சிறு செங்கை வருந்தாமே - உனது சிறு செங்கை வருந்தாமலும், முருகு அவர் தாரவன் - வாசனையோடலர்ந்த பூமாலையை யுடையவனே, ஒரு முறை - ஒருதரம், மெல்ல - பைய, முழக்குக சிறுபறையே —, எ-று.

அண்டச்சுவர் - சக்ரவாளகிரி. திசையெட்டெடன மேல் வருதலால் குவடு அஷ்டகுலாசலங்க ளென்பது பெறப்பட்டது. தாரவன் - அண்மைவிளி. (எ)

வம்மி னெனப்புல வோரை யழைத்திடு வண்கொடை
முரசமென, வடகலை தென்கலை யொடுபயி லுங்கவி
வாணர்க ளோடிவர,

வம்மென் மடப்பிடி பொன்னுல கீன்றவ ணங்கை மணம்
புணரு, மணிகிளர் மணிமுர செனவெ மையனெ
டம்மை மனங்குளிரத்,

தெம்முனை சாயச் சமர்விளை யாடிச் செங்கள வேள்வி
செயுந், திறன்முர செனவிமை யவர்விழ வயரச் செழு
நகர் வீதிதொறு,

மும்முர சமுமதிர் காவிரி நாடன் முழக்குக சிறு பறையே,
முத்தமிழ் பயில்பரி திப்பதி முருகன் முழக்குக சிறு
பறையே.

(இ-ள்.) வம்மின் என - வாருங்களென்று, புலவோரை அழைத்திடு - புலவரை யழைக்கிற, வள் - வளவிய, கொடைமுரசம் என - கொடைமுரசம் போலவும், வடகலை தென்கலையொடு பயிலும் - வடகலையைத் தென்கலையோடு பயில்கின்ற, கவிவாணர்கள் ஓடிவர - வித்வான்கள் ஓடிவரவும், அ - அந்த, மெல் - மெல்லிய, மடப்பிடி - இளம்பிடிபோன்ற, பொன்னுலகு ஈன்ற அண

ங்கை - பொன்னுலகுபெற்ற தெய்வப்பெண்ணை, மணம்புணரும்-மணம் புணர்தற்குரிய, அணிகிளர் - அழகு விளங்குகிற, மணிமுரசு என்ன - மணிமுரசம் போலவும், எம் ஐயனொடு - எம்மிறைவனுடன், அம்மைமனம் குளிர - இறைவியின் மனமுங் குளிரவும், தெம்முனைசாய - பகைவரது முற்படை முரிந்தோடும்படி, சமர்விளையாடி - போர்விளையாடி, செங்களவேள்விசெய்யும்-செங்கள வேள்விசெய்கிற, திறல்முரசு என - வெற்றி முரசுபோலவும், இமையவர் விழவு அயர-தேவர்கள் விழாச்செய்ய, செழுநகர் வீதிதொறும் - செழுமையாகிய நகரத் தெருத்தோறும், மும்முரசமும் அதிர் - மும்முரசங்களு முழங்குகிற, காவிரிநாடன் - காவிரிநாடனே, முழக்குக சிறுப்பறையே —, முத்தமிழ் —, எ-று.

'அம்மென் மடப்பிடி பொன்னுலகீன்ற வணங்கு' என்றது தெய்வயானையாரை. இமையாதவரை இமையவர் என்றது மங்கல வழக்கு. (அ)

வேறு.

பெருகு சுவைத்தெளி நறவொழு கக்கனி கனியமுதே
பிடிநடை கற்றிட வடிகள் பெயர்த்திடு மடவனமே
கருவரை நெக்குட னுருகமி ழற்றுமொர் கிளியரசே
கருணைசெயத்தகு மளிய னிடத்தெனு மொழி புகலா
வருளில் புனத்தவர் மகளிரு பொற்பதம் வருடல்செயா
வவண்மு ளெடுத்துநின் முடியின் முடித்திடு கரமலராற்
பருவயி ரப்புய சயிலன் முழக்குக சிறுபறையே
பரிதி புரிச்சிறு குமரன் முழக்குக சிறுபறையே.

(இ - ள்.) பெருகு - பெருகாநின்ற, சுவை - சுவையுள்ள, தெளிநறவு ஒழுக - தெளிதேனொழுகாநிற்க, கனி - கனிந்த, கனி அமுதே - கனியின் அமிர்தமே, பிடிநடை கற்றிட - பெண்யானைகள் நடை கற்கும்படி, அடிகள் பெயர்த்திடும் - அடிகளைப் பெயர்த்திடுகிற, மட அன்னமே - இளமையாகிய அன்

னமே, கருவரைநெக்கு - கரியமலைகள் நெக்குவிட்டு, உடன் உருக - விரைந்துருகும்படி, மிழற்றும் - குழறுகிற, ஓர் கிளி அரசே - ஒப்பற்ற கிள்ளையரசே, அளியனிடத்து கருணை செயத் தகும் - எளியேனிடத்தில் கிருபை செய்யத்தகும், என்னும் மொழிபுகலா - என்னுஞ் சொற்களைச்சொல்லி, அருள்இல் - இரக்கமில்லாத, புனத்தவர்மகள் - குறவர் மகளுடைய, இரு பொன்பதம் வருடல் செயா - இரண்டு அழகிய பாதங்களை வருடி, அவள்முன் - அவளுக்கெதிரே, எடுத்து - தூக்கி, நின்முடியில் முகிழ்த்திடு - உன் சிரமீது கூப்புகிற, கரமலரால் - கைம்மல ரால், பருவயிரம - பெரு வயிரமலைபோலும், புயசயிலன் - தோள் மலையை யுடையவனே, முழக்குக —, பரிதிபுரி - பரிதிபுரியி லெழுந்தருளிய, சிறு குமரன் - சிறு குமரனே, முழக்குக —, பறையே —, எ-று.

புகலா - செய்யாவெனும் வாய்பாட்டிறந்த கால வினையெச் சம். 'அருளின் மனத்தவர்மகள்' என்றது வள்ளிநாயகியை. வரு டல் செயா - வருடியெனப் பொருள்படுஞ் செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினை யெச்சம். சயிலன் - அண்மைவிளி. புயசயிலன் என மேல்வருதலால், வயிரம் வயிரமலையென் றுரைக் கப்பட்டது. (க)

இழுமென் மொழித்தெளி தமிழின் வடித்திடு நவரசமே
யிதய விருட்டற வுணர்வி லுதித்திடு சுடரொளியே
கழுவு மணிக்கல னடுவி லிழைத்திடு குலமணியே
கனிதரு முக்கனி யொடுவடி கட்டிய சுவையமுதே
பொழுகு நறைக்செழு மலர்விரி யக்கமழ் புதுமணமே
யுருகு முளத்தருள் பெருகி யுவட்டெழு சலநிதியே
பழமறை கட்கொரு முதல்வன் முழக்குக சிறுபறையே
பரிதி புரிச்சிறு குமரன் முழக்குக சிறுபறையே.

(இ - ள்.) இழுமென்மொழி - இனிக்கின்ற சொற்களையு டைய, தெளிதமிழின் - தெள்ளிய தமிழினின்றும், வடித்திடு -

வடித்திட்ட, நவரசமே —, இதயம் - மனத்திலுள்ள, இருட்டு - அஞ்ஞானவிருள், அற - ஒழிய, உணர்வில் - அறிவினிடத்தே, உதித்திடு - உதிக்கின்ற, சுடர் ஒளியே - ஒளிர்கின்ற சூரியனே, கழுவும் - கழுவப்பட்ட, மணி - மணிகளாலியன்ற, கலன் நடுவில் - ஆபரணங்களி னிடையே, இழைத்திடு - இழைத்திட்ட, குலமணியே - உயர்ந்த மாணிக்கமே, கனிதரு - கனிந்த, முக்கனியொடு - முக்கனிகளோடு, வடிகட்டிய - வடித்த, சுவை அமுதே - சுவையுள்ள அமிர்தமே, ஒழுகுநறை - ஒழுகாநின்ற தேனையுடைய, செழுமலர் விரிய - செழுமையாகிய மலர்கள் விரிய, கமழ் - மணக்கின்ற, புதுமணமே —, உருகும் - உருகா நின்ற, உள்ளத்து - (அன்பாது) மனத்தில், அருள்பெருகி உவட்டெழு - அருள் வெள்ளம் பெருகித் ததும்புகிற, சலநிதியே - கடலே, பழமறைகட்கு - பழமையாகிய வேதங்களுக்கு, ஒரு முதல்வன் - ஒப்பற்ற முதல்வனே, முழக்குக சிறுபறையே - பரிதிபுரி —, பறையே —, எ-று.

இழும் - அநுகரணவோசை. இழும் மென்மொழியென்றும் பிரிக்கலாம். கழுவல் - சுத்தி செய்தல். இழைத்தல் - பதித்தல். முக்கனிகளாவன - வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி யென்பன. (ம)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.



## சிறுதேர்ப்பருவம்.



போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம் புனலோட வோடிநிமிரும், புணரிப் பெருந்தானை யவுணப் படைத் தலைவர் பூதப் படைத்தலைவர் முன்,

றரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட தழல் விழிக் கெதிர்செலாத, தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாம னுந் தாலிக்கு வேலிகொலெனப்,

பீரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி பெருகக் கடைக்கணிற்கும், பெய்வளை யவர்க்கோதவவர்விழிக டொறுமிளம் பேதையர்கள் கண்டொறுமெனத்,

தேரோடு மொருபெருஞ் சிலையோடு நின்றவன் சிறுதே ருருட்டியருளே, திருவளர வளர்கந்த புரிவள ரிளங்கு மர சிறுதே ருருஞ்டியருளே.

(இ - ள்.) போர் ஓடு - போர்க்களத்தில் விரைந்து செல்லு கிற, படை துறந்து - ஆயுதங்களைவிட்டு, உடல் திறந்து - உடம்பு கள் வகிரப்பட்டு, ஓடு - ஓடுகிற, செம்புனல் ஓட - செந்நீரோடும் படி, ஓடி நிமிரும் - ஓடி யுயர்ந்த, புணரி - கடல்போன்ற, பெருந் தானை - பெரும்படையையுடைய, அவுணப்படைத் தலைவர் - அவு ணர் சேனைத்தலைவர்கள், பூதப்படைத் தலைவர்முன் - பூதசேனைத் தலைவர்களுக் கெதிரில், தாரோடு அவிழ்ந்திட்ட - பூமாலைகளோ டும் அவிழ்ந்துபோன, குஞ்சிக்கு - குடுமிக்கு, இமைத்திட்ட - பிரகாசிக்கிற, தழல்விழிக்கு - நெருப்புப்போலும் கண்ணுக்கு, எதிர் செலாததாளுக்கு - எதிரேறி நடவாத அடிக்கு, வாள் சோர் - வாள் நழுவவிட்ட, தடம் கைக்கு - பெருங்கைகளுக்கு, நாமனும் தாலிக்கு - அச்சத்தை விளைத்துள்ள உங்கள் தாலிகட்கும், வேலிகொல் எனு - வேலியோவென்று, பீர் ஓடு கொங்கை - பசலை பூத்த தனங்களின்மேல், கண்ணீர் ஓடு - கண்ணீராயோடு கிற, வெள் அருவிபெருக - வெள்ளருவி பெருகும்படி, கடைக்

கண் நிற்கும் - வாயிலில் நிற்கிற, பெய்வளையவர்க்கு ஓத - மாதர்க்குச் சொல்ல, அவர் விழிகள்தொறும் - அவர்களுடைய கண்கள் தோறும், இளம் பேதையர்கள் கண் தொறும் என - இளம் பெண் களுடைய கண்கடோறும் நிற்பதுபோல, தேரோடும் ஒரு பெருஞ் சிலையோடும் நின்றவன் - தேருடனும் ஒரு பெரு வில்லுடனும் நின்றவனே, சிறுதேர் உருட்டியருள்—, திருவளரவளர்-செல்வம் வளரவளர்கின்ற, கந்தபுரி வளர் இளங்குமர - கந்தபுரியில் வாழ்கின்ற இளங்குமரனே, சிறுதேர் —, எ-று. (க)

கம்பக் களிற்றுக் கடற்றானை வீரர்கட் கடைவிற் கடைக்கன லெழக், கண்டொட், டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு கடுங்குருதி வெள்ளமூழ்கித்,

தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு கனற்சிகை யெனப்பதைப்பச், சூட்டிறைச் சிக்குச் சிறுங்குங் குறட் பேய்க்கொர் சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்,

தம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட் டாடும் பறந் தலைநிலத், தானைப் பிணக்குன்று மவுணப் பிணக்காடு மளறுபட் டொழியநின்றோர்,

செம்பொற் றடந்தே ருருட்டிவரு சேவகன் சிறுதே ருருட் டியருளே, திருவளர வளர்கந்த புரிவளரிளங்குமர சிறு தேருருட்டியருளே.

(இ - ள்.) கம்பம்களிறு - கட்டுத்தறியிற் கட்டப்படுகிற யானைகளையுடைய, கடல்தானைவீரர்-கடல்போலும் படைவீரரது, கண்கடையில் - கடைக்கண்களில், கடைக்கனல் எழ - ஊழித்தீ யெழ, கண்தொட்டு உண்ணும்-கண்ணைத் தோண்டியுண்ணுகின்ற, சில மருள்பேய் - சில மருட்சியையுடைய பேய்கள், கரிந்து எழு- கரிந்து எழாநின்ற, கடுங்குருதி வெள்ளம் மூழ்கி - வேகமுள்ள உதிரவெள்ளத் திற்படிந்து, தும்பைதலை - தும்பை மாலையைத் தரித்த சிரசிலுள்ள, செம்மயிர் சிகையினை - செம்மயிர்ச்சிகையை, சுடுகனல் சிகையென - சுடுகின்ற தீச்சிகை யென்றெண்ணி,

பதைப்ப - நடுங்கா நிற்க, சூட்டு இறைச்சிக்கு - சூட்டிறைச்சியின் பொருட்டு, சிணுங்கும் - அழுகிற, குறள்பேய்க்கு - குறும்பசாசுக்கு, ஓர் சூர்ப்போய் - ஒரு அச்சத்தைச் செய்கிற பேயானது, கொழுந்தசைகள் - கொழுவிய மாமிச கண்டங்களை, அம்பில் கோத்து சுட—, தான் - தான், கவந்தமொடு - உடற்குறையோடு, தொந்தமிட்டு ஆடும்-தொடர்ந்து ஆடா நின்ற, பறந்தலை நிலத்து-யுத்த பூமியில், ஆனைப்பிணக்குன்றும் - யானைப் பிணமலையும், அவுணப்பிணக்காடும் - அசுரப்பிணக்காடும், அளறுபட்டு ஒழிய - சேறுபட்டொழியும்படி, நின்று—, ஓர் - ஒப்பற்ற, செம்பொன் - செம்பொன்னுனியன்ற, தடம்தேர் - பெருந்தேரை, உருட்டிவரு சேவகன் - உருட்டிவந்த வீரனே, சிறுதேருருட்டியருள், திருவளர —, எ-று.

சூட்டிறைச்சி - தலைக்கறி, பறந்தலை நிலம் - போர்க்களம்.

வண்டே றுசெந்நிறப் பங்கித் தலைக்கமல வனமூடு குருதி யாற்று, மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி மகரமீ னென நினைந்து,

கொண்டேகு சிறுசூடர்ப் பெருவலை யெடுத்தெறி குறட்பேய் நெடுஞ்சினமுறக்,குறுநரி பிடித்தீர்ப்ப வலறுவதும் வீரர்தொடு கொலைநேமி யவுண ருயிரை,

யுண்டேகு வதுமொருவன் விடவோ லிடுங்கரிக் குதவவரு திகிரியேய்க்கு, மொல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டரு ருய்த்திட்ட விந்த்ரஞாலத்,

தின்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன் சிறுதேருருட்டியருளே, திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர சிறுதே நருட்டியருளே.

(இ - ள்.) வண்டு ஏறு - வண்டுகளேறப்பெற்ற, செந்நிறப் பங்கிதலை - செந்நிற மயிரையுடைய தலைகளாகிய, கமலவனமூடு - தாமரைக்காட்டூடே, குருதியாற்று - உதிரநதியில், மால்யானை - பெரிய யானைகள், கையெடுத்து ஆர்த்து - கைதூக்கி ஆரவா

ரித்து, நீந்த - நீந்தாநிற்க, புணரி - கடலிலுள்ள, மகரமீன்என நினைந்து - மகர மச்சமென்றெண்ணி, கொண்டு ஏகு - கொண்டு செல்லுகிற, சிறுகுடர் பெருவலை - சிறு குடராகிய பெரிய வலையை, எடுத்து எறி - எடுத்து வீசுகிற, குறள்பேய் - குட்டைப் பேய், நெடுசினம் உற - பெருங் கோவங்கொள்ளும்படி, குறுநரி - குள்ள நரிகள், பிடித்து ஈர்ப்ப - பிடித்திழுக்க, அலறுவதும் - அலறுதலும், வீரர்தொடு - வீரர் விடுகிற, கொலைநேமி - கொலைச் சக்கரம், அவுணர் உயிரை —, உண்டு ஏகுவதும் - உண்டுபோவ தும், ஒருவன்விட - ஒப்பற்றவனாகிய திருமால்விட, ஓலிடும் கரிக்கு - முறையிட்ட யானைக்கு, உதவவரு - உதவவந்த, திகிரி எய்க்கும் - சக்கரத்தை நிகர்க்கிற, ஒல்லென்பறந்தலை - ஒல்லென் றொலிக்கிற போர்க்களத்தில், மறம் தலைக்கொண்ட - கோவத்தை மிகுதியாகக்கொண்ட, சூர் உய்த்திட்ட - சூரபன் மன்செலுத்தி வந்த, இந்திரஞாலம் - இந்திரஞாலம் என்று சொல்லப்படுகிற, திண்தேரை - திண்ணியதேரை, உருளாது நிற்க பணித்தவன் - உருளாது நிற்கும்படி நியமித்தவனே, சிறுதேருருட்டி —, திரு வளர —, எ-று.

குடல் குடர் எனப் போலியாயிற்று. ஈர்த்தல் - இழுத்தல். ஓலிட்டகரி - கஜேந்திரன். பணித்தவன் - அண்மைவிளி. (ரு)

பைங்கட் சிறைக்காய் கடைக்காய் செயக்கிரிகள் விரிசிறை
 படைத்தெழுவபோற், படருந்தன் வேகத்தி னெக்கப்
 பறக்கப் பறந்தலைச் செந்தலை யறும்,
வெங்கட் டயித்திய ருடற்குறை தலைக்குறை விரைந்துயி
 ரினைத்தொடர்ந்து, மீச்செல்லு மாச்செல் லெனச்செலப்
 பூமாரி விண்டூர்ப்ப தெனவுடுவுகப்,
பொங்கற் கடற்குட்ட மட்டதிக் குந்தமிற் போர் செயப்
 பார்கவிழவெம், பொறியுடற் சேடன் படந்தூக்கி யார்க்
 கும் புகைப்படலம் வடவா முகச்,
செங்கட் பசுந்தோகை வாம்பரி யுகைத்தவன் சிறுதே
 ருருட்டியருளே, திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
 சிறுதே ருருட்டியருளே.

(இ - ள்.) பைங்கண் - பசுங்கண்களையுடைய, சிறைக்கால் - சிறகுக்காற்றானது, கடைக்கால் செய்ய - ஊழிக்காற்றையுண்டாக்க, கிரிகள் - மலைகள், விரிசிறைபடைத்து - விரிந்த சிறகுகள் பெற்று, எழுவபோல் - எழுவனவற்றைப்போல, படரும் - செல்லுகிற, தன் வேகத்தின் - தனது வேகத்தால், ஒக்கபறக்க - உடன் பறக்க, பறந்தலை - போர்க்களத்தில், செந்தலை அறும் - செத்தலை பறுபட்ட, வெங்கண் - தறுகண்மையுள்ள, தயித்தியர் - அவுணருடைய, உடற்குறை தலைக்குறை - உடற்குறைகளும் தலைக்குறைகளும், விரைந்து உயிரினை தொடர்ந்து - விரைவாய் உயிரைப் பின்பற்றி, மீச்செல்லும் - மேலே செல்லும், மாசெல் என - கருமை பொருந்திய மேகம்போல, செல் - செல்லுகிற, அ - அந்த, பூமாரி - மலர்மழை, விண் தூர்ப்பது என - ஆகாயத்தை மூடுவதுபோல, உடு உக - உடுக்கள் சிந்த, பொங்கல் - பொங்கு தலையுடைய, கடல் குட்டம் - கடற் பள்ளங்களும், அட்டதிக்கும் - அஷ்டதிக்குகளிலும், தம்மில் போர்செய்ய - தம்மிற்போர் புரிய, பார்கவிழ - பூமியானது குப்புற, வெம்பொறி உடல் - வெவ்விய புள்ளிகளையுடைய தேகமுடைய, சேடன் - ஆதிசேடன், படம் தூக்கி ஆர்க்கும் - படமெடுத்து ஆர்த்தலாலுண்டாகிற, புகைப்படலம் - புகைக்கூட்டமாகிய, வடவாமுகம் - வடவைத்தீயை நிகர்த்த, செங்கண் - செவந்த கண்களையும், பசுந்தோகை - பசுமையாகிய கலாபத்தையுமுடைய மயிலாகிய, வாம்பரி - தாவும் வாகனத்தை, உகைத்தவன் - செலுத்தினவனே, சிறு தேருருட்டியருளே, — திருவளர ஏ-று.

படர்தல் - செல்லுதல், உடற்குறைதலைக்குறை யென்பவற்றிற்றிலெண்ணும்மைக டொக்கன. உடுக்கள் - விண்மீன்கள், வாவும் வாமெனத் தொகுத்தல் பெற்றது. செங்கண் பசுந்தோகை யென்பதற்கு செவந்த கண்களையுடைய பச்சைமயில் எனினுமாம் தோகை - சினையாகுபெயர். உகைத்தல் - செலுத்தல். (௩)

நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு நிகளத்
 தடங்குன் றுவா, னிமிருங் கதிர்க்குலைச் செந்நிலைப் பாகு
 படு நெட்டிலைக் கன்னல்கொலெனுக்,

கைவைத் திடப்பரிமுகஞ்செய்த வெய்யோன் கடும்பரியை
 நட்புக்கொளுங், கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
 காட்டிற் பிறந்தபிரியா,

மெய்வைத்த காதன்மை யரமகளிர் பேராய வெள்ளந்
திளைத்தாடியோர், மென்னடைக் கேக்கற்ற பிடிபின்
பிடிக்கமுலை வேழங்க ளுடனுலாவுந்,

தெய்வப் பிடிக்குக் கிடைத்தவொரு மழகளிறு சிறுதே
ருருட்டியருளே, திருவளர வளர்கந்த புரிவள ரிளங்
குமர சிறுதே ருருட்டியருளே.

(இ - ள்.) நெய் வைத்த - நெய் பூசப்பட்ட, கூந்தல் - கூந்
தலையுடைய, பிடிக்குஉதவ - பெண் யானைக்குக் கொடுக்கும்
பொருட்டு, நால்கோடு - நான்கு கொம்புகளையுடைய, நிகளம் -
சங்கிலிபூண்ட, தடம்குன்று - பெரிய மலையானது, வான் நிமி
ரும் - ஆகாயமளவும் உயர்ந்த, கதிர்க்குலை செந்நெல்லை - கதிர்க்
குலைகளோடு கூடிய செந்நெற்றாள்களை, பாகுபடு - சருக்கரை
படுகிற, நெடுஇலை கன்னல்கொல்லனு - நெடிய இலைகளையுடைய
கரும்போ வென்று, கைவைத்திட - கைவைக்கும் பொருட்டு,
பரிமுகம்செய்து - குதிரைமுகஞ்செய்து, வெய்யோன் - சூரிய
னது, கடும்பரியை - வேகத்தையுடைய குதிரைகளை, நட்புகொள்
ளும் - சிநேகித்தற்குரிய, கழனிவிரி - வயல்கள் பரந்த, திரு
காவிரிநாட - அழகாகிய காவிரிநாடனே, கற்பகக் காட்டில்
பிறந்து - கற்பகாடவியிற்றோன்றி, பிரியா - பிரியாத, மெய்
வைத்த - உண்மையாகிய, காதன்மை - அன்பினையுடைய, அர
மகளிர் - தெய்வப்பெண்களது, பேர் ஆய வெள்ளம் திளைத்து
ஆடி - பெரிதாகிய ஆயவெள்ளம் படிந்தாடி, ஓர் மெல்நடைக்கு
எக்கற்ற - ஒப்பற்ற மெல்லியநடைக்கு எக்கற்ற, பிடி - பெண்
யானை, பின்பிடிக்க - பின்பற்ற, முலை வேழங்களுடன் உலாவும் -
முலையானைகளோ டுலாவுகிற, தெய்வப்பிடிக்கு-தெய்வ யானைக்கு,
கிடைத்தது - வாய்த்ததாகிய, ஒரு மழகளிறு - ஒப்பற்ற இளங்
களிறே, சிறுதே ருருட்டியருளே—, திருவளர—,யருளே—,எ-று.

'நாற்கோட்டு நிகளத்தடங்குன்று' என்றது ஐராவதத்தை.
நிகளம் - விலங்கெனினுமாம். குதிரைமுகஞ் செய்தல் - வளை
தல் (குனிதல்). எக்கறல் - ஏங்கல். (இவ்வழகிய நடையெமக்
கில்லையே யென்றிரங்கல்). மழகளிறு - அண்மைவிளி. (சு)

பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம் படைவீடு கயல்கடாவும், பழனங்க ளோவஸ்த்ர சாலைபூஞ் சோலைப் பரப்பெலாங் காற்றேரொடுங்,

கொற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு கூடமேயெனினு மருதக், கோமகன் குடிகொண்ட சோணா - சேணாடு குங்குமங் கொட்டுதிண்டோட்,

பொற்றடற் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு பூங்குழற் காடும்வெயில்கால், புனைமணிக் கலையல்குன் மாக்கடலு மேந்தியொர் புனத்தின்கண் மிகநடங்குஞ்,

சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன் சிறுதேருருட்டியருளே, திருவளர வளர்கந்த புரிவளரிளங்குமர சிறுதே ருருட்டியருளே,

(இ - ள்.) பற்றுவில் - பிடித்த கருப்பு வில்லையுடைய, காமன் - மன்மதனது, கொடிப்படைக்கு - கொடிப்படைதனக்கு, ஊர் எல்லாம் - ஊர் முழுதும், படைவீடு - பாசறை, கயல்கள் தாவும் - கயல்மீன்கள் குதிக்கின்ற, பழனங்களோ - வயல்களோ, அஸ்த்ரசாலை - அம்புச்சாலை, பூஞ்சோலைப்பரப்பு எல்லாம் - மலர்ச்சோலைப்பரப்பு முழுதும், கால்தேரொடும் - தென்றற் காற்றாகிய தேருடனே, கொற்றம் - வெற்றியைத்தருகிற, அம் - அழகிய, கங்குல் - இரவாகிய, கடா யானையும் கட்டு - கடாயானையையும் கட்டுகிற, கூடமே எனினும் - கூடமேயாயினும், மருதம் கோமகன் - மருத நிலமாகிய ராஜகுமாரன், குடிகொண்ட - குடிகொண்டிருக்கிற, சோணாட - சோணாடனே, சேண் ஆடு - ஆகாயத்தை யளாவிய, குங்குமம் கொட்டு - குங்குமம் அப்பிய, திண்தோள் - திண்ணிய புயங்களாகிய, தடம் பொன்குன்றின் - பெரிய பொன் மலைமேல், இருகொங்கை பொருப்பும் - இருதன மலையும், ஒரு - ஒப்பற்ற, பூகுழல் காடும் - மலர்க் கூந்தலாகிய காடும், வெயில்கால் - ஒளியை வீசுகிற, புனை - அலங்கரிக்கப்பட்ட, மணி - மணிகளிழைத்த, கலை - மேகலையுடுத்த, அல்குல் - நிதம்பமாகிய, மாகடலும் - பெருங்கடலும், எந்தி - தாங்கி, ஓர் புனத்தின்கண் - ஒப்பற்ற தினைப்புனத்தில், மிக அடங்கும் - மிகுதியாகத் துவளாநின்ற, சிற்றிடைக்கு - சிற்றடையோடு, ஒல்

கும் - அசைகின்ற, மெல்கொடிபடர நின்றவன் - மெல்லிய கொடியானது படர்ந்தேறும்படி நின்றவனே, சிறு—யருளே—, திருவளர —, யருளே —, எ-று.

கொடிப்படை - தூசிப்படை (முற்படை'. தாமரை நீலம் என்னும் மலர்களைகத் தருதலால் பழனங்களோ வஸ்த்ரசாலை என்றார். கால் - காற்று. காற்றேர் என்றதனால் தென்றற் காற்றெனப் பட்டது. கடாயானை - ஆண்யானை, மதயானையுமாம். கூடம் - யானை குதிரைகள்கட்டுஞ் சாலை சிற்றிடைக்கு உருபு மயக்கம். 'மென்கொடி' யென்றது வள்ளிநாயகியை. நின்றவன் - அண்மைவிளி (க)

கோல்பாய் பசும்புன் னைசும்புதும் பத்தடங் குன்று கவுன்
மடைதிறந்து, கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்
திரை கொழித்துடன் கோப்ப மேதிப்,

பால்பாய் பெருக்கா றுவட்டெழுத றன்றுணைப் பாவைய
ரொடுங்குடையுமப் பாகீரதிக்குநிகர் தண்டுறைதொறுந்
திக்கு பாலர்மேற் படையெடுத்து,

வேல்பாய் நெடுங்கட் கடற்றானை யொடுமொருவன் மேற்
செல்ல நாற்றிசையிலும், வெற்றிச் சுயற்கொடி யெடுத்
தென வெடுத்தெறியும் வெண்டிரை கிழித்துவெடிபோஞ்

சேல்பாய் தடம்பணை யுடுத்தகா விரிநாட சிறுதே ருருட்டி
யருளே, திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர சிறு
தே ருருட்டியருளே,

(இ - ள்.) கோல்பாய் - தாறு பாய்ந்துண்டாகிய, பசும்புண் அசும்பு - பச்சைப்புண் கசிந்துகொண்டே யிருக்கிற, கும்பம் - கும்பஸ்தலத்தை யுடைய, தடம்குன்று - பெரிய மலையானது, கவுள்மடை திறந்து - கபோலமடையைத் திறந்து, கொட்டு - சொரிகிற, நெடு அருவியொடு - பெரிய அருவியோடு, தேன் அருவியும்—, திரைகொழித்து - அலை யெறிந்து, உடன்கோப்ப - ஒன்றாய் கோத்துக்கொள்ள, மேதிபால்பாய் - எருமைப்பால் பாய்கிற, பெருக்கு ஆறு - பெருக்காறானது, உவட்டெழுதல் - நிறைந்தெழுதலானது, தன் துணை - தனக்கிணையாகிய, பாவைய ரொடும் குடையும் - மாதர்களோடு மூழ்குகின்ற, அ - அந்த,

பாகீரதிக்கு நிகர் - ஆகாய கங்கைக்குச் சமானமாகிய, தண் துறை தொறும் - குளிர்ந்த துறைதோறும், திக்கு பாலர்மேல் - திசைக் காவலர்மீது, படையெடுத்து —, வேல்பாய் - வேல்போலப் பட்டுருவுகிற, நெடுங்கண் - நெடுகிய கண்களையுடைய. கடல்தானையொடும் - கடல்போலும் சேனையோடும், ஒருவன்மேல் செல்ல - ஒப்பற்றவனாகிய மன்மதன் படையெடுத்துச் செல்லும்பொருட்டு, நால் திசையிலும் - நான்கு திக்கிலும், வெற்றி - வெல்லுதலைத் தருகிற, கயல்கொடி எடுத்தென - மீனக்கொடிகளை உயர்த்தினாற் போல, எடுத்து எறியும் - எடுத்து வீசுகிற, வெள்திரை கிழித்து - வெள்ளிய அலைகளைப் போழ்ந்துகொண்டு, வெடிபோம் - மேலே தாவுகிற, சேல்பாய் - சேல்கள் பாய்தற்கிடமாகிய, தடம்பணை உடுத்த - பெரிய வயல்களாற் சூழப்பெற்ற, காவிரிநாட - காவிரி நாடனே, சிறுதே —, எ-று.

தாறு - அங்குசம். கோல்பாய் பசும்புண் ணசும்பு கும்பத் தடங்குன்று என்றது யானையை. வேல்பாய் நெடுங்கட் கடற்றானையொடும் என்றமையானும் வெற்றிக்கயற் கொடியெடுத்தென வென்றமையானும் ஒருவன் என்றது மன்மதனை யுணர்த்திற்று.()

மீத்தந்த மாகத்து மேகத்தி னூடுமுடு மீனிரியல் போக வுகளும், வெடிவாளை மதியக டுடைத்தூற்று தெள்ளமுத வெள்ளருவி யாற்பருந்தண்,

காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய் காவேரி யாயிரமுகக், கங்கையா கர்செய்து மீட்டுநாற் கோட்டுவெங் களிறு பிளிறத்தாவிவான்,

பூத்தந்த கற்பகக் காட்டினை யுழக்கிவிரி பொற்றுதெழுப்பி யற்றப், பூந்துகட் படலத்தி னாற்றெய்வ நதியையும் பொன்னிநதி யாகச்செயுங்,

தேத்தந்த தண்பணை யுடுத்ததீம் புனனாட சிறுதேருருட்டி யருளே, திருவளர வளர்கந்த புரிவளர் கு..ங்குமர சிறுதே ருருட்டியருளே,

(இ-ள்.) மீதந்தமாகத்து - மேலிடத்துள்ள ஆகாயத்தில், மேகத்தினூடும் —, உடுமீன் இரியல்போக - உடுமீன்கள் ஓட்டெடுக்க, உகளும் - துள்ளுகிற, வெடிவாளை - வெடிவாளைகள்,

மதி அகடு உடைத்து - சந்திரன் வயிற்றைக் கிழித்து, ஊற்று - அங்கிருந்து ஊற்றப்படுகிற, தெள் அமுதம் - தெள்ளிய அமிர்தத்தின், வெள் அருவியால் - வெள்ளிய அருவிப்பெருக்கால், பசு தண் கா தந்த - பசிய தண்ணிய சோலைதந்த, சண்பகப் பூவேரி - சண்பமலர்த் தேனானது, மாரிசெய் - மழைபோலப் பெருகுகிற, காவேரி - காவிரி நதியை, ஆயிரமுகம் - ஆயிர முகங்களையுடைய, கங்கையாகச்செய்து - கங்கையாருகச் செய்து, மீட்டும் - மறுபடியும், நால்கோடு - நான்கு கொம்புகளையுடைய, வெங்களிறு பிளிற - வெவ்விய யானையானது ஒலிக்கும்படி, தாவி - மேலெழுந்து, வான்பூதந்த - மேலான மலர்களைத்தந்த, கற்பகக்காட்டினை உழக்கி - கற்பகக்காட்டையலைத்து, விரிபொன்தாது எழுப்பி - விரிந்த பொன்போலும் மகரந்தத்தை யெழப்பண்ணி, அ - அந்த, பூதுகள் படலத்தினல் - மலர்த்துகட் கூட்டத்தினல், தெய்வ நதியையும் - தேவ நதியையும், பொன்னி நதியாகச்செய்யும் - காவிரிநதியாகப் பண்ணுகிற, தேதந்த - இனிமையைத்தந்த, தண்பணை உடுத்த - தண்ணிய வயல்களால் சூழப்பட்ட, தீ - மதுரமாகிய, புனல் நாட - நீர் நாடனே, சிறுதே —, திருவளர — எ-று.

நாற்கோட்டு வெங்களிறு - ஐராவதம். தெய்வநதி - ஆகாய கங்கை. (அ)

கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங் கற்பகத்
　தும்படர்தலாற், காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள்
　குழுமியக் கமுகின் கழுத்தில்யாத்த,
வொள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
　யுதைந்தாட வாடுந்தொறு, மொண்கமுகொடுந்துணர்ப்
　பைங்கற் பகக்காடு மொக்கவசை யத்தலையசைத்,
தள்ளரிலை யலங்கல்வே லெம்பிரா னைப்பாடி யாடுகின்
　ருரொனத்தா, மலர்மாரி பொழிவபோ லங்கற் பகத்
　தெய்வ மம்பொன்மலர் மாரிதூர்க்கும்,
தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட சிறுதேருருட்
　டியருளே, திருவளர வளர்கந்த புரிவளரிளங்குமர சிறு
　தேருருட்டியருளே.

(இ - ள்.) கள் அவிழ் - தேனோடு மலர்ந்த, நறுகொடிகள் - மணமுள்ள கொடிகள், கமுகில் படர்ந்து - கமுகமரத்தின்மேற் படர்ந்து, பூ - அழகிய, கற்பகத்தும் - கற்பக மரத்தின்மேலும், படர்தலால் - படர்வதனால், காமன் - இந்திரனது, பெருஞ்செல்வம் - பெருஞ் செல்வத்தையுடைய, மன்னவர்கள் குழுமி - அரசர்கள் கூடி, அ - அந்த, கமுகின்கழுத்தில்யாத்த - கமுகமரத்தின் கழுத்திற் கட்டின, ஒள்ஒளிய - ஒட்பமாகிய வொளியையுடைய, செம்மணிபொன் ஊசல் - செம்மணிகளாற் செய்யப்பட்ட பொன்னூசலை, பல்முறை - பலதரமும், உதைந்து ஆட ஆடுந்தொறும் - உதைந்தசைய ஆடுந்தோறும், ஒள்கமுகொடும் - ஒள்ளிய கமுகோடும், துணர் - மலர்க்கொத்துகளையுடைய, பை - பசிய, கற்பகக்காடும் - கற்பகாடவியும், ஒக்க அசைய - கூடவே யசையும்படி, தலையசைத்து - தலையாட்டி, அள் - கூர்மையும், இலை - அச்சவடிவும், அலங்கல் - மலர் மாலையும் கொண்ட, வேல் - வேற்படையையுடைய, எப்பிரானை - எம் மிறைவனை, பாடி ஆடுகின்றார்என - பாடி யாடுவோர்போல, தாம் - தாமும், அலர்மாரி பொழிவபோல் - மலர்மழை சொரிவனபோல, அம் - அழகாகிய, கற்பகத்தெய்வம் - கற்பகத் தெய்வமானது, அம் - அழகையுடைய, பொன் மலர்மாரி தூர்க்கும் - பொன் மலர் மழையால் தூர்க்கின்ற, தெள்ளு - தெளிந்த, தமிழ் - தமிழ்பரவிய, புனல் - நீரையுடைய, திருகாவிரி திருநாட - அழகாகிய காவிரி நாடனே —, சிறுதே —, திருவளர —, எ - று.

கா - கற்பகச்சோலை. மன் - இறைவன். கற்பகச்சோலைக் கிறைவனாதலால் இந்திரனைக் காமன் என்றார். கழுத்து - மேலிடம். யாத்தல் - கட்டுதல். (சு)

வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென மணிமுறுவ
லிலவுகானு, மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் துந்
திரு மடித்தலத் தினிலிருத்திப்,

பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவையின் படிவமாகக்
காட்டியிப், பாலரொடும் விளையா டெனப்பணித் துந்
தங்கள் பார்வைகளி யாடச்செயுங்,

தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த தம்பிரா னுந்தம்
பிரான், றழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையனு யகியும்வைத்துச்,

சிராட்டி விளையாடு சேனு பதிக்கடவுள் சிறுதேருருட்டி
யருளே, திருவளர வளர்கந்த புரிவளரிளங்குமர சிறுதே
ருருட்டியருளே.

(இ - ள்.) வார் ஆட்டு - கச்சணிந்த, தடம் - பெரிய, முலை - முலையினின்றும், பால்ஒழுகி - பாலான தொழுகப்பெற்று, வழி வதுஎன - வழிந்தோடுதல் போல, மணி முறுவல் - முத்துப் போலும் பற்கள், நிலவு உாலும் - நிலவையுமிழ்கின்ற, மழலைவாய் - மழலைச் சொற்களையுடைய வாயினை, முத்துண்டு - முத்தமிட்டும், உச்சி மோந்தும் - உச்சியை மோந்தும், திருமடித் தலத்தினில் இருத்தி - அழகிய மடித்தலத்தினில் வைத்துக்கொண்டு, பாராட்டியும் - அருமை பாராட்டியும், தமது கண்மணிப்பாவை - தமது கண்மணிப் பிரதிமையை, நின்படிவமாகக்காட்டி - உன்னுருவாகக்காட்டி, இ - இந்த, பாலரொடும் - சிறுவரோடும், விளையாடுஎன பணித்தும் - விளையாடென்று நியமித்தும், தங்கள் பார்வை - தமது பார்வைகள், களியாடச்செய்யும் - களிப்பில் மூழ்கப்பண்ணுகிற, தார்ஆட்டும் மதிமுடி - மாலையாகத்தரித்த சந்திரகண்டத்தோடு கூடிய திருமுடியையுடைய, தீராத வினை தீர்த்த தம்பிரானும் —, தம்பிரான் - அந்தத் தம்பிரானது, தழல் உருவில் - நெருப்புருவத்தில், ஒருபாதி குளிர - ஒருபாதி குளிரும்படி, ஒருபுறம் நின்ற - ஒரு பக்கத்தில் நின்ற, தையலுநயகியும் வைத்து சிராட்டி விளையாடு —, சேனுபதிக்கடவுள் - சேனைத் தலைவனாகிய கடவுளே, சிறுதேருருட்டி யருளே—, திருவளர—, எ-று.

முறுவல் மணியென முன்பின்னுக மாறி முறுவல்மணியென் றுரைத்தலுமாம். (௰)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.



